## வளமான எதிர்காலம் —— பாதுகாப்பான முதலீடு

# தமிழக அரசு நிதி நிறுவனமான

# பவர்ஃபைனான்ஸ்

## வழங்கும்

| 13.14% | 18.18% |
|---|---|
| 36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மாதாந்திர வட்டி 13%<br>12 மாதங்கள் & 1 நாளுக்கு 12.12%<br>25 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 12.63% | 60 மாதங்களுக்கு மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டிற்கு 13% |

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

**(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)**

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை – 600 018.

தொலைபேசி : 4997689, 4995648.

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

DIPR/1656/DIS/99

**1999 - தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு.**

# பழம் பெருமை பேசுவதில் பயனில்லை!



இந்த வருடத்து சங்கீத சீசனில், நாலு கச்சேரிகள் பண்ணுகிறார் ராமவர்மா. வயது முப்பத்து ஒன்று. இவருக்கும், மற்ற இசைக் கலைஞர்களுக்கும் ஒரு மாபெரும் வித்தியாசம் உண்டு. ராம்வர்மா, இசைக் கலைஞர்களை, தங்கள் தர்பார் ஹாலுக்கு வரவழைத்து, கச்சேரி செய்யச் சொல்லி ரசித்து, பரிசு வழங்கி கௌரவித்த அரச பரம்பரையைச் சேர்ந்தவர். திருவிதாங்கூர் சமஸ்தானத்து இளவரசர் என்ற சிறப்புக்குரியவர். அரச பரம்பரையில் வந்த ராமவர்மா, தமது குடும்பத்தினரின் ஆரம்ப கால எதிர்ப்புகளையும் மீறி, இசை பயின்றவர். இன்று கச்சேரிகளும் செய்கிறார். இந்த அனுபவம் எப்படியிருக்கிறது? ராமவர்மாவை சென்னை அடையாறில் உள்ள திருவிதாங்கூர் சமஸ்தானத்துக்குச் சொந்தமான 'ராமாலயம்' பங்களாவில் சந்தித்துப் பேட்டி கண்டோம். பேட்டியின் முக்கியமான பகுதிகள் :

"ராஜவம்சம் என்றால், குதிரை ஏற்றம், மற்றும் போர்ப் பயிற்சிகள்தானே பிரதானமாக இருக்கும். திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் மட்டும், இசைக்கு முக்கியத்துவம் எப்படிக் கிடைத்தது? உங்கள் சமஸ்தான மகாராஜா ஸ்வாதித் திருநாள், கிருதிகள் கூட எழுதியிருக்கிறாரே?''

"சுமார் முந்நூறு வருடங்களுக்கு முன் திருவிதாங்கூர் சமஸ்தானத்தை ஆண்டவர் மகாராஜா மார்த்தாண்டவர்மா. மிகச் சிறிய பரப்பு கொண்டிருந்த சமஸ்தானத்தைச் சுற்றி அமைந்திருந்த அரசர்களை வென்று தமது ராஜ்ஜியத்தை விரிவுபடுத்தினார். அதன்பின் பெரிய எதிரிகள் என்று யாரும் இல்லாத காரணத்தால், கலைகளில் அதிக கவனம் செலுத்த ஆரம்பித்தார்.

அதன்பின் பொறுப்பேற்ற பாலராம வர்மா என்ற கார்த்திகைத் திருநாள், பாலராமபாரதம் என்ற பெயரில் பரதநாட்டியம் பற்றி விரிவான புத்தகம் ஒன்று எழுதினார். இப்போது 'மகாராஜா' என்ற பட்டத்துக்குரியவரான மார்த்தாண்ட வர்மா, சண்டைப் பயிற்சி, குதிரை ஏற்றம் எல்லாம் பயின்றவர்.

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

சுதந்தர இந்தியாவில் பிறந்தவன் என்பதால் நான் அதெல்லாம் பயின்றதில்லை."

"மகாராஜா பரம்பரையில் வந்த உங்கள் குடும்பத்தினருக்கு, இன்று சாதாரண இந்தியக் குடிமகனாக வாழ்வது இலகுவாக இருக்கிறதா?"

"எங்களுக்கு முந்தைய தலைமுறைக்குத்தான் இரண்டாம்கெட்டான் நிலை. ராஜ பரம்பரைக்குரிய அதிகாரமும் கிடையாது. சாதாரண குடிமக்கள் போலவும் வாழ முடியாது. ஆனால் எங்கள் தலைமுறைக்கு அந்த அளவுக்குப் பிராப்ளம் இல்லை. ஆனாலும் சங்கடமே இல்லை என்று சொல்ல முடியாது.



இன்டர்வியூவில்– "உன் சமயோசித புத்தியைப் பரிசோதிக்க ஒரு கேள்வி... காட்டில் சென்று கொண்டிருக்கும்போது உன் முன்னால் சிங்கம் வந்தால் நீ என்ன செய்வாய்?"

"நான் என்ன செய்வது, எல்லாம் சிங்கம்தான் செய்யும்!"

– வாசுதேவன்

"பள்ளிக்கூடத்தில் என்னையும், அவர்களைப் போல ஒரு மாணவன் என்று அவர்களால் பார்க்க முடியவில்லை. ஒன்று அரச பரம்பரை, எனவே அகங்காரமாக இருப்பேன் என்று ஒதுங்கியே இருந்தார்கள். அல்லது, நான் அரச பரம்பரையில் வந்தவன் என்பதற்காகவே, என்னுடன் நட்பாக இருப்பதை ஒரு பெருமையாக நினைத்துப் பழகினார்கள். இரண்டுமே எனக்கு மனவருத்தம்தான் தந்தது. என்னை ஒரு மனிதன் என்று யாருமே பார்க்க மறுக்கிறார்களே என்று வருந்தினேன். எனவே, எனக்கு, மிக மிகக் குறைவான எண்ணிக்கையில்தான் சிநேகிதர்கள். நான் ஒரு மனிதனாக இருக்கவே விரும்புகிறேன்.

"சமீபத்தில் இந்து நாளிதழ் வெளியிட்ட இசை பற்றிய ஒரு இணைப்புப் புத்தகத்தில் நான் ஒரு கட்டுரை எழுதினேன். அதில் வெறுமனே 'ராமவர்மா' என்றுதான் பெயர் போட்டுக் கொண்டேன். 'இளவரசர் ஸ்ரீ பத்மநாப தாசா அஸ்வினி திருநாள் ராமவர்மா' என்று முழுப் பெயரையும் பிரகடனப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை."

"என்ன படித்தீர்கள் கல்லூரியில்?"

"உண்மையைச் சொல்லப் போனால், எஸ்.எஸ்.எல்.சிக்கு அப்புறம் எனக்கு மேலே படிக்கவே இஷ்டமில்லை. முழு நேரம் இசையிலேயே செலவிட விரும்பினேன். ஆனால், குடும்பத்தின் வற்புறுத்தல் காரணமாகவே கல்லூரிக்குப் போனேன். பி.காம், அதன் பின் எம்.காம். என்ன காரணம் என்று நீங்கள் கேட்கலாம். பி.காம்., எம்.காம் படித்தால், நிறைய நேரம் படிப்புக்குச் செலவழிக்க வேண்டாம்; என் இஷ்டப்படி இசைக்கு நிறைய நேரம் கிடைக்கும் என்பதுதான் காரணம்! எங்கள் குடும்பத்தில், கலைகளுக்கு முக்கியத்துவம் உண்டு என்பதால், என் பதினாலாவது வயதில், அரண்மனைக்கே வந்து பாட்டு சொல்லித் தர ஆசிரியர் ஒருவர் ஏற்பாடு செய்யப்பட்டார். நானும் ஆர்வத்துடன் முறைப்படி இசை பயின்றேன். ஆனால், நான் முழு நேர வித்வான் ஆவதற்கு குடும்பத்தில் கடுமையான எதிர்ப்பு இருந்தது!"

"என்ன காரணம்?"

"அரண்மனையில், செம்மங்குடி, ஸ்ரீமதி எம்.எஸ். போன்றவர்களையெல்லாம் வரவழைத்து கச்சேரி செய்யச் சொல்லி, அவற்றை ரசித்து அவர்களுக்குப் பரிசுகள் தந்து கௌரவித்த குடும்பமாயிற்றே! அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், பொது இடங்களுக்குப் போய், பொது மக்கள் முன்னால் அமர்ந்து கச்சேரி செய்வது, ராஜ பரம்பரைக்கு இழுக்கு என்று குடும்பத்துப் பெரியவர்கள் கருதினார்கள். அரச பரம்பரையினர் இசை பயில்வது, இசையைப் புரிந்து கொண்டு, ரசிப்பதற்குத்தானே தவிர, பொது இடங்களில் கச்சேரி செய்ய அல்ல என்பது அவர்களது தீவிரமான கொள்கை. அந்த மரபை உடைக்க நான் முயல்வதாக பெரியவர்கள் கருதினார்கள். எனவே அதனைத் தடுத்தார்கள்."

"குடும்ப எதிர்ப்புகளை எப்படிச் சமாளித்து மேடை ஏறினீர்கள்? எங்கே? எப்போது?"

"அதற்கு முழு முதற்காரணம் என்று பிரபல கர்நாடக வித்வான் எம்.டி. ராமனாதனைத்தான் குறிப்பிடுவேன். திருவனந்தபுரத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் ஒன்பது நாள் நவராத்திரி உற்சவத்தின் போது தவறாமல் அவரது கச்சேரி நடக்கும். அவரது

அமைதியான தோற்றம், அபாரமான புலமை இரண்டும் என்னைப் பைத்தியமாகவே ஆக்கி விட்டது. அதுவே, இசை மீதான என் காதலை அதிகரித்தது. இசை பயில வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டியது. அரண்மனையிலேயே எனக்கு இசை வகுப்பும் நடந்தது. நானும் சுமாராகப் பாடக் கற்றுக் கொண்டேன்.

"ஒருமுறை அரண்மனைக்கு வந்திருந்த பிரபல ம்ருதங்கம், வாய்ப்பாட்டு வித்வானான டி.வி. கோபாலகிருஷ்ணன், என் பாட்டைக் கேட்டு விட்டுப் பாராட்டினார். அத்துடன் விட்டுவிடவில்லை. குடும்பத்தின் பெரியவர்களிடம், மிக அற்புதமாகப் பாடுகிற ராமவர்மா, பொது மக்கள் முன்னிலையில் கச்சேரி செய்ய வேண்டும் என்றார். ஆனால் அதைப் பெரியவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் இரண்டரை வருட காலம் தொடர்ந்து முயற்சி செய்து ஒரே ஒரு கச்சேரி செய்வதற்கு மட்டும், அவர்களின் அனுமதி பெற்றார். நவராத்திரி உற்சவத்தின் போது சுவாதித் திருநாள் சங்கீத சபாவில், டி.வி.ஜி.யே ம்ருதங்கம் வாசித்தார். நான் அரங்கேறினேன். இத்துடன் போதும். இனி கச்சேரி செய்யக் கூடாது என்று சொல்லி விட்டனர். மறுபடி டி.வி.ஜி., திருவனந்தபுரத்தில் கச்சேரி செய்தால் போதுமா? சென்னையில், நான் நடத்துகிற இசை விழாவில் ஒருதரம் பாட வேண்டும் என்றார். வழக்கம் போலவே அனுமதி கிடைக்கவில்லை. பெரும் முயற்சிக்குப் பின் அரண்மனை பச்சைக் கொடி காட்டியது. நாரதகான சபாவில் கச்சேரி. டி.வி.ஜி. ம்ருதங்கம்; டி.என். கிருஷ்ணன் வயலின்!"

"திருவனந்தபுரம் மற்றும் சென்னை நிகழ்ச்சிக்கு வரவேற்பு எப்படி இருந்தது?"

"விமர்சகர்கள் பாராட்டினார்கள். ஆனால் பொதுவாக, அரச பரம்பரை என்பதால் பத்திரிகைகள் அளவுக்கு மீறி பப்ளிசிட்டி தருவதாக பலர் முணுமுணுத்தனர். சென்னையிலும் விமர்சனங்கள் நல்லபடியாகவே இருந்தன. சென்னை நிகழ்ச்சி முடிந்ததும், டி.வி.ஜி. எனக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் தந்தார். எனக்கு ஏற்றுக் கொள்ளத் தயக்கம். காரணம், 'காசு வாங்கிக் கொண்டு கச்சேரி பண்ணுவது கூடவே கூடாது; ராஜ கௌரவம் என்ன ஆவது?' என்பது குடும்பத்தினரது கருத்து. ஆனால் டி.வி.ஜி. 'இது உன் கச்சேரிக்கான சன்மானம் இல்லை. உனது இசை யார்வம் காரணமாக, கால, நேரம் பார்க்காமல் சாதகம் பண்ணினாயில்லையா, அதற்குத்தான் இந்த மரியாதை' என்று சொல்லி விட்டார்."



''பக்கத்து வீட்டு பாலு நம்ம பொண்ணுகிட்ட வம்பு பண்றான்!''

''என்ன பண்றான்?''

''உன்னோட கல்யாணம் வரைக்குமாவது என்னைக் காதலிச்சால் என்னன்னு கேட்கறானாம்!''

– அம்பை தேவா

"ஆக, உங்களைப் பொறுத்தவரை இசை என்பது ஆன்மதிருப்திக்காகத்தான்! பணத்துக்காக இல்லை! அப்படித்தானே?"

"பூர்வஜென்ம புண்ணியத்தின் காரணமாகத்தான், எனக்கு இசை கற்கிற பாக்கியமே கிடைத்திருப்பதாக நான் கருதுகிறேன். பணம் தான் முக்கியம் என்றால், சிரமப்பட்டு, சங்கீதம் பயில வேண்டிய அவசியமில்லையே? எங்கள் குடும்பத்தினரின் எக்ஸ்போர்ட் பிசினஸிலேயே நானும் ஈடுபட்டு, சம்பாதித்துக் கொள்ளலாமே! கச்சேரி செய்யும் இடங்களுக்குப் போய் வர ஆகும் செலவு, கச்சேரிகளில் எனக்குத் தரப்படும் சன்மானத்தை விட அதிகம். இதிலிருந்தே நான் பாடுவது ஆன்மதிருப்திக்காக என்று புரிந்து கொள்ளலாம். அண்மையில் லண்டன் சென்று கச்சேரி செய்ய வாய்ப்புக் கிடைத்தது. கச்சேரி முடிந்தவுடன், முன்பின் தெரிந்திராத புதிய ரசிகர்கள், எழுந்து நின்று கைதட்டிப் பாராட்டியது என் இசைத் திறமைக்கு மட்டும்தான்! நான் மெய்சிலிர்த்துப் போனேன்! முதல் தடவை வேண்டுமானால் நான் இளவரசன் என்பதற்காகப் பாட வாய்ப்புத் தரலாம். பழம்பெருமை பேசிக் கொண்டு நாளைக் கடத்துவதில் எனக்கு இஷ்டமில்லை. உழைத்தேன். திறமையை வளர்த்துக் கொண்டேன். மறுபடி, மறுபடி பாட அழைத்தால் அதற்கு என் திறமைதானே காரணமாக இருக்க முடியும்?"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# அத்வானியை ஓரங்கட்டும் வாஜ்பாய்?

**வா**ஜ்பாய் – அத்வானி உறவு என்பது வெளியில் சகஜமாகத் தெரிந்தாலும் உள்ளுக்குள் புகைந்து கொண்டுதான் இருக்கிறது. அத்வானியை ஓரங்கட்டுவதற்கான எல்லா ரகசிய வியூகங்களையும் வாஜ்பாய் அமைத்து வருகிறார் என்பதுதான் கட்சியின் உள் வட்டத்தில் ஒரே பேச்சாக இருக்கிறது.

பாபர் மசூதியை இடித்த வழக்கில் அத்வானியும் குற்றம் சாட்டப்பட்டிருப்பதால், அவர் தமது உள்துறை அமைச்சர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும் என்று காங்கிரஸும் பிற எதிர்க்கட்சிகளும்



நாடாளுமன்றத்தில் எழுப்பிய கோஷத்துக்குப் பின்னால், வாஜ்பாயின் தூண்டுதல் இருக்கிறது என்றே கட்சிக்காரர்கள் கருதுகிறார்கள். இந்தப் பிரச்னை விவாதத்துக்கு வருவதற்கு முந்தைய தினம், 'தேர்ந்தெடுக்கப்பட்ட' மூன்று பி.ஜே.பி. உறுப்பினர்கள் சோனியாவைச் சந்தித்து, "அத்வானியை நெருக்குங்கள்!" என்று வாஜ்பாய் சார்பில் கேட்டுக் கொண்டதாகச் செய்திகள்!

இதன் காரணமாகவே, அத்வானியின் ராஜினாமாவை காங்கிரஸும் பிற எதிர்க்கட்சியினரும் கோரிய அன்று பிரதமர் அவைக்கு வரவில்லை என்றும் சொல்கிறார்கள். அதனால், எதிர்க்கட்சியினரின் வியூகத்தில் சிக்கிக் கொண்டு தவியாய்த் தவித்தார் அத்வானி. தமது நாற்பதாண்டு கால அரசியல் வாழ்வில் எத்தனையோ பிரச்னைகளில் மிகவும் உறுதியுடன் செயல்பட்ட அத்வானி அன்று மிகவும் அதிர்ந்து போனவராகக் காணப்பட்டார்.

அன்று மாலையிலேயே அத்வானிக்கு எதிராக ஒரு சூழ்ச்சிக் கூட்டம் நடந்தது. அதில் முன்னின்று செயல்பட்டவர், அத்வானியால் அரசியல் அந்தஸ்து பெற்று, இன்று மத்திய அமைச்சரவையில் அமைச்சராகியிருக்கும் இளைய தாதா ஒருவர்தான் என்பதையறிந்ததும் மேலும் அதிர்ந்தார் அத்வானி.

மறுநாள் அவைக்கு வந்த பிரதமர், அத்வானி மீதான குற்றச்சாட்டுக்குப் பதிலளிக்கத் துவங்கியபோது, அத்வானியைப் பாதுகாப்பதற்கான எந்தவித வியூகமும் இல்லாமல்தான் பதிலளித்தார்.

இதையுணர்ந்த அத்வானி, அவையிலேயே ஒரு பேப்பரை எடுத்து எழுதத் துவங்கினார். அவருக்கருகில் அமர்ந்திருந்த மனித வள மேம்பாட்டுத் துறை அமைச்சரான முரளி மனோகர் ஜோஷியும் அத்வானி எழுதுவதைப்

பார்த்துத் தாமும் எதையோ எழுதினார். பிறகு தாம் எழுதியதை அத்வானியிடம் காண்பிக்க, அதில் ஏதோ திருத்தம் சொன்னார் அத்வானி. பிறகு இருவரும் தங்கள் காகிதங்களைப் பிரதமரிடம் கொடுக்க, "இந்த ராஜினாமாக்களை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்!" என்று அவையில் அறிவித்தார் பிரதமர். இருந்தாலும் அதில் ஓர் அழுத்தம் இருந்ததாகத் தெரியவில்லை.

விஷயம் அத்தோடு முடிந்து போய்விடவும் இல்லை. அவை கலைந்து வெளியில் வந்த அத்வானியிடம் நிருபர்கள் கேட்டபோது, "பிரதமரைக் கேளுங்கள்!" என்றார். அதன்படியே பிரதமரிடம் கேட்டபோது, "அவர்கள் தங்கள் ' ராஜினாமாவை வற்புறுத்த மாட்டார்கள் என்று நம்புகிறேன்!" என்ற பிரதமரின் சாதாரணமான பதில் பத்திரிகையாளர்களையே ஆச்சரியப்பட வைத்தது. காரணம், அப்போதும் அத்வானி சார்பில் பிரதமர் உறுதியோடு பேசவில்லை என்பதுதான்.

இதெல்லாம் அத்வானியை மட்டுமல்ல; பி.ஜே.பியினரையே அதிர்ச்சிக்குள்ளாக்கியிருக்கிறது என்பதுதான் உண்மை. கட்சியின் உள் வட்டங்களில் இது பற்றிய சந்தேகங்களையும் பயங்களையும் தங்களுக்குள் பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள். முன்பு பி.ஜே.பி. ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு வெளியிலிருந்த அ.தி.மு.க.தான் காரணமாக இருந்தது. இப்போதோ, வெளியில் எந்தவிதமான நிர்ப்பந்தமும் இல்லாத நிலையில், உள்கட்சி கோஷ்டியிலேயே கட்சிக்கு ஆபத்து வந்து விடுமோ என்று கவலைப்படுகிறார்கள்.

"வாஜ்பாயின் அரசியல் சரித்திரம் எப்போதுமே துரோகங்கள் நிறைந்தது. எந்தவொரு போராட்டத்திலும் முன்னிற்காதவர் வாஜ்பாய். பிறர் போராட அதன் பலனை மட்டுமே அனுபவிப்பவர். தம் மீது கிரிமினல் வழக்கு வந்தாலும் ரத யாத்திரை நடத்தி கட்சியை ஒரு பெரியக்கமாக மாற்றினார் அத்வானி. அதில் கலந்து கொள்ளக் கூடச் செய்யாத வாஜ்பாய் இன்று பிரதமராகி விட்டார். அதுபோல் அவசர நிலைக் காலத்தில் இந்திராகாந்திக்கு மன்னிப்புக் கடிதம் எழுதி ஜெயிலுக்குப் போகாமல் தப்பித்துக் கொண்டவர். அத்வானியும் பிறரும்தான் சிறையில் வாடினார்கள்!" என்றெல்லாம் வாஜ்பாய்க்கு எதிராகக் கல்யாண்சிங் அறிக்கை விட்டபோது, "அவையெல்லாம் கட்சியிலிருந்து நீக்கப்பட்ட ஒருவரின் தவறான கருத்துக்கள்!" என்று அதை எதிர்த்து அத்வானியும் மிக சாதாரணமாகத்தான் மறுப்பறிக்கை வெளியிட்டார்.

கல்யாண்சிங் நீக்கப்பட்டபோது, "அது மிகவும் துர்ப்பாக்கியமானது!" என்று அத்வானியின் சிஷ்யையான சுஷ்மா ஸ்வராஜ் சொன்னதிலும் மறைமுகமான வாஜ்பாய் எதிர்ப்பு இருப்பதாகத்தான் வாஜ்பாய் ஆதரவாளர்கள் கருதுகிறார்கள்.

இந்த நிழல் யுத்தம் தொடர்ந்து கொண்டேயிருந்தால் இறுதியில் என்னதான் நடக்கும்? "நிச்சயமாக அத்வானியை ஓரங்கட்டி விடுவார் வாஜ்பாய்!" என்றார், டெல்லி வந்திருந்த கல்யாண்சிங் நம்மிடம்!

— வெங்கட்



# மூன்று வங்கிகளை மூடிவிட்டால் ஐம்பதாயிரம் கோடி திரும்ப வருமோ?



'மூன்று வங்கிகளை இழுத்து மூடி விடுவது நல்லது' - இந்த அதிரடி கருத்தைத் தெரிவித்திருப்பது சி.ஐ.ஐ. என்ற இந்தியத் தொழில் நிறுவனங்கள் கூட்டமைப்பு நிறுவிய ஒரு குழு. 'நேஷனல் டாஸ்க் ஃபோர்ஸ்' என்று இந்தச் சிறப்புக் குழுவுக்குப் பெயர்!

இந்தியன் வங்கி, யுனைடெட் கமர்ஷியல் வங்கி, யுனைடெட் பாங்க் ஆஃப் இந்தியா ஆகிய மூன்று மட்டுமே இக் குழுவின் 'கருணா கடாட்சத்துக்கு' உள்ளாகியிருக்கின்றன. சொல்லப்பட்டிருக்கும் காரணம் : இவை நஷ்டத்தில் இயங்குகின்றன என்பது!

மூன்றாண்டுகளுக்கு முன் இந்தியாவிலுள்ள வங்கிகளில் மொத்தமாக வசூலாகாத கடன் தொகை ரூ. 40,000 கோடியாக இருந்தது.

இன்று அதுவே 50,000 கோடியாக உயர்ந்து விட்டது! இதைக் கண்டு கவலை தாளாமல்தான் சிஐஐ களத்தில் குதித்து ஆராய்ச்சி செய்தது.

'வங்கிகள் பெரும்பான்மைத் தொகையைத் தொழில் முனைவோருக்கும் தொழிலதிபர்களுக்கும்தான் கடனாகத் தருகின்றன. இத்தகைய தொழில் நிறுவனங்களின் கூட்டமைப்பு, வாங்கிய கடனை முறையாகத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்று தொழில் நிறுவனங்களை வலியுறுத்தாமல், வங்கிகளை மட்டும் இழுத்து மூடச் சொல்வது என்ன நியாயம்? மூட்டைப் பூச்சிக்கு பயந்து வீட்டைக் கொளுத்தும் கதையாக இருக்கிறதே!' என்று பலமாக எதிர்ப்புக் குரல் எழுப்பியிருக்கிறார் இந்தியன் வங்கியின் பொது மேலாளர்.

வசூலாகாத மொத்த கடன் தொகை 50,000 கோடி என்பதைப் பார்த்தோம். இதில் இந்தியன் வங்கியின் பங்கு 3100 கோடி. மற்ற இரு வங்கிகளின் வசூலாகாத கடன் தொகை ரூ. 4500 கோடி என்று தெரிகிறது. ஆக, இந்த மூன்று வங்கிகளை மட்டும் மூடுவதால் 50,000 கோடி வசூலாகி விடுமா அல்லது இதர வங்கிகளின் பிரச்னைகள் தீருமா?

உண்மையில் பிரச்னைகள் அதிகரிக்கத்தான் செய்யும்! ஒரு வங்கியை மூட வேண்டுமானால் அதன் சொத்துக்களை விற்று பணியாளர்களுக்கு நஷ்டஈடு கொடுத்து வீட்டுக்கு அனுப்ப வேண்டும். அதன் டெபாஸிட்களை வேறு வங்கிக்கு மாற்ற வேண்டும். இதனால் வாடிக்கையாளர்களுக்கும் சிரமம்.

சிஐஐ நிறுவிய குழு, அரசாங்க அதிகாரம் பெற்றது அல்ல. அதன் கருத்தை பலமான சிபாரிசு என்று ஏற்க வேண்டிய கட்டாயமும் அரசுக்கோ வங்கிகளுக்கோ கிடையாது. ஆனால் இப்படியொரு கருத்து தெரிவிக்கப்பட்டு, செய்தியிலும் பலமாக அடிபடும்போது, வாடிக்கையாளர்கள் கலவரமடைந்து தங்கள் டெபாசிட்களை அந்த வங்கிகளிடமிருந்து எடுத்து விடவே விரும்புவார்கள். இதனால் சம்பந்தப்பட்ட வங்கியின் இயக்கம் ஸ்தம்பித்துப் போய்விட வாய்ப்பிருக்கிறது.

இந்தியன் வங்கி சென்னையில் இருப்பதால் தமிழர்கள் அதிகம் பாதிக்கப்படும் நிலைமை ஏற்பட்டுள்ளது. பொது மக்கள் இந்த வங்கியில் டெபாஸிட் செய்துள்ள தொகை பதினெட்டாயிரம் கோடி ரூபாய். இதில் பத்தாயிரம் கோடி தொழில் முன்னேற்றக் கடனாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கடந்த காலத்தில், கடன் பெறுவோரைச் சரியாக எடை போடாமல் தகுதியற்ற பலருக்குக் கடன் தந்து கையைச் சுட்டுக் கொண்டது இந்த வங்கி. ஆனால் கடந்த மூன்று ஆண்டுகளில் அரசிடம் நிதியுதவி பெற்றும் கடன் வசூலில் நிறைய கவனம் செலுத்தியும் (300 கோடி வசூல் ஆகியிருக்கிறது) தனது நிலைமையில் முன்னேற்றம் கண்டிருக்கிறது.

வெண்ணெய் திரளும் நேரத்தில் தாழியை உடைத்த கதையாக வந்திருக்கும் சிஐஐ செயல்பாட்டுக் குழுவின் கருத்து சில வங்கிகளை மட்டும் தனிமைப்படுத்திக் குறிபார்ப்பது ஏன் என்பதுதான் புரியாத புதிர்!

— வி. கோபாலன்

# "இனி ரசிகர்களை வளர்க்க வேண்டும்!"

**கலைஞர் – ரசிகர் – சபா என்றிருந்த முக்கோண உறவமைப்பு, கடந்த பத்து – பன்னிரண்டு ஆண்டுகளாக 'ஸ்பான்ஸர்' என்ற நான்காவது நபரின் வரவால் ஒரு செவ்வக உறவமைப்பாக மாறியிருக்கிறது. நான்கு பேருள் பொருளாதார வலிமை அதிகம் படைத்தவர் ஸ்பான்ஸர்தான் என்பதால் உறவமைப்பில் மாற்றம் ஏற்பட்டுள்ளதா...? இந்தக் கலந்துரையாடலில் ஆராய்வோர் ஆர். சேஷசாயி (மானேஜிங் டைரக்டர் அசோக் லேலண்ட்), ராமசந்திரன் – (செயலர் ஹம்சத்வனி சபா), வித்வான்கள் – சந்தானகோபாலன், பாம்பே ஜெயஸ்ரீ.**

***ரா**மசந்திரன் : ஒவ்வொரு வருஷமும் சங்கீத சீசன் ஆரம்பிக்கிற போது ஸ்பான்ஸர்ஷிப் விஷயத்தை அரசியலாக்குவது பத்திரிகைகள்தான் – மீடியாதான்! அரசியலில் பரபரப்பு எதுவுமில்லையென்றால் சங்கீதத்தை அரசியலாக்கிவிட வேண்டியது! நானும் மீடியாவிலிருந்தவன்தான் – (ஹிந்து) அதனால்தான் சொல்கிறேன். ஒரு விஷயத்தை எல்லோரும் தெளிவாகப் புரிந்து கொள்ள வேணும். இன்றைய நிலைமையில், ஒரு சபாவுக்கு நிறைய உறுப்பினர்கள் இருந்தாலும், ஸ்பான்ஸர் உதவியில்லாமல் கச்சேரிகள் நடத்த முடியாது. அதனால்தான் சபாக்காரர்கள் ஸ்பான்ஸர்களைத் தேடிப் போகிறார்கள். ஆனால் ஸ்பான்ஸர் செய்யத் தயாராயிருப்பவர்கள் கொஞ்சம் யோசித்துச் செயல்பட்டால் நல்லது. ஏற்கெனவே நல்ல வசதியாயுள்ள சபாக்களுக்கு ஆதரவு தேவையில்லை. சில பெரிய ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவற்றின் பெயரை நான் சொல்லவே தேவையில்லை. எல்லாரும் அவற்றுக்கே போட்டி போட்டுக் கொண்டு ஸ்பான்ஸர் செய்கிறார்கள்... ஆனால் சங்கீத வித்வான்கள் ஸ்பான்ஸர்ஷிப்பினால் அடைந்திருக்கும் ஆதாயங்கள் கொஞ்ச நஞ்சமில்லை. They have never had it so good.

**ஜெயஸ்ரீ** : 'ஸ்பான்ஸர்ஷிப்' என்கிற யோசனை வந்தது ஒரு பெரிய திருப்பு முனைதான். அதற்கு நாங்கள் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறோம். சபாக்களும் கடமைப்பட்டிருக்கின்றன. ரசிகர்களும் கூடத்தான். மூன்று தரப்புக்கும் சங்கீதத்தைக் கட்டுபடியாகிற விஷயமாகச் செய்திருப்பது ஸ்பான்ஸர்ஷிப்தான். ஆனால் இப்போது பரா பரியாக அடிபடுகிற கேள்வி என்னவென்றால் 'ஸ்பான்ஸர்ஷிப் மூலம் கிடைக்கிற ஆதாயத்தில் ஒரு சரியான சதவிகிதம் வித்வான்களுக்குப் போய்ச் சேருகிறதா?' என்பதுதான்.



• ராமசந்திரன்

**கல்கி**: சபா கச்சேரிகளை நம்பி வித்வான்கள் வாழ்க்கை நடத்த முடிகிறதா?

**ஜெயஸ்ரீ** : இப்படித் தனிப்பட்டு ஒரு கேள்வி கேட்பது சரியல்ல என்று தோன்றுகிறது.. வாழ்க்கை நடத்துவது என்பது வெறுமே ஜீவனம் மட்டுமல்ல; சபாக்களில்



• கலந்துரையாடல்

பாட வேண்டும் என்கிற முதன்மை நோக்கம் எல்லா வித்வான்களுக்கும் இருக்கிறது. அந்த கௌவரத்தையும் பெருமையையும் உள்ளடக்கியது தான் அவர்களுக்கு முழுமையான வாழ்க்கையாக இருக்க முடியும்.

**கல்கி** : அதனால் கொடுக்கிற சன்மானத்தைப் பொருட்படுத்தாமல் ஏற்க வேண்டியிருக்கிறது என்கிறீர்களா?

**ஜெயஸ்ரீ** : அப்படியில்லை. எங்கள் இசை வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் சபாக்களுடன் எங்கள் தொடர்பு விடுபட்டுப் போகாமலிருப்பது ரொம்ப முக்கியம்.

**கல்கி** : இந்த நிலைமையை சபாக்கள் தவறாகப் பயன்படுத்திக் கொள்ளலாமல்லவா? என்ன கொடுத்தாலும் கௌரவத்துக்காக, தொழில்ரீதியான முன்னேற்றத்துக்காக இங்கே பாடி விடுவார்கள் என்ற எண்ணத்தில் செயல்படலாம் இல்லையா...?

**ஜெயஸ்ரீ** : இந்த சந்தேகம் ஊர்ஜிதப்பட வேண்டுமானால் ஆதாரம் தேவை. இப்போதைக்கு எங்களுக்குப் பல விஷயங்கள் தெரியாது. ஸ்பான்ஸர்கள் என்ன தொகை தருகிறார்கள்; பராமரிப்பு, இதர செலவுகளுக்கு எவ்வளவு வேண்டும். சபாக்களிலுள்ள வசதிகளை – உதாரணமாக மைக் – சவுண்ட் சிஸ்டம் இவற்றை மேம்படுத்த எத்தனை செலவிட வேண்டும்...? இதற்கெல்லாம் என்ன செய்கிறார்கள்..? இத்தனை விவரங்களும் தெரியாது. ஆனால் எல்லோருக்கும் மனத்தில் ஒரு சந்தேகம் மட்டுமிருக்கிறது...

**சந்தானகோபாலன்** : ஸ்பான்ஸர்ஷிப் என்பது ஆரம்பத்திலிருந்தே உண்டு. ராஜ சபையில் போய்ப் பாடிய வித்வான்கள், ராஜா என்ன சன்மானம் செய்வார் என்று தெரிந்து பாடவில்லை. இப்போது சங்கீதக்காரர்களுக்கு வேலை அதிகமாகி விட்டது. எந்த சபாவில் எவ்வளவு கொடுக்கிறார்கள் என்று யோசிக்க ஆரம்பித்தால் மனத்தின் மேன்மைக்குக் குறைவு ஏற்படுகிறது. இதெல்லாம் இசைக் கலைஞர்களின் வேலை அல்ல என்பது என் அபிப்பிராயம். சபா நடத்துகிறவர்களும் சரி, பாடுவோரும் சரி... பெரும்பாலும் இந்த உயர்ந்த கலையைப் பரப்ப வேண்டும், ஆத்ம திருப்தியை அனுபவிக்க வேண்டும், அந்த ஆத்ம திருப்தி நிறைய மக்களைச் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்தில்தான் செயல்படுகிறார்கள். தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணும் ஒரு சிலர் மட்டுமே விதிவிலக்கு. அனேகமான சபாக்களில் கலை, கலைஞர்கள் இருவருக்குமே மதிப்பு உண்டு.



• சேஷாயி



• பாம்பே ஜெயஸ்ரீ



• சந்தான கோபாலன்

**சேஷசாயி** : இதுவரை பேசப்பட்ட விஷயங்களைப் பார்க்கையில் பெரிய அளவில் பிரச்னை எதுவுமின்றி சபா – ஸ்பான்ஸர் – கலைஞர் உறவு மகிழ்ச்சிகரமாக இருப்பதாகவே தோன்றுகிறது. சந்தானகோபாலன் இந்தத் துறையை ஒரு ஆன்மிக உயரத்துக்கே கொண்டு போய்விட்டார்! நல்லது! ஆனால் ஆத்ம திருப்தி ஒரு பக்கம் இருக்க, தொழில்ரீதியான கலைஞர்கள் நிறையப் பேர் முன்வரும் போதுதான் நமது இசை பரவலாக வளரும் என்று நினைக்கிறேன். அதனால்தான் நாங்கள் ஸ்பான்ஸர்ஷிப் தொகை வழங்க ஆரம்பித்த நாட்களில் சில

தகுதியுள்ள இளம் வித்வான்களைக் குறிப்பிட்டு அவர்களுள் யாருக்கேனும் ஓரிருவருக்கு வாய்ப்புத் தரும்படி கேட்டுக் கொண்டோம். இது நல்ல பலனையும் அளித்தது.

**ராமசந்திரன்** : இதைப் போன்ற நியாயமான கோரிக்கைகள் சபாக்களுக்கு ஸ்பான்ஸர்களிடமிருந்து வந்தால் மகிழ்ச்சியுடன் அவற்றை ஏற்கிறோம். அநியாயமான சிபாரிசுகள், வற்புறுத்தல்கள் ஸ்பான்ஸர்களிடமிருந்து வருவதில்லை.

**சேஷசாயி** : ஸ்பான்ஸர்கள் யாருமே பணம் கொடுப்பதால், தங்கள் நிறுவனத்துக்கு விளம்பரம் கிடைக்கும் என்ற லாப நோக்கில் செயல்படுவதில்லை. ரசிகர் கூட்டம் வளர வேண்டும்; தொழில் முறைக் கலைஞர்கள் இத்துறைக்கு வரவேண்டும். இளைஞர்கள் புகாத எந்தத் துறையும் நலிந்து போய்விடும். இளைஞர்களை வரவழைக்க வேண்டுமானால் அவர்கள் தரமான வாழ்க்கை நடத்தும் அளவுக்குச் சன்மானம் தர வேண்டும். இந்த நோக்கில்தான் ஸ்பான்ஸர்ஷிப் ஆரம்பித்தோம். இந்த நோக்கம் பெருமளவுக்கு நிறைவேறியுள்ளது என்பது இன்று இசையுலகில் பிரகாசிக்கும் இளைஞர்களைப் பார்த்தாலே தெரியும்.... ஆனால் ரசிகர் வட்டம் விரிவடைந்திருக்கிறதா என்று பார்த்தால் அது ஸ்பான்ஸர்கள் நினைத்த அளவுக்கு நடக்கவில்லை. திரும்பத் திரும்ப சென்னையில் நாற்பதாயிரம் பேர்தான் எல்லா கச்சேரிகளுக்கும் போகிறார்கள். திருவாரூரில் மும்மூர்த்திகள் விழா நடத்தினால், வருகிற ரசிகர்கள் சில சென்னைவாசிகள்தான்! உள்ளூர்க்காரர்களல்ல... இந்த நிலைமை குறித்து சிந்தித்து மாற்ற முயற்சி செய்ய வேண்டும். ஒருமுறை திருச்சியில் எங்கள் நிறுவனம் இசை விழா நடத்தியது. அனுமதி இலவசம் – வெற்றிகரமாகவே நடந்தது. வளர்ந்து வரும் கலைஞர்களைக் கொண்டு ரசிகர்கள் வட்டத்தை விரிவடையச் செய்ய வேண்டியதுதான் இனி ஸ்பான்ஸர்களின் பொறுப்பு. அதோடு இசைக் கலையின் தரத்தை உயர்த்தி, பல பரிமாணங்களில் அது வளர்ச்சியுற வாய்ப்பு ஏற்படுத்தித் தரலாம். புதிய முயற்சிகள், நூதன நிகழ்ச்சிகளுக்கு ஆதரவு தரலாம்....

**சந்தானகோபாலன்** : ஆமாம். கலை வளர்ச்சி என்பது ரசிகர் வட்டமும் சேர்ந்து வளரும் போதுதான் முழுமையாயிருக்கும்.

**கல்கி** : ஸ்பான்ஸர்ஷிப் காரணமாக கச்சேரி வாய்ப்புகள் சற்று மிதமிஞ்சிப் பெருகி விட்டது; அதனால் பயிற்சிக்கும் வளர்ச்சிக்கும் போதுமான கவனம் தரப்படுவதில்லை என்பது பற்றி...

**சேஷசாயி** : இது உண்மைதான்.

**ஜெயஸ்ரீ** : யோசிப்பதற்கு இடைவெளி கிடைக்காமல் கச்சேரிகள் வரத்தான் செய்கின்றன.

**சேஷசாயி** : ஆனால், அதனால் கலைஞர்கள் வளராமல் தேக்கமடைந்து விடுவதில்லை. இன்றைய இளைஞர்களின் ஆற்றலும் ஆக்கத்திறனும் பிரமிப்பூட்டும்படியிருக்கின்றன. அவர்களுக்கு முந்தைய தலைமுறையினரைக் காட்டிலும் சிறப்பானவர்களாக, சரக்குள்ளவர்களாக இருக்கிறார்கள்.

**கல்கி** : அப்படியானால், சன்மானம் போதவில்லை என்று அவர்கள் குறைபட்டுக் கொள்ளும் நிலை ஏன்...? இந்த விவாதத்தில் அக்கருத்து தெரிவிக்கப்படவில்லையென்றாலும் தனிப்பட்ட முறையில் பலர் அந்த ஆதங்கத்தை வெளிப்படுத்தவே செய்கிறார்கள்.

**சேஷசாயி** : அப்படி என்னிடம் வந்து பேசுவோரிடம் நான் என்ன சொல்கிறேன் தெரியுமா...? நீ குறை கூறும் அந்த சபாவைப் போய்ப் பார்.... நாற்காலிகள், மைக் சிஸ்டம் எப்படியிருக்கிறது.... எல்லாம் முன்னேறியிருக்கிறதா...? என்று கேட்கிறேன். எந்த வித்வானுமே உரிய மதிப்புப் பெறாத இடத்தில் போய்ப் பாடிவிட மாட்டார்.

**ராமசந்திரன்** : சபாக்களின் பாலன்ஸ் ஷீட்டைப் பார்த்தாலே தெரியுமே, அவர்கள் கொடுக்கும் தொகை நியாயமானதா இல்லையா என்று...

**சந்தானகோபாலன்** : ஒரு கலைஞன் தொடர்ந்து பாடிக் கொண்டேயிருக்க வேண்டும் என்பதுதான் எல்லாவற்றையும் விட முக்கியம். மதுரை மணி தினமும் மாலை நேரம் வந்தால் எங்கேயாவது போய்ப் பாடியாக வேண்டும் என்று கொள்கை மாதிரியே வைத்திருந்தார் என்பார்கள். பட்டி தொட்டிக்கெல்லாம் சங்கீதத்தை எடுத்துச் சென்றவர் அவர்தான். முடிந்தால் அந்தக் கொள்கையைப் பின்பற்றலாமே?

**சேஷசாயி** : மொத்த கணக்கில் பார்த்தால் இசையின் தரம் குறைந்து விடவில்லை. நல்ல வளர்ச்சியும் இருக்கிறது. கலைஞர்கள் எண்ணிக்கை போல் ஸ்பான்ஸர்கள் எண்ணிக்கையும் பெருகுகிறது. மேலும் பெருகும். ஆகவே, இங்கேயிருந்து அதை மேலும் முன்னேற்றுவது பற்றித்தான் எல்லோருமே சிந்திக்க வேண்டும்.

— **நமது நிருபர்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

**வர்த்தமானன் பதிப்பகத்தின் வரவேற்பும் வாழ்த்தும்!**

வருக 2000; சிறந்து விளங்குக 2000

**கையடக்கப் பதிப்பில் கை வண்ணம் மிக்க இரு நூல்கள்!**

**நாலடியார் இலவசம், சிலப்பதிகாரம் வாங்கினால்!**

இவற்றின் உரையாசிரியர் : **பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் எம்.ஏ.,**



இளங்கோவடிகள் அருளிய

# சிலப்பதிகாரம்

மூலமும் உரையும்

பக்கம் 508 **ரூ. 40**

# நாலடியார்

மூலமும் உரையும் பக்கம் 176

(இலவசம்)



**புதுப்பொலிவுடன் 2000 ஆவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் மிகச் சிறந்த பெருங்காப்பியம், சிலப்பதிகாரம். இந்த இரண்டாயிரமாவது ஆண்டில் பொதுமக்களால் மிகப் பெரிய வரவேற்பினைப் பெறப் போகும் பேரிலக்கியம், இது!**

**அப்படி இதில் என்ன சிறப்பு?**

ஒருபக்கம் பாடல் வரிகள் - எதிர்ப்பக்கம் உரை! இடப் பக்கத்தில் பாட்டு வரி எங்கே முடிகிறதோ அதுபோல, வலப்பக்கத்தில் அதன் உரையும் முடியும். **இஃதோர் சிறப்பு!** நெஞ்சை அள்ளும் வகையில் ஆங்காங்கே உரைப்பகுதியில் சிறு சிறு தலைப்புகள். **இஃதோர் சிறப்பு!** ஒரு நாவல் படிப்பதுபோல் இதன் உரைநடைப் பகுதியை விரைந்து படித்து முடிக்கலாம். **இஃதோர் சிறப்பு!**

**இதற்கு ஒரு நூல் இலவசம்!**

**சிலப்பதிகாரம் வாங்குவோர்க்கு நாலடியார் இலவசமாகத் தரப்படும். 5.1.2000 வரை !**

கடிதம் எழுதுக. இரு நூல்களையும் V.P.P. யில் அனுப்புகிறோம். தபால் செலவு ரூ.10 சேர்த்து மொத்தம் ரூ.50 தபால்காரரிடம் கொடுத்துப் பார்சலைப் பெற்றுக் கொள்க. M.O. அனுப்ப வேண்டாம்.

**கடிதம் எழுத வேண்டிய முகவரி : வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர். காம்பளக்ஸ், 141, உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை - 17. (பனகல் பார்க் அருகில்).**

**நேரில் பெற** : எமது அலுவலகத்தில் ரூ.40 மட்டும் செலுத்தி இரு நூல்களையும் உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. ஞாயிறு விடுமுறை.

**நினைவில் கொள்க. இலவச நூல் சலுகை 5.1.2000 வரைதான் !**

மும்பையின் புறநகர்ப் பகுதியான முலுண்டை, உலக வரை படத்தில் பளிச்சிட வைத்து விட்டார் ஒரு பெண்! உலக அழகி யுக்தா முகியைத்தான் சொல்கிறோம்.

சின்னப் பெண்ணாய், ஜே.ஜே. ஸ்கூலிலும், கேல்கர் காலேஜிலும் படித்து, பஸ்ஸிலும் ஆட்டோவிலும் அங்கேயும் இங்கேயுமாக நாங்கள் (மும்பையிலுள்ள முலுண்ட் பகுதிக்காரங்க) பார்த்து வளர்ந்த பெண்... இன்று அகில உலக அழகு ராணியாக மகுடம் சூட்டிக் கொண்டதில் முலுண்டே கோலாகலமாகிவிட்டது! ஆங்காங்கே வாழ்த்து 'பானர்கள்'!

யுக்தாவின் அம்மா அடிக்கடி யுக்தாவுக்கென்று டோஃபூ (பனீர் போன்ற ஸோயாபீன்), டயட் ஸ்டிக்குகள், டயட் பிஸ்கட்டுகள் போன்றவற்றை வாங்கிக் கொண்டிருந்த 'Eat well-cold storage'காரர்கள் பெரிய போர்டே போட்டு விட்டார்கள்.

கார்ப்பொரேஷன் பாங்க் கிளைக்குப் பெருமை பிடிபடவில்லை; வாயிலிலேயே அவர்களுடைய விலை மதிப்பில்லாத வாடிக்கையாளருக்கு (வென்ற லட்சங்களை இங்கே டெபாஸிட் செய்வாரா?) பிரமாதமாக வாழ்த்துத் தெரிவித்துள்ளார்கள்.

• குழந்தையாக...



டி.வி. சேனல்களில் நொடிக்கொரு "கங்கிராஜுலேஷன்ஸ்!" இனி காரிலும் விமானத்திலும்தான் பறப்பார் என்றாலும், யுக்தாவுக்கு லெட்டர் கொடுக்கும் போஸ்ட்மேனிலிருந்து, அவர் வீட்டு குப்பையை எடுத்துச் செல்லும் கச்சடா வாலி வரை எல்லோருக்கும் அவர் ''எங்கள் யுக்தாக் கண்ணு...''தான்!

நாமென்ன குறைந்தவர்களா? ஃபெமினா மிஸ் இந்தியா போட்டியில் வென்ற உடனேயே, உலக அழகியாகும் லட்சணங்கள் இவரிடம் பொதிந்திருப்பதைத்

• அழகியாக...





• சிறுமியாக...




தெரிந்து கொண்டு, சுடச் சுட கல்கியில் இவரது பேட்டியை வெளியிடவில்லையா? நமது ஜோசியம் பொய்க்காமல் காப்பாற்றி விட்டாரே யுக்தா!

**ம**றதி மன்னர்களுக்கு, சின்ன 'அப் டேட்'- அம்மா அருணா முகி "grooming classes" நடத்துபவர்; யுக்தாவின் வெற்றிக்கு முதுகெலும்பு. அப்பா இந்தர் முகி, ஆசார மான பஞ்சாபிக் குடும்பத்தில் வந்த கார் மெண்ட் பிஸினஸ்காரர். அழகிப் போட்டி களில் யுக்தா பங்கெடுத்துக் கொண்டதை காரசாரமாக எதிர்த்தவர். ஆனால் பெண்ணின் உறுதியையும் பிடி வாதத்தையும் கண்டு அரைமனத்

* குமரியாக



# அடுத்த மிலெனியப் பெண்

## எப்படியிருக்க வேண்டும்?

துடன் சம்மதித்து, இன்று முழு மனத்துடன் சந்தோஷிப்பவர். தம்பி கன்வல், விஜிடிஐயில் இஞ்சினியரிங் படிப்பவர்.

ஞாயிறன்று காலை, 3.45க்கு, முலுண்டின் புதிய ஞாயிறு உதிக்கத் தொடங்கியபோது, விடிய விடிய டீ.வியைப் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் சந்தோஷக் கூத்தாடினார்கள். யுக்தாவின் தம்பி கன்வல், தன் 'லவ் குஷ்' அபார்ட்மெண்டில் தனியாக மாட்டிக் கொண்டார். அப்பா, அம்மா, பாட்டி, மூவரும் லண்டன் சென்றிருந்தார்களே...? நகத்தைக் கடித்துத் துப்பி, டென்ஷனில் விரல்கள் மொட்டை அடித்துக் கொள்ளும் தருவாயில் யுக்தா மகுடம் சூட்டிக் கொண்டார்.

"பாவம்... தினம் காலை 7.30க்கு வீட்டை விட்டுக் கிளம்பினால், இரவு 9.30க்குத்தான் திரும்புவாள். தீவிர பயிற்சியின் பின்னும் அன்றலர்ந்த மலர் போலிருப்பாள். எதிலும் ஒரு லயிப்புடன் ஈடுபட்டால்தான் அப்படி சோர்வின்றி இருக்க முடியும். அப்போதே எனக்கு முடிவு தெரிந்து விட்டது; யுக்தா வெல்லத் தீர்மானித்து விட்டாள் என்றால், வென்றே தீருவாள்'' என்றார் கன்வல்.

முலுண்டிலேயே, ஸெயிண்ட் பயஸ் அருகில், யுக்தாவின் சித்தப்பாக்கள், பெரியப்பாக்கள் வசிக்கும் பங்களாவில் தீபாவளிக் கொண்டாட்டம்தான்! 'பொக்கே' மலை குவிந்திருக்க, வருவோர் போவோருக்கெல்லாம் "பேடா" (இனிப்பு) விநியோகம்; "எனக்குப் புதுசா நாலு ட்ரெஸ் குடுத்திருக்காங்க'' என்றது, அந்த வீட்டுக் குழந்தைகளை மேய்க்கும் சிறுமி ஒன்று! சிரித்துக் கொண்டே இருக்கும் சித்தி சுனிதா முகி, யுக்தாவுக்கு "பாஸிடிவ் ஆட்டிட்யூட் அதிகம்; இந்தியாவின் அழகிய அம்பாஸடராக அவள் இதயங்களை வெற்றி கொள்வாள் என்பது எங்களுக்குத் தெரியும்!'' என்றார்.

"காலேஜில், படிப்பிலும் சரி; எக்ஸ்ட்ரா கரிகுலர் ஆக்டிவிடீஸிலும் சரி... எப்போதும் யுக்தாதான் முதல்'' என்றார் சம்பதா எனும் தோழி.

அழகிருந்தால் அறிவிருக்காது; இரண்டுமிருந்தால் நளினம் இருக்காது; இப்படி மூன்றையும் ஒரு சேர யுக்தாவால் எப்படிப் பிரதிபலிக்க முடிந்தது?

யுக்தா வருவதற்கு காலதாமதமாகுமாதலால், லண்டனிலிருந்து திரும்பியிருக்கும் யுக்தாவின் அம்மாவை இந்தக் கேள்வியுடன் வளைத்தோம். அம்மையார் லண்டன் நினைவுகளை ஆசையாக அசைபோட்டார். இரண்டு நிமிடத்துக்கொருமுறை சிணுங்கிய தொ(ல்)லை பேசியை லாகவமாக சமாளித்துக் கொண்டே, நம்மிடம் பேசிக் கொண்டிருந்தார்.

''நவம்பர் 15-25 தேதி வரை 94 அழகிகளும் மால்டாவுக்குப் போய் விடுவார்கள் என்பதால் நான் 25ம் தேதிதான் லண்டனுக்குச் சென்றேன். ஃபோனில் தான் பேச முடிந்தது; யுக்தா ரொம்ப தன்னம்பிக்கையுடன் இருந்தாள். மற்ற பெண்களெல்லாம் இவளுடைய வளையல்கள், மூக்குத்திகள், பிந்தி(பொட்டு)களைப் பார்த்து பைத்தியமாகிவிட்டார்களாம். யுக்தா எடுத்துச் சென்றிருந்த கண்ணாடி, ப்ளாஸ்டிக் வளையல்களெல்லாம் காலி! என்னை வேறு ஆக்ஸிடைஸ்ட் வளையல்களை எடுத்து வரச் சொல்லியிருந்தாள்!

"28ம் தேதி ஃபாமிலி-கெட்-டுகெதர்; என் கஸினுடன் சென்றேன்; மற்ற அழகியரையும் அவர்கள் குடும்பத்தையும் பார்த்துப் பேச வாய்ப்புக் கிடைத்தது. 'எல்லோரும் யுக்தாவுக்கு ரொம்ப நல்ல மனசு என்று பாராட்டினார்கள்.

"ஒரு informal talent competition வைத்தார்கள். யுக்தா 'சத்தியம், சிவம், சுந்தரம்...' பாடலைப் பாடினாள். கேட்டவர்கள் அனைவரும் உருகிப் போய், 'இதன் முழு அர்த்தம் தெரியவில்லை; ஆனால் அதை யுக்தா பாடும் போது எங்கள் உள்ளத்தில் இனம் தெரியாத அமைதி விரவியது; ஆன்மீகப் பாடலா?' என்ற போது எனக்கு அப்படியே சிலிர்த்து விட்டது.

''29-ம் தேதி என் கணவரும் மாமியாரும்

## அழகியின் அழகுவாக்கு!

மும்பை திரும்பி, முலுண்டில், பலூன் பொக்கே புடைசூழ, இளம் ஆர்விகள் பின் தொடர, அழகு ரதத்தில் வீதி உலா வந்தபோதே யுக்தா முகியைப் பிடித்து விட்டேன். அவர் திருவாய் மலர்ந்தருளிய அருள்... ஸாரி அழகுவாக்கு இதோ:

● வாழ்க்கை தலை கீழாகத்தான் மாறிவிட்டது; இனி விடிகாலை 3 மணிக்கு மரீன் ட்ரைவ்வில் 'வாக்' சென்றால்தான் யார் தொந்தரவும் இருக்காது போலிருக்கிறதே! ஆனாலும் இந்த செலிப்ரட்டி வாழ்க்கையை வரவேற்கிறேன்.... அதற்காகத்தானே கடுமையாக உழைத்தேன்?

● அழகு என்பது உள்ளொளி; அது நம் கொள்கைகளின் பிரதிபலிப்பு; நிறமும் வடிவும் இரண்டாம் பட்சமே! இந்தியப் பெண்களின் வெற்றிக்கு, அவர்களின் வளர்ப்பு முறையும், குடும்பச் சூழலும் ஆணிவேர்; மேலும், கொடுமையான ஏழ்மையும் ஆடம்பரமான செழிப்பும் இந்தியாவில் கைகோத்தேயிருப்

பதால், அறிவு முதிர்ச்சியும், சமநோக்கும் இந்தியர்களுக்கு இயல்பாகவே வாய்த்துவிடுகின்றன- ஆட்ரி ஹெப்பர்னை நான் ஆராதிக்கிறேன் என்பது உண்மை; ஆனால், நான் பார்த்ததிலே, மனீஷா கொய்ராலாவைத்தான் நல்ல அழகி என்பேன்.

● கார்கில் போர், தேர்தல் களேபரம், புயல் பயங்கரம் போன்ற அவலங்களிடையே, இந்த வருடம் இந்தியாவுக்கு ஒரு இனிய மாறுதல்; நாட்டு நலனுக்காக, குழந்தைகள் கல்வி, குடும்பக் கட்டுப்பாடு என்ற திசையில் உழைக்கப் போகிறேன்.

● என் வீட்டு நலனுக்கும் இந்த வெற்றி அடிகோலியிருப்பது அதிசயமே! என் கஸின் சிஸ்டர்களெல்லாம் ஜீன்ஸ் கூட போட்டுக் கொள்ள அனுமதி கிடையாது; ஃபோனில், பெண் நண்பர்களுடன் கூட அரட்டை அடிக்க முடியாது; இந்த கட்டுப் பெட்டித்தனமான குடும்பச் சூழல் இனி கொஞ்சம் மாறுமல்லவா?

● டைம்ஸ் க்ரூப்புக்கு என் உளமார்ந்த நன்றி! ஒரு வருடம் முன்பு என் ஃபோட்டோவைப் பார்த்திருக்க வேண்டுமே! அப்போது புரியும் என் தோற்றத்தின் இமாலய மாற்றம்!



• யுக்தா முகி மும்பை திரும்பியபோது...

தமிழர்களுக்கு, கல்கி வாயிலாக "கிஸ் மை லவ்" என்றார். அவசரப்படாதீர்கள்... இன்னும் ஆறேழு வருடங்களுக்கு "நோ மேரேஜாம்!"

– ஜெ.ஆர்.

வந்து சேர்ந்தனர். 'கவலைப்படாதீர்கள்; நான் நன்றாயிருக்கிறேன்' என்றாள் யுக்தா; குரலில் உறுதி, உள்ளத்தில் அமைதி இருந்தது.

"ப்ரீ-ஜட்ஜ்மெண்ட் ரவுண்ட் என்ற ஒன்று – ஒவ்வொரு ஜட்ஜிடமும் குறைந்தது மூன்று நிமிடங்களாவது ஒவ்வொரு அழகியும் உரையாட வேண்டும். இவர்களது குணச்சித்திரங்களை அவர்கள் எடை போடுவது அப்போதுதான்! அதிலிருந்துதான் பத்து ஃபைனலிஸ்டுகளை தேர்ந்தெடுக்கிறார்கள். முடிவை இந்தப் பெண்களிடம் அப்போது தெரிவிப்பதில்லை; மேடையில்தான் அறிவிக்கிறார்கள். (அதுதானே பார்த்தோம்... மேடையில் கேட்கப்பட்ட, என்ன உணவு பிடிக்கும்? எந்த ஊர் பிடிக்கும் என்பதெல்லாம் ஒரு கேள்வியா?)

"யுக்தாவிடம், அடுத்த மிலெனியத்தின் பெண் எப்படி இருக்க வேண்டும்? என்று கேட்டார்களாம். 'தன்னம்பிக்கை மிக்கவளாக, சவால்களை எதிர்கொள்பவளாக, மனத்தில் மிகுந்த அன்பும் கருணையும் மிக்கவளாக இருக்க வேண்டும்" என்றிருக்கிறாள். 'உனக்கு என்ன மாதிரி ட்ரெயினிங் கொடுத்தார்கள்?' என்றதற்கு, 'நிறைய உடற்பயிற்சி செய்தேன்; பிடித்திருந்தது. ஆனால் டயட்டிங்தான் பிடிக்கவில்லை!' என்றாளாம். அந்த ஜட்ஜும், 'இந்திய உணவு ருசிகரமானதாயிற்றே... டயட்டிங் கஷ்டம்தான்' என்று ஜோக்கடித்தாராம்!

"வழக்கம் போல், 'அழகென்[redacted]என்ன?' எனக் கேட்டிருக்கிறார்கள். 'அ[redacted]ள்ளத்திலிருந்து பொங்கும் அன்பு. கண்களில் வழியும் கருணை, இவற்றுடன் கூடிய கவர்ச்சிகரமான உடலமைப்பு!' என்று பதிலிறுத்தாளாம் யுக்தா.

"மேலும், 'திருமணமான ஆண்களை மணமுடிக்க மாட்டேன்; இன்னொரு குடும்பத்தை ஏன் பாழடிக்க வேண்டும்?' 'அம்மாவாகப் பிடிக்கும்; ஆனால் குழந்தை பெற பயம்; ஓர் அனாதைக் குழந்தையை தத்தெடுத்தால் அதற்கும் ஒரு அம்மா கிடைக்குமே?' போன்ற பதில்களால் அவர்களை வீழ்த்தியிருக்கிறாள். ஒரு ஜட்ஜ், பிரசவம் ஒன்றும் அவ்வளவு கடினமானதில்லை என்று ஆசுவாசப்படுத்தினாராம்...!

"என்னிடம் இதையெல்லாம் சொல்லிவிட்டு, 'நான் இன்னும் நன்றாகப் பதில் சொல்லியிருக்கலாமோ?' என்று கவலைப்பட்டாள். 'இதைவிடப் பிரமாதமாக யாருமே பதிலளிக்க முடியாது' என்று நான் அடித்துச் சொன்னேன்.

"யுக்தாவுக்கு சவால் விடும் வகையில் ஒரு பத்து அழகிகளாவது இருந்தார்கள். ஒருத்தி 6'2"; மற்றொருத்தி 6'3" உயரம் (யுக்தா – 5'11½") வெனிஸுலா, தென்னாப்பிரிக்கா, இஸ்ரேல்.. எல்லோரும் நல்ல அழகிகள். மிஸ் ஸ்காட்லண்ட் என்னை மிகவும் கவர்ந்தாள். இந்தச் சவால்களை எதிர்கொள்ள அவளுக்குப் பெரிதும் உதவியது, ஃபெமினா டீம் கொடுத்த ட்ரெயினிங், என் கஸின் ஒருவர் கொடுத்த ஊக்கம், எல்லாவற்றுக்கும் மேலாக, அர்ஜுனனைப் போல் இலக்கு



தவறாமல் – கருத்து சிதறாமல், ஒருமுகமாக அவள் உலக அழகியாகப் பட்டம் பெற வேண்டும் என உழைத்த உழைப்பு!'' என முடித்தார் அருணா முகி.

''கடைசி நாளன்று, ஹேமந்த் திரிவேதி வடிவமைத்த உடையில் யுக்தா ஒரு தேவதையைப் போல் காட்சி தந்தாள். அந்த ஐஸ் ப்ளூ உடையில், ஸ்வார்வஸ்கி ஸ்பான்சர் செய்த கிரிஸ்டல்கள் கண்ணைக் கவர, மிஸ்வர்ல்ட் மகுடத்துக்கென்றே வடிவமைத்த உடைபோலிருந்ததாகப் பலர் அபிப்பிராயப்பட்டார்கள். முடிவை அறிவித்தவுடன் நாங்கள் மேடைக்கே ஓடி விட்டோம்; அவளை நெருங்க முடியாமல், 93 அழகிகளும் சுட்டித் தழுவி முத்தமிட்டு நெஞ்சார வாழ்த்தியது, மனதைத் தொட்டது!'' என நெகிழ்ந்தார் தந்தை.

**ஹே**மந்த் திரிவேதிக்கு வாயெல்லாம் பல். ''வெற்றி ரகசியம் இப்போது தெரிந்து விட்டது; யுக்தா எனக்கு ஃபோன் பண்ணி, 'மகுடத்தை உங்களுக்கு அர்ப்பணிக்கிறேன்' என்றாள்; தங்கமான பெண்!'' என புளகாங்கிக்கிறார். பெனட் கோல்மனின் நிர்வாக இயக்குநரான பிரதீப் குஹா, ''இப்போதெல்லாம் ஃபெமினா போட்டிகளின்போது, நாங்கள் ஜட்ஜ்களிடம், இந்திய அழகிகளை தேர்ந்தெடுக்கச் சொல்வதில்லை; மிஸ் யுனிவர்ஸ், மிஸ்வர்ல்ட் வகையறாக்களைத்தான் தேர்வு செய்யச் சொல்கிறோம்!'' என்றார் பெருமை பொங்க.

லண்டனிலும் சில பெண்ணுரிமைக் குழுக்கள் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்கின்றன. ஆனால், ஓர் இந்திய மங்கை வென்றதில், லண்டன் வாழ் இந்தியர்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி! அங்கே பயங்கரக் கொண்டாட்டமாம்!

இங்கேயும் சில அரசியல்வாதிகள், 'என்ன வேண்டிக் கிடக்கிறது இந்த நிர்வாண நடனமெல்லாம்?' என்று உச்சுக் கொட்டினாலும், இந்தியா வென்றிருப்பதில் ஏகோபித்த பெருமைதான். மகாராஷ்ட்ர முதல்வர் ஸ்பெஷலாக வாழ்த்துத் தெரிவித்து, அறிக்கையும் விட்டிருக்கிறார். ''இனி இந்தியா என்றாலே ஸாஃப்ட்வேர் கிங்ஸ் அண்ட் ப்யூட்டி க்வீன்ஸ்தான்'' என்கிறார் NIIT சேர்மன் ராஜேந்திர பவார்.

யுக்தாவால் 'ஃபாரின் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்' அதிகரிக்கப் போகிறதென்றும், டூரிஸ்டுகள் பெருகுவார்கள் என்றும் பிஸினஸ் வட்டாரங்கள் குதூகலிப்பதில் எவ்வளவு உண்மை இருக்கிறதோ...

அட்லீஸ்ட், இந்தியாவை, பாம்புகளும், மந்திரவாதிகளும், பிச்சைக்காரர்களும் நிறைந்த நாடாக நினைப்பதிலிருந்து, அறிவும், அழகும் ஆளுமையுமிக்க பெண்களைத் தோற்றுவிக்கும் நாடாகவாவது நினைப்பார்கள் அல்லவா?

**— ஜெயஸ்ரீ ராஜ்**

அட்டை வண்ணப்படம்-நன்றி: ஃபெமினா

## கவிதை–அல்ல–கிவிதை!

ஒட்டுதல் நமது
தேசிய குணமே
ஒட்டிக் கொண்டால்
பிரச்னை இல்லை.
சுவரில் ஒட்டும்
போஸ்டர்களால்நம்
பயணம் சுவைபட அமைகிறது.
'பவரி'ல் இருப்போர்
ஒட்டிக்கொண்டால்
பார்லிமெண்டும் நிலைக்கிறது.
ஊழலும் காதலும்
ஒட்டுவா ரொட்டி
ஒட்டிக் கொண்டால்
பிரிப்பது கஷ்டம்.
'தோழமை ஒட்டு' பிரிகிற நேரம்
தோல்வியை 'ஓட்டு' தருகிறது.

('ஆசையில் ஓர் கடிதம்'–
படத்துக்காக 'ஒட்டிக்'
கொண்டிருப்பவர்கள்
பிரசாந்தும் கௌசல்யாவும்)
– விசித்திரக் குள்ளன்






1999 டிசம்பர் 26
பிரமாதி மார்கழி 11
மலர் : 58
இதழ் : 22

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அயோத்தி அரசியல்!

சென்ற வாரம் ராஜினாமா நாடகமெனில் இந்த வாரம் வெளிநடப்பு நாடகம்! எல்லாவற்றுக்கும் மூல காரணம் அயோத்தி பிரச்னை!

'அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவது என்பது இன்னமும் பி.ஜே.பியின் செயல்திட்டத்தில் உள்ளது' என உ.பி முதல்வர் ராம்பிரகாஷ் குப்தா சொல்லப் போக, ரணகளமாகிவிட்டது நாடாளுமன்றம்!

பி.ஜே.பியிலிருந்து நீக்கப்பட்ட முன்னாள் உ.பி. முதல்வர் கல்யாண் சிங், ராமர்கோயில் திட்டத்தைக் கிடப்பில் போட்டதுதான் தவறு என்று பேசி வந்தவர். தேர்தலின்போது உ.பி.யில் பி.ஜே.பி அடைந்த பின்னடைவுக்கு அதுவே காரணம் என்று திரும்பத் திரும்பக் கூறி வந்தார். எல்லாம் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டு ஓரிரு தினங்கள்வரைதான். அதன் பின்னர் முலாயம்சிங்கின் ஆதரவைப் பெற வேண்டியிருந்ததால் அயோத்தி பாட்டை நிறுத்திவிட்டார் கல்யாண்சிங். அவர் விட்ட இடத்தில் அதைத் தொடங்கித் தொடர வேண்டியவராகி விட்டார் உ.பி.யின் புதிய முதல்வர் ராம் பிரகாஷ் குப்தா.

காரணம் - உ.பி.யில் ராமர் பஜனையின்றி அயோத்தி ஸ்மரணையின்றி அரசியல் நடத்துவது பி.ஜே.பி.க்கு முடியாத காரியம். அந்த அளவுக்கு ஆர்.எஸ்.எஸ். அம் மாநில மக்களின் உணர்வுகளைத் தூண்டி வைத்திருக்கிறது. அரசிடம் மக்கள் கொள்ளும் நம்பிக்கையே அயோத்தி செயல்திட்டத்தின் அடிப்படையில்தான்! கலபமாக வோட்டுகள்




பெற்றுத் தரும் குறுக்குவழி அத் திட்டம் என்பதாலும் கௌரவப் பிரச்னை என்பதாலும் அதனை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது பி.ஜே.பி.

அதை உ.பி. முதல்வர் வெளிப்படையாகத் தெரிவித்தது பிரச்னையாக்கப்பட்டிருக்கிறது. இத்தனைக்கும் 'ராமர் கோயில் கட்டுதல் பி.ஜே.பி.யின் செயல் திட்டத்தில் ஓர் அம்சமாக இன்னமும் உள்ளது' என்றுதான் அவர் சொன்னாரே தவிர, மத்திய அரசின் செயல்திட்டத்தில் அது இருப்பதாக அவர் கூறவில்லை. மாநில அரசின் செயல்திட்டத்தில் உள்ளதாகவும் பேசவில்லை.

மத்தியில் ஆட்சியிலுள்ள கூட்டணி அரசுக்கு ராமர் கோயில் பணி என்பது கட்டுபடியாகாத விஷயம். இப்போதைக்கு அந்தத் திசையில் திரும்பிப் பார்த்தால்கூட ஆட்சி ஆட்டம் கண்டு போய்விடும்.

இவ்வாறிருக்க, பி.ஜே.பி கட்சியின் செயல்திட்டத்தை ஆட்சேபித்து, நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சிகள் குரல் எழுப்புவதும் ரகளை செய்வதும் பிரதமரிடம் விளக்கம் கேட்பதும் வெளிநடப்புச் செய்வதும் பொன்னான நேரத்தையும் மக்களின் வரிப்பணத்தையும்தான் வீணாக்குகின்றன.

முக்கியமான பொருளாதார மசோதாக்களும் இதர மசோதாக்களும் காத்திருக்க, அயோத்தி குறித்து கூச்சலும் குழப்பமும் ஏற்படுத்தி எதிர்க்கட்சிகள் தங்கள் 'பராக்கிரமத்'தைக் காண்பித்துக் கொள்ள முயற்சி செய்வது வெறும் வறட்டு ஜம்பமாகவே தெரிகிறது.

எதிர்ப்புக்கு வேறெதுவும் இல்லாத நிலையில், வன்மத்துடன் எதிர்ப்பைத் தெரிவிப்பதற்காகவே இந்த அயோத்திப் பிரச்னையைப் பிடித்துக் கொண்டு தொங்குவதுபோல் தோன்றுகிறது. போஃபர்ஸ் விசாரணையின் ஒவ்வொரு நிலைக்கும் பதிலடி கொடுக்கவே காங்கிரஸ் இயங்குவதாகக் கூடத் தோன்றுகிறது.




பாப்ரி மஸ்ஜித் தகர்க்கப்பட்டது இந்திய ஒருமைப்பாட்டுக்கும் ஹிந்து - முஸ்லிம் நேசத்துக்கும் நேர்ந்த கொடூரம் என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால், காயங்கள் ஆறும் நேரத்தில் அவற்றை மீண்டும் மீண்டும் கிளறுவதுபோல் செயல்படுவது - எதிர்க்கட்சியோ - ஆளுங் கட்சியோ, யாருக்குமே அழகல்ல. மக்கள் வரிப்பணத்தில் நடைபெறும் நாடாளுமன்றக் கூட்டத் தொடருக்கு அர்த்தமில்லாமல் இடையூறு செய்வதும் சரியல்ல.

அயோத்தியில் ராமர் ஆலயம் அமைப்பதை எதிர்க்க விரும்பினால் அதைத் தேர்தல் களத்திலேயே செய்திருக்க வேண்டும். வலுவான மாற்றுக் கொள்கை கொண்ட ஒரு நல்ல எதிர்க்கட்சி, பி.ஜே.பி.யின் இந்த பலவீனத்தைத் தனது பலமாக்கிக் கொண்டு ஜெயித்திருக்கலாம். ஆனால், காங்கிரசிடம் சுய பலமும் இல்லை; அரசியல் ரீதியில் அர்த்தமுள்ள கூட்டணியை அதனால் அமைத்துக் கொள்ளவும் இயலவில்லை. பி.ஜே.பி.யின் முந்தைய கூட்டணி ஆட்சியைக் கவிழ்ப்பதென்பது மட்டுமே அப்போது நோக்கமாக இருந்தது.

மொத்தத்தில் ராம பக்தியோ, ராம ராஜ்ய சிந்தனையோ எந்த அரசியல்வாதியையும் ஆட்கொண்டு விடவில்லை. அந்த நோக்கில் யாரும் செயல்படவும் இல்லை. பரபரப்பாக ஏதாவது சொல்லி தங்கள் பக்கம் மீடியா கவனத்தை ஈர்ப்பது ஒன்றே இவர்களுக்குக் குறியாக இருக்கிறது.

உ.பி. முதல்வர் பொய் பேசினாரா? பிரதமர் பொய் சொன்னாரா? என்றெல்லாம் ஆராய்ச்சியிலிறங்கி நேர விரயம் செய்யாமல், நாடாளுமன்றம் செம்மையாகச் செயல்படவும், நிர்வாகம் ஆற்றலுடன் நடக்கவும் எதிர்க்கட்சிகள் ஒத்துழைப்புத் தருவதுதான் புத்திசாலித் தனம்.

அரசின் ஸ்திரத்தன்மைக்கு ஏற்பட்ட சவால்கள் காரணமாக, கடந்த ஆட்சியில் உருப்படியாக எதுவுமே நடைபெறாமல் போய்விட்டது. இனியும் அந்தத் தேக்கத்தைத் தொடர விடுவது தேசத்துக்குக் கட்டுபடியாகாது. ○

**ஊ**னமுற்றோருக்கான பணிகளில் இதயபூர்வமாகச் செயல்பட்டதைப் பாராட்டி தமிழக அரசு 'சிறந்த மாவட்ட ஆட்சித் தலைவர்' விருது வழங்கியுள்ளது திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவரான வை. மூர்த்திக்கு.

அனைத்து மாவட்டங்களிலும் ஊனமுற்றோர் மறுவாழ்வுத் துறையின் வாயிலாக பல்வேறு உதவித் திட்டங்களைச் செயல் படுத்துவது வழக்கமான ஓர் அம்சம்தான். அதில் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவருக்கு மட்டுமென்ன தனிச் சிறப்பு?

இவர் அரசு உதவிகளை மட்டும் செயல்படுத்துவதோடு நின்றுவிடவில்லை. அந்த எல்லைகளையெல்லாம் தாண்டிச் சென்று, ஊனமுற்றோர் வாழ்வில் மேலும் ஏற்றம் பெற்றிட, அவர்கள் உழைக்கவும் அதன் மூலம் வருவாயைப் பெருக்கவும் வழிவகைகள் செய்து கொடுத்ததுதான் சிறப்பான இடம் பெறச் செய்து விட்டது.



• கால்கள் பாதிக்கப்பட்ட பழனியம்மாளுக்கும் உதவி...

**து**றையூர் அருகே ஒரு கிராமத்தைச் சேர்ந்த இளைஞன் யோகேஸ்வரன். வயது இருபது. வறுமை வயப்பட்ட குடும்பம். இரண்டு கால்களும் ஊனமான உடலுக்குச் சொந்தக்காரர். இருப்பினும் தான் ஏதாகிலும் கற்றுக் கொண்டு உழைக்க வேண்டும்; தன் குடும்பத்தை காப்பாற்ற வேண்டுமென எண்ணம் கொண்டவர்.



• யோகேஸ்வரனுக்கு உதவி...

திருச்சி, மாவட்ட மறுவாழ்வு மைய அலுவலகத்தின் வழிகாட்டுதலில், ஊனமுற்றோருக்கென்று நாகமங்கலத்தில் நடத்தப்படும் 'வொர்த்' தொழிற் பயிற்சி மையத்தில் (தனியார்) இரண்டு வருட வெல்டர் பயிற்சியில் சேர்ந்து விடுகிறார். பயிற்சிக் கட்டணம் ரூபாய் இரண்டாயிரத்து ஐந்நூறு கட்ட வேண்டிய கட்டாயம். வீட்டிலிருந்து பத்து ரூபாய்கூட பெயர்த்துக் கொண்டு வர முடியாத சூழல். என்ன செய்வதெனத் தெரியவில்லை.

துவக்க நிலையில் ஆதரவுக்கரம் நீட்டிய மாவட்ட மறுவாழ்வு மையத்துக்கு வந்து விவரம் சொல்லி உதவி கேட்டுப் பார்க்கிறார். அந்தத் தொகையை மையத்தின் மூலமாகச் செலுத்த நிதி ஒதுக்கீடு ஏதுமில்லை என அலுவலர் சொல்லவும் மனம் சோர்ந்து போகாமல், ஒரு நாள் காலைப் பொழுதில் கலெக்டர் பங்களாவுக்கே சென்று விட்டார் யோகேஸ்வரன். அவரது நிலையறிந்த ஆட்சித் தலைவர் அந்த நேரத்தில் தம்மைச் சந்திக்க வந்திருந்த சமூக நல ஆர்வலர்களிடம் ஆளுக்குக் கொஞ்சமாய் பணம் திரட்டி பற்றாக்குறையான தொகைக்குத் தமது சொந்தப் பணத்தில் இருந்து சேர்த்துக் கொடுத்து, கல்விக் கட்டணம் முழுவதையும் அந்த இளைஞர் வசம் தந்து அவர் கண்ணீரைத் துடைத்துவிட்டிருக்கிறார்.

இப்பொழுது பொருளாதாரச் சிரமம் ஏதுமின்றி யோகேஸ்வரன் வெல்டர் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கிறார்!

# அட, இவர் வித்தியாசமான கலெக்டர்!

**பொ**துமக்கள் குறைகள் தீர்க்கும் ஒரு நாளில் கண்ணனூர்ப் பாளையத்திலிருந்து வந்திருந்தார் தங்காள் என்பவர். மன வளர்ச்சி குன்றிய ஒன்பது வயது பையனுக்குத் தாய். நிரந்தரமற்ற விவசாயக் கூலி வேலை. விதவை. பையனை வைத்துப் பராமரிக்க முடியவில்லை என்பது குறைபாடு. மனவளர்ச்சி குன்றிய அந்தப் பையனை உடனே 'விடிவெள்ளி உள ஊனமுற்றோர்' இல்லத்தில் சேர்த்துக் கொள்ள ஏற்பாடு செய்து கொடுத்தாகி விட்டது.

பையனைச் சேர்த்ததோடு நமது கடமை முடிந்து போய்விட்டதென்று இருந்துவிட முடியவில்லை அவரால். கிராமத்திலிருந்து அந்த விதவைத் தாய் மாதந் தோறும் பையனை வந்து பார்த்துவிட்டுப் போக வேண்டும். அவனது அடிப்படைத் தேவைகளுக்கு உண்டானவற்றை வாங்கித் தரவேண்டும். நிரந்தரமில்லாத கூலி வேலை செய்யும் அந்தப் பெண்ணால் எப்படிச் சமாளிக்க முடியும் இதனை?



• மூளை வளர்ச்சி பாதிக்கப்பட்ட சிறுவனுக்கும் அவன் தாய்க்கும் உதவி...



• கலெக்டர் வை. மூர்த்தி

பேச்சுவாக்கில் தமக்கு தையல் வேலை தெரியும் என்று தங்காள் சொல்ல, உடனடியாக தையல் மிஷின் ஒன்றை அவருக்கு வழங்க வைத்திருக்கிறார் கலெக்டர்.

**ம**ணப்பாறை அருகே லெக்ம நாயக்கன்பட்டி கிராமத்தில் முகாம் செய்திருந்த நேரம். சாதாரணமாக கிராமத்து வீடுகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்த சமயம்.

குட்டிச் சுவரை ஆதாரமாகக் கொண்டு சாக்குப் படுதா ஒன்றையே கூரையாக மாற்றிக் கொண்ட குடிசை(?). வாசலில் இருபத்து நான்கு வயது பழனியம்மாள். இரண்டு கால்களிலும் கணுக்கால் பகுதிக்குக் கீழே அந்தப் பெண்ணின் கால் பாதங்கள், விரல்கள் அனைத்தும் ராட்சஸத்தனமாய்ப் பெருத்துப் போய்.... பார்க்க நேரிடும் சிலருக்கு பயத்தைத் தரலாம். சிலருக்கு அனுதாபத்தைத் தரலாம். சிலருக்கு அருவருப்பைத் தரலாம். அதனைப் பார்க்க நேரிட்ட இவருக்கு இந்தப் பெண்ணுக்கு ஏதாவது செய்து இதனைச் சீர் செய்ய முடிந்தால் என்ன என்கிற சிந்தனையைத் தந்திருக்கிறது.

விசாரித்திருக்கிறார்.

பழனியம்மாளின் தாய் அறுபது வயதில் கிராமத்துப் பள்ளிக்கூடத்தின் முன்பாக தரையில் சாக்கு விரித்துப் போட்டு நிலக் கடலை, மிட்டாய் என்று

சிறு வணிகம் செய்பவர். பத்தோ பதினைந்தோ கிடைக்குமாம். இத்தனை பெரிய பாதங்களை வைத்துக் கொண்டு பழனியம்மாள் எங்கும் வேலை வெட்டிக்குப் போக முடியாத சோகம். சரி, வயிற்றுப்பாடு என்று ஒன்றிருக்கிறதே! அதற்குக் கால் வயிற்றுக் கஞ்சிதான் என உண்மை நிலை தெரியவும் கலங்கிப் போனார். அவர்கள் இருவரையும் திருச்சிக்கு அழைத்து வந்து அந்தப் பெண்ணின் கால்களைச் சிறந்த மருத்துவர்களிடம் பரிசோதித்ததில் (இது யானைக்கால் நோயிலும் வராது) சிரமைப்புச் செய்ய முடியாத நிலையை அடைந்து விட்டதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கால்களை மாற்றி அமைத்துவிட முடியாது. அவர்களது வாழ்க்கைத் துயரையாவது மாற்ற வேண்டுமல்லவா? இங்குள்ள ரோட்டரி கிளப்புகளின் நிதி உதவியால் அவர்களுக்கு இரண்டு ஆடுகளும், உடனடி வருமானத்திற்கு ஒரு கறவை மாடும் (கன்றுடன்தான்) கிடைக்க வழி செய்ததுடன் அவர்கள் நிரந்தரமாய் வசிக்க மணப்பாறை அருகிலிருக்கும் அரசின் தொகுப்பு வீடுகளில் ஒன்றும் ஒதுக்கித் தந்திருக்கிறார்.



## அவர்தாம் பெரியார்!

பெரியார் வாழ்ந்த காலம் 94 ஆண்டுகள் 3 மாதங்கள் ஏழு நாட்கள். அதாவது 34, 433 நாட்கள். இவற்றில் சரியான போக்குவரத்து வசதிகள் இல்லாத அக்காலத்திலேயே 8,600 நாட்களைச் சுற்றுப் பயணத்திலேயே செலவு செய்தார். சுமார் 13, 12,000 கி.மீ. பயணம் செய்தார். அந்தப் பயணத்தில் அவர் பங்கு கொண்ட நிகழ்ச்சிகள் 10,700! அவற்றில் அவர் ஆற்றிய உரைகளை கேசட்டில் பதிவு செய்து ஒலிபரப்பினால் இரண்டு ஆண்டுகள், ஐந்து மாதங்கள், பதினொரு நாட்களுக்குத் தொடர்ந்து இரவு பகலாக ஒலித்துக் கொண்டேயிருக்கும்.

தகவல்: சாங்கிருத்தியாயன்

ஊனம் உள்ளவர்கள் அனைவரும் ஓர் இடத்தில் கூடி தங்களது நிகழ்காலம், எதிர்காலம் குறித்து ஒருவருக்கொருவர் கருத்துப் பரிமாற்றங்கள் செய்து கொள்ள நடைபெற்ற கூட்டம் அது.

மாவட்ட ஆட்சித் தலைவருடன் அவர்கள் தங்களது எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ள நேர்ந்த பொழுது, பார்வையற்றோர் பகுதியிலிருந்து பதின்மூன்று இளைஞர்கள் எழுந்து நின்றார்கள். அவர்களது ஒட்டுமொத்த குரல் இவருக்கு வியப்பையும் உற்சாகத்தையும் ஒரே நேரத்தில் தந்திருக்கிறது.

"எங்களுக்கொன்றும் நடந்து கொண்டே தெருத்தெருவாய் ஊது பத்தி, லாட்டரிச் சீட்டு விற்கும் வேலை வேண்டாம். இருந்த இடத்தில் இருந்து கொண்டே- கடின உடல் உழைப்பாய் இருந்தாலும் பரவாயில்லை- அந்த மாதிரியான வேலை செய்யும் பயிற்சிக்கு எங்களை அனுப்பி வையுங்கள்!"

இப்பொழுது அந்த பதின்மூன்று பார்வையற்ற இளைஞர்களும் மணப்பாறையில் உள்ள அரசு கட்டட மையத்தில் சிமெண்ட் ஹாலோ பிளாக்ஸ்(செங்கல்லுக்குப் பதிலாகப் பயன்படுவது) செய்யும் பயிற்சியைக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

அரசு மூலமாக அளிக்கப்படும் உதவிகளைத் தருவதுடன் நின்று விடாமல், தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், சமூக சேவை அமைப்புகளின் உதவிகளோடு மனித நேயம் கொண்ட மனிதர்கள் வாயிலாகவும் ஊனமுற்றோர்களின் குறைகளைக் களைந்து செயல்படுவதுடன், அவர்களது வாழ்க்கைத் தர உயர்வுக்கும் அடித்தளம் அமைத்துத் தருவது என்பது இவருக்கு மட்டுமல்ல, எல்லா கலெக்டர்களுக்குமே சாத்தியம்தானே!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# ALL INDIA INSTITUTE OF MANAGEMENT STUDIES

No. 29, Lazarus Church Road,
R.A. Puram. Chennai - 600 028.
Phone: 044 - 4933210,
Fax: 044 - 4933259.
e-mail:aiimas@hotmail.com

Offers the following Six Months Diploma Courses by Correspondence (Distance Education Programme). Each Diploma Course has 4 Written Papers

## DIPLOMA IN

- BUSINESS MANAGEMENT
- BUSINESS ADMINISTRATION
- SALES & MARKETING
- ADVERTISING & PUBLIC RELATIONS
- INTERNATIONAL BUSINESS MGMT.
- PERSONAL MANAGEMENT & INDUSTRIAL RELATIONS
- TOTAL QUALITY MGMT. & ISO 9000
- INTERNAL QUALITY AUDITING & QS 9000 / ISO 9000
- FINANCIAL MANAGEMENT
- INTERNATIONAL MARKETING MGMT.
- NETWORKING & INTERNET APPLICATION
- MGMT. INFORMATION TECHNOLOGY
- QUALITY ASSURANCE & QS 9000/ISO 9000
- PRODUCTION MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT AND IMPORT MGMT.
- ENVIRONMENTAL MANAGEMENT & ISO 14000 / 14001
- MASS COMMUNICATION
- HUMAN RESOURCES DEVELOPMENT
- OFFICE ADMINISTRATION
- QUALITY CONTROL & ISO 9000
- HOSPITAL ADMINISTRATION
- TEACHER TRAINING EDUCATION
- INTERNATIONAL AIRLINES MGMT.

(Affiliated / Recognised by Westwind Aviation Academy, Arizona, USA)

ELIGIBILITY: No formal Qualification (Open Education System) Minimum Age: 16 years. **Course Fee Rs.800/-** Course Fee includes supply of Study Materials & Question Bank Book. **Medium of Study Materials & Examination** - English/Hindi. Examination will be held at about 60 centres all over India. **Prospectus & Study Materials are available both in Hindi & English.** Application & Prospectus are also available on internet: WWW.AIIMAS.COM. **For Application & Prospectus send Rs. 25/- D.D./I.P.O./M.O. in favour of the above Institute.**

## "5 வருட இடுப்பு வலியிலிருந்து ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தேன்!!!"



Lakshmi Iyer

ஸ்ரீமதி. லஷ்மிஐயர், மேட்டூர்டேம் R.S., சேலம் மாவட்டம், தமிழ்நாடு.

கடந்த ஐந்து வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் பொழுதும், சிறிது தூரம் நடக்கும் பொழுதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் பொழுதும், மாடிப்படி ஏறி இறங்கும்பொழுதும் , பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. ஆங்கில மருத்துவரிடம் சென்று **C.T. Scan** எடுத்துப் பார்த்த போது, இடுப்பில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாக கூறினார்கள் **(L4, L5, DISC PROLAPSE)** இதற்கு சில மருந்துகளையும், இடுப்பில் போட்டு கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள். இருப்பினும் வலி தீரகவில்லை. பின்பு ஆப்ரேஷன் **(Operation)** செய்தால் குணமடையும் என்று கூறினார்கள் அப்பொழுது **"MARC HERBAL CARE(P)LTD."** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் கண்டு நானும் எனது கணவரும் அங்கு சென்றோம். டாக்டரின் ஆலோசனைபடி அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டீசை (Poultice) வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப் பிறகு தற்பொழுது எனது வலிகள் அனைத்தும் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன். நன்றி.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டீசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டீஸ், ஸ்பாண்டிலைட்டீஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க இப்போதே தொடர்பு கொள்க. தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்**
32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**



## தும்புரு




மேடை ஜோடனை பிரமாதம். அரங்கை இருளில் மூழ்கடித்து விட்டு மேடைக்கு மட்டும் வெளிச்ச மூட்டி வீடியோ எடுத்துக்கொண்டிருந்தார்கள். பச்சை நிற குர்தாவில் பளிச்சென்று தெரிந்த ஓர் இளைஞர் பாடினார். எல்லாம் ஜோராய்த்தான் இருந்தது - இசையைத் தவிர!

வி.கே. மணிமாறன் அன்று தம்பூரா இல்லாமல் கச்சேரி செய்ய முற்பட்டது ஒரு சோதனை முயற்சியா என்பது தெரியாது. ஆனால், நிச்சயமாக அது ரசிகர்களுக்குப் பெரும் சோதனையாக முடிந்தது! வெறும் எலக்ட்ரானிக் சுருதிப் பெட்டியுடன் அவர் பாட ஆரம்பிக்க, என்ன சுருதியில் பாடுகிறார் என்பதே சற்று நேரம் புரியவில்லை. வயலின் 'போ' போட ஆரம்பித்ததும் இந்தக் குழப்பம் தீருவதற்குப் பதிலாக அதிகம்தான் ஆயிற்று!

இதைப் பற்றிய கவலையேதுமின்றி வாதாபி கணபதியை விச்ராந்தியாக அழைத்துப் பாடிக் கொண்டிருந்தார் மணிமாறன். வழக்கமான காலப் பிரமாணத்தில் இல்லாமல் ஒரு ஸெமி ஸ்லோ மோஷனில் பிடித்த அதே ஸ்பீட்தான் கச்சேரி நெடுக.

அடுத்து மணிமாறன் பாடியது 'வருவாரோ வரம் தருவாரோ...' அழகான தமிழ்ப் பாட்டு; அழகான ராகம் - 'சாமா'. அந்த ப்ருகா பிடிகளும் அவ்வளவு கலபத்தில் 'வருவோமோ? வரம் தருவோமா?' என்று அவரைப் படுத்தியபாடு இருக்கிறதே... அது பரிதாபக் கதை!

இந்த லடாயை நாம் மறக்கும்படி செய்தவர் ம்ருதங்க வித்வான் கணபதி ராமன். (பின்னால் மிக ரஞ்சகமாகத் தனி யாவர்த்தனமும் வழங்கினார்)

அடுத்து ஆனந்த பைரவியில் 'மரிவேரே' பாடினார் மணிமாறன். அந்த ராகத்துக்குரிய அழுத்தத்தைக் கொடுத்து இம்முறை காப்பாற்றியவர் வயலின் சி.ஏ. ராஜசேகர்.

சினிமா பின்னணிப் பாடகர் போன்ற 'மிதக்கும்' குரல் மணிமாறனுக்கு. கல்கத்தா கே.எஸ். கிருஷ்ணமூர்த்தியின் மாணவர் என்றாலும் கர்நாடக சுத்தத்துக்கு முக்கியத்துவம் தராமல் மெல்லிசையை எட்டிப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார்.

'இந்த ராகத்தை நான் எப்படித் தருகிறேன் பார்' என்பது ஓர் அணுகுமுறை. 'இந்த ராகத்தில் என்னவெல்லாம் இருக்கிறது பார்ப்போமா?' என்பது இன்னொரு அணுகுமுறை.

• சங்கீதா

ஆலாபனையில் இரண்டாவது அணுகுமுறையைக் கையாண்டால் ரசிகர்கள் கலைஞருடன் கை கோத்து கச்சேரியில் வலம் வருவார்கள். மணிமாறனின் கரஹரப்ரியா ஆலாபனையின்போது சபையில் ஒரு தலை கூட ஆடவில்லை. ரசிகர்கள் அதிகமில்லை என்பது அவரை உற்சாகமிழக்கச் செய்திருக்கலாம். ஆனால் பாலமுரளி கிருஷ்ணா முதல் வரிசையில் அமர்ந்திருந்தாரே, அதுவே பெரிய உற்சாகத்தைத் தந்திருக்க வேண்டாமோ? (எம்.பி.கே. டிரஸ்ட் நடத்திய கச்சேரி.) நிரவலைத்தான் கல்யாணச் சாப்பாட்டில் கடலைப் பருப்பு கோசுமல்லி போல் பெயருக்கு வழங்கினார் என்றால், கற்பனை ஸ்வரங்களிலுமா வறட்சி...?

மணிமாறனின் சொத்து – குரல் இனிமை. அது பயன்பட அவர் இன்னும் நிறைய **உழைக்க** வேண்டும் என்று அன்றைய கச்சேரி தீர்ப்புச் சொன்னது!

**'யா**ரங்கே' கொஞ்சம் வழிவிட்டு நில்லுங்கள்! இசையுலகில் ஓர் இளவரசி பிரவேசிக்கிறார்!' – தும்புரு சும்மா பரபரப்புக்காக எழுதுகிறார் என்று ஒதுக்காமல், சங்கீதாவை ரசிகர்கள் கட்டியம் கூறி வரவேற்கத் தயார்!

சுதா ரகுநாதனின் சிஷ்யை என்பதால் மட்டுமல்ல;

கர்நாடக சங்கீதத்துக்கு வசதியாக கனமான குரலமைப்பு பொருந்தியவர் என்பதால் மட்டுமல்ல;

புஸ்வாணப் பொறிகள் போல் பொங்கிச் சொரியும் பிருகா பிடிகள் வழங்குகிறார் என்பதால் மட்டுமல்ல;

இனிமையும் காத்திரமும் ஆரோக்கியமான சதவிகிதத்தில் இணைக்கிறார் என்பதால் மட்டுமல்ல...

இதற்கெல்லாம் மேலாக, சங்கீதா கிருஷ்ணமூர்த்திக்கு அழுத்தமான ராக ஞானம் இருப்பதால்!

நாரத கான சபாவின் 'ப்ரீ – சீசன்' கச்சேரியில் சங்கீதா பாட, மினி அரங்கம் ஹவுஸ்ஃபுல்!

மோகன வர்ணத்தில் ஆரம்பித்தபோது தெரிந்த இலேசான படபடப்பும் தயக்கமும் மெள்ள மெள்ள விலகி, ஓர் அழகான கச்சேரிக்கு வழி விட்டன.

ஸ்ரீமகா கணபதே, அதற்குப் பொருத்தமான கற்பனை ஸ்வரம், ஆனந்த பைரவியில் அழுத்தமாக மரிவேரே, தர்மவதியில் இளகியோடும் பஜனசேய ராதா, விறுவிறுப்பான சிட்டஸ்வரத்துடன் ராகா சசிவதனா, சங்கராபரணத்தில் கம்பீரமாக ஸ்வரராகசுதா என்று கச்சேரி அமைப்பு மிக கவனமாகத் திட்டமிடப்பட்டிருந்தது.

இவ்வளவு கவனமாகப் பாடுபவருக்கு சபா நிர்வாகிகளும் கவனமாகப் பக்க வாத்தியம் தேர்வு செய்தாலென்ன! (பெரும்பாலும் அவர்கள்தான் பக்கவாத்தியத்தைத் தீர்மானிப்பதாகத் தெரிகிறது)



• மணிமாறன்

ஆரம்ப வித்வானென்றாலும் அருணோதயம் போல் திறமையுள்ளவர் என்று கண்டால் அனுசரணையான பக்கவாத்யம் போட்டு, கச்சேரியின் பரிமாணத்தையே மாற்றி விடலாம். வயலின் நாகை ஸ்ரீராமும் சரி, ம்ருதங்கம் ஸ்ரீசுந்தர் குமாரும் சரி, தனி வாசிப்பில் மிளிர்ந்த அளவுக்கு சேர்ந்திசைப்பதில் பிரகாசிக்கவில்லை.

ஆலாபனைக்கு அழகாக ஸ்வரூபம் கொடுத்து, கிருதியின் உணர்வைக் கொண்டு வர முயல்வது சங்கீதாவின் பலம்.

ஆனால் கீர்த்தனை பாடாந்திரத்திலும் உச்சரிப்பிலும், வார்த்தைகளைப் பிரிப்பதிலும் கவனம் இல்லாததால் கிருதிகள் ஆலாபனை அளவுக்கு சோபிக்கவில்லை. 'சதா நம்மிதி' என்பது 'சதா நம் மிdhi' என்றும் 'சுக ச்யாமள' என்பது 'சொக' (சோக?) ச்யாமள என்றும் ஒலிக்கும்போது எழும் விபரீத அர்த்தங்கள் ரொம்ப கஷ்டப்படுத்துகின்றன.

ஸ்வரம் பாடுவதிலும் பிரமிப்பூட்டும் தீர்மானம் வைத்து, அதை முடிப்பதிலும் மேற்கொண்டுள்ள கவனமும் முயற்சியும் கீர்த்தனைகளைக் கச்சிதப்படுத்துவதிலும் செலுத்தப்படுமானால், நிரவலிலும் அது எதிரொலிக்கும், ஹ்ருதய பாவம் வலுப் பெறும், மனோதர்மமும் மேன்மையுறும். இதெல்லாம் நடந்துவிட்டால் சங்கீதா கிருஷ்ணமூர்த்தி குருவை விஞ்சக்கூடிய சிஷ்யையாக எதிர்காலத்தில் உருவாக வாய்ப்பிருக்கிறது.

இப்படி எழுதியதற்காக சுதா ரகுநாதன் கோபித்துக் கொள்ளப் போகிறாரா என்ன...!

# தெய்வ தரிசனம் – 8

இந்தக் காலத்துக் குழந்தையிடம் சூரியனை ராகு என்ற பாம்பு விழுங்குவதால் தான் கிரஹணம் ஏற்படுகிறது என்று சொல்லிப் பாருங்கள். "ஐயே! பாட்டி! உனக்கு ஸ்கூல்லே சொல்லித் தரலையா? நம்ம எர்த்துக்கும் சூரியனுக்கும் நடுவிலே சந்திரன் வர்றது. அதுனாலே சூரியன் சித்தே மறையறது. அதைப் போய் பாம்பு முழுங்கிடுத்து என்கிறாயே!" என்று சொல்லிச் சிரிப்பார்கள். புராணக் கதைகள் சொல்லும் போது இந்த அனுபவம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

இருந்தாலும் கதைகள் எப்போதும் சுவாரஸ்யமாகத்தான் இருக்கின்றன. ஸ்ரீமந் நாராயணனும், கைலாஸபதியும் சேர்ந்து திருவிளையாடல் புரிந்த கதை அமிர்த மதனம். வைகுண்டபதி கூர்மாவதாரம் எடுத்து மந்தர மலையைத் தூக்கினார் என்றால் கைலாஸபதி அப்போது உண்டான ஆலகால விஷத்தை விழுங்கி அண்ட சராசரங்களையும் காத்தார்.

அமிர்த ஸஞ்ஜீவினி மந்திரம் பலிக்காமல் போகவே தேவர்கள் மீண்டும் அமரத்துவம் பெற என்ன செய்வது என்று யோசித்தார்கள். திருப்பாற்கடலைக் கடைந்தால் அமிர்தம் திரண்டு வரும் என்று அறிந்து கடைவதற்கு முன் வந்தார்கள். பள்ளி கொண்ட பரந்தாமன் தன் இருப்பிடத்தைக் காலி செய்தார். தேவர்களுக்குத் தங்களால் மட்டும் கடைய முடியாது என்று தெரிந்து விட்டது. அசுரர்களை அழைத்தார்கள். அமிர்தம் பெறும் ஆசையால் அவர்களும் ஒத்துழைத்தார்கள். பாவம் வாஸுகி, ஆதி சேடனின் தம்பி. அது தானாகவே கயிறாக இருக்க முன்வந்தது. மத்துக்குத்தான் மந்தர மலை இருக்கிறதே. அதைத் தூக்கிக் கொண்டு வந்து போட்டார்கள். மலை பாற்கடலில் மூழ்கி விட்டது. எல்லோரும் சேர்ந்து வைகுண்டநாதரைப் பிரார்த்திக்க, அவர் ஆமை வடிவமாக நீரில் இறங்கி மலையைத் தாங்கினார். வாசுகியைச் சுற்றிக் கடலைக் கடையத் தொடங்கினார்கள். எத்தனையோ அதிசயப் பொருள்கள் கடலிருந்து தோன்றின. மகாலக்ஷ்மி உதித்தாள். சந்திரனே அப்போதுதான் தோன்றியதாம்.

பிரஹலாதனுக்கு ஸிம்ஹிகா என்று ஒரு அத்தை இருந்தாள். விப்ரஸித்தி என்ற அசுரனின் மனைவி ஸிம்ஹிகாவின் புதல்வன் ஸைம்ஹிகேயன். (சுவர்பானு என்றும் சொல்கிறார்கள்.) ரொம்பக் கவனம் உள்ளவன். கெட்டிக்காரன். தேவர்கள் அமுதம் கிடைத்தாலும் அசுரர்களுக்குத் தராமல் ஏமாற்றி விடுவார்கள் என்று ஊகித்து விட்டிருந்தான்.

அப்படியே நடந்தது. மகாவிஷ்ணு மோகினியாக உருவம் பூண்டு அசுரர்கள் மயங்கித் தடுமாறிய நிலையில் தேவர்களுக்கு மாத்திரம் அமுதத்தை வழங்கிக் கொண்டிருந்தார். ஸிம்ஹிகேயன் பார்த்தான். தேவர்களைப் போல் உருமாறி, சூரியனுக்கும் சந்திரனுக்கும் நடுவே வந்து உட்கார்ந்தான். மோகினி அமிர்தத்தைக் கொடுத்துக்

• திருநாகேஸ்வரம் கோயில்



கொண்டே வரும்போது இந்த அசுரனும் வாங்கி விழுங்கினான். சூரியனும் சந்திரனும் ஜாடை காட்டவே மோஹினி தன் கையிலிருந்த கரண்டியால் அவனை அடித்தாள்.

# யோக நிலை தரும்



* ராகு - உத்ஸவர்

ஸிம்ஹிகேயன் தலை துண்டிக்கப்பட்டு விழுந்தது. ஆனாலும் அமுதம் உண்டு விட்ட படியால் தலையிலிருந்து பாம்பு உடல் வளர்ந்தது. உடலிலிருந்து நாகத்தின் தலை எழுந்தது. இரட்டையர்களாகிய இவர்களை ராகு – கேது என்று அழைக்கிறோம். இவர்கள் இருவரும் ஆத்திரத்துடன் சூரியனையும் சந்திரனையும் துரத்தினார்கள். பயந்து போன சூரிய, சந்திரர்கள் சிவபெருமானிடம் அடைக்கலம் புகுந்தனர். ராகு கேது இருவருக்கும் இழைக்கப்பட்டது அநீதிதானே? சிவபெருமான் மனம் இரங்கி அவர்களிருவருக்கும் கிரஹ பதவி அளித்தார். அதோடு சூரிய சந்திரர்களைச் சற்று நேரமேனும் மறைக்கும் வல்லமையும் தந்தார்.

"அர்த்தகாயம் மஹாவீர்யம்
சந்த்ராதித்யவிமர்த்தனம்
ஸிம்ஹிகா கர்வ ஸம்பூதம்
தம்ராஹும் ப்ரணமாம்யஹம்"

என்று பாதி சரீரமுடையவராக இருந்தபோதிலும் மகத்தான வல்லமை உடையவர் ராஹுபகவான் என்று நவக்ரஹ ஸ்தோத்ரம் அவரை வணங்கச் சொல்கிறது.

## ஆனந்தி

தீக்ஷிதருடைய கிருதியில் "கருணையுடையவர் நான்கு கரங்களுடையவர், வாளும் கேடயமும் தரித்தவர், நீல ஆடை உடுத்தியவர், கோமேதகத்தை அணிந்தவர், சனிக்கும் சுக்ரனுக்கும் நெருங்கிய நண்பர், குரு குஹனுக்கு மகிழ்ச்சியளிப்பவர்" என்று வருகிறது.

இந்த ராஹுகிருதியின் ராகம் மனோஹரி. ராஹு மனதுக்கு மகிழ்ச்சி தருபவர் என்று முத்துஸ்வாமி தீக்ஷிதரே சொல்லிவிட்டார்!

ராஹுவைத் துதித்தால் ஞானம் பெறலாம். இவருடைய வாகனம் சிங்கம். பாப மூட்டைகளை அனுபவித்து அவற்றிலிருந்து நாம் விடுபடவே இவர் மனித குலத்தில் பிறந்தவர்களுக்குக் கஷ்டத்தைத் தருகிறார். கர்மாவை நாம் அனுபவித்துத் தீர்க்க வேண்டுமே. அதற்கு உதவி செய்கிறார் என்று சொல்லலாம். சிறிது நேரம் சூரிய சந்திரர்களைப் பீடித்தாலும் உடனே விலகி ஒளிவீசச் செய்து விடுகிறாரே! அமாவாசை தினத்திலும் சனிக்கிழமைகளிலும் அரச மரத்தை வலம் வந்து அரச மரத்தடியில் பிரதிஷ்டை

# ராகு பகவான்

செய்த நாகங்களை வழிபட்டால் வியாதியோ கிலேசமோ தீர்ந்து விடும் என்று பெரியோர் சொல்கிறார்கள்.

**ரா**ஹு சிற்ப சித்திரப் பிரியர். உளுந்து இவருக்கு இஷ்டமான தானியம். உளுந்தை தானம் செய்வதால் ராஹுவை மகிழச் செய்கிறோம்.

சுவர்பானு, கரும்பாம்பு, அரவு, அகி, யோககாரகன் என்றெல்லாம் பெயர்களை உடையவர்.

தாழம்பூவின் மகரந்த சந்தனம் அணிபவர். விஷக்கடியால் ஏற்படும் துன்பத்தைப் போக்குபவர்.

கரிய உடலும் கறுப்பு ஆடையும் உடையவர் என்கிறது இன்னொரு நூல். புகைநிற ஆடை மந்தார புஷ்பம் இவருக்கு உரியது. சமித்து அருகம்புல். உலோகம் ஈயம். எட்டு குதிரைகள் பூட்டிய தேரில் மேருவை அப்பிரதட்சிணமாகச் சுற்றி வருபவர். ராகுவை சிவபக்தன் எனவும் விஷ்ணு பக்தன் எனவும் கூறுகிறார்கள்.

அபிதான சிந்தாமணியில் பார்த்தால் "சண்முக சேனா வீரன். விப்ரசித்திக்கு சிம்ஹிகையிடம் பிறந்த அசுரன். தவத்தால் கிரஹபதம் பெற்றான். அக்னிக்கு விகேசியிடம் பிறந்தான் எனவும் கூறுவர். ஆறு குதிரைகள் பூட்டிய தேர் உடையவன்" என்று ராஹுவைப் பற்றிப் போட்டிருக்கிறது. எப்படியிருந்தாலும் கதைகள் சிறிது சிறிது வித்தியாசமாக இருந்தாலும் ராஹுவை நாம் நிழல் கிரஹம் என்று நம்புகிறோம். ராஹுவின் அருள் பெற்றால் அரச பதவி உண்டாகும். அது மட்டுமல்ல. ராஹு பகவான் குண்டலினிப் பாம்பின் அதிதேவதை. அவர் அருள்சுரந்தால்தான் மூலாதாரத்து மூண்டெழுகனலான குண்டலினி சக்தியை மேல்நோக்கி எழுப்பி ஸஹஸ்ராகார சக்கரத்தில் நிறுத்தி சந்திர மண்டலத்திலுள்ள குண்டலிப்பால் பருகலாம்!

"தெளிந்து தெளிந்து தெளிந்தாடு பாம்பே
சிவஞானம் கண்டோமென்று ஆடு
பாம்பே"

என்ற பாம்பாட்டிச் சித்தரின் பாடல் இதைத்தான் விளக்குகிறது. இது பாம்பாட்டியின் பாடல் அல்ல. நவக்ரஹங்களும் நமது உடலிலேயே தங்கள் சக்தியாக விளங்குவதாக ஐதீகம்.

ராஹுவுக்கு இரு மனைவியர். ஸிம்ஹி சித்ரலேகா என்றும், நாகவல்லி நாககன்னி என்றும் சொல்கிறார்கள்.

**ஸ்ரீ** காளஹஸ்தி தலத்தை ராகு- கேது இவர்களுடைய தலமாக வழிபட்டு வருகிறார்கள். காளஹஸ்தீச்வரரை ராகுவும் கேதுவும் ஸ்தாபித்து வழிபட்டார்களாம். இவர்களுடைய யந்த்ரங்களை அங்கே பிரதிஷ்டை செய்திருக்கிறார்களாம்.

ராஹு பகவானுடைய சிறப்புத் தலம் என்று அன்பர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று ராகு காலத்தில் வழிபடும் இடம் திருநாகேச்வரம்தான்.

ஞாயிற்றுக் கிழமை நாலரை மணியிலிருந்து ஆறு மணி வரை திருநாகேச்வரத்தில் ஒரு திருவிழாவே நடக்கிறது. மெய்யாகவே ராஹு பகவானுக்கு நடக்கும் அபிஷேக அலங்கார பூஜைகளைப் பார்த்து வியந்து, அதிசயித்து, ஆச்சரியப்பட்டு, விக்கித்துத் திகைத்துப் போனேன்.

"அடேயப்பா! ஒரு அபிஷேகத்துக்கு நபருக்கு ஐம்பது ரூபாய் டிக்கெட்டா?" என்று தோன்றியது. அபிஷேகத்தைப் பார்த்த பிறகு ஐம்பது ரூபாயில் எப்படி சமாளிக்கிறார்கள் என்று வியக்கும்படி இருந்தது. அது எத்தனை அண்டா பால்? எத்தனை அர்ச்சனைகள்!

திருநாகேச்வரம் கும்பகோணத்திலிருந்து ஐந்து மைல் தூரத்தில் இருக்கிறது. சேக்கிழார் ஸ்வாமிகள் திருப்பணிகள் செய்த கோவில் திருநாகேச்வரம். இந்தத் தலத்தில்

---

"போயும் போயும் நம்ம தலைவர்கிட்டே வந்து ஒருத்தன் ராகம் சம்பந்தமா சந்தேகம் கேட்பானா!"



"ஏன்... என்ன ஆச்சு?"

"தந்யாசிக்கும், சுத்த தந்யாசிக்கும் என்ன வித்தியாசம்னு கேட்டதுக்கு, குளிச்சுட்டுப் பாடினா அது சுத்த தந்யாசி... குளிக்காம பாடினா அது தந்யாசின்னு விளக்கம் குடுக்கறார்!"

– புளியறை கணேசன்

## பிரகாசமாக துவங்கும் புதிய ஆயிரத்தாண்டில்

## எங்கள் முதலீட்டாளர்களுக்கு உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!



**13.14%**

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு



**18.18%**

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.
* Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403

# தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719.
E-mail:tdfc@glasmd01.vsnl.net.in

* உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
* காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினகரனில் வெளியிடப்பட்ட
சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1560/DIS/99/ELEGANT

# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது
மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன்: 4915662
4914213

சேக்கிழார் மெய்ஞானம் பெற்றாராம்.

வெளிப்பிராகாரத்தில் ராகு பகவான் சந்நிதி இருக்கிறது. நான்கு மணிக்கே ஆல யத்தில் நல்ல கூட்டம். அவசரம் அவசரமாக அருள்மிகு நாகநாத சுவாமியைத் தரிசனம் செய்து விட்டு ராகுவின் சந்நிதிக்கு விரை கிறோம். எவ்வளவு பேர்! சந்நிதிக்கு நேரே பிராகாரத்தில் பக்தர்கள் உட்கார்ந்திருக் கிறார்கள். அத்தனை கூட்ட நெரிசலிலும் அமைதிகாக்கிறார்கள். உத்ஸவர் பல்லக்கில் வருகிறார். அவரை நாகாஸனத்தில் எழுந்தருளச் செய்கிறார்கள். அடுக் கடுக்காய் பால். தட்டுத் தட்டாய் பூஜைப் பொருள்கள். சட்டென்று திரை விலக எண்ணெய்க் காப்பு செய்யப்படுகிறது ராகு பகவானுக்கு. இரு பக்கமும் தேவியருடன் கம்பீர மாக அமர்ந்திருக்கிறார் ராகு பக வான். சற்று அவசரம் அவசரமாகச் செய்தாலும் நன்றாக எண்ணெய் பூசு கிறார்கள். சுத்த நீரால் அபிஷேகம். சந்தனம் முதலிய திரவியங்கள். பால பிஷேகம் தொடங்கினார்கள். சொம்பு சொம்பாக நிறுத்தாமல் அலுக்காமல் அண்டாக்களிலிருந்து பாலை எடுத்து எடுத்து ராகு பகவான் மீதும் நாக மனைவியர் மீதும் சொரிந்து கொண்டே இருக்கிறார்கள். ராகு பகவான் மீது வழியும் பால் சற்று நிறம் மங்கிக் கறுப்பாகத் தெரி கிறது. அமைதியாக அடியார்கள் இந்தக் காட்சியை கண்ணாரக் கண்டுகளிக்கிறார் கள். அபிஷேகம் முடிந்ததும் திரை போட்டு அலங்காரம். மிக விரைவாகச் செய்து முடிக் கப்படுகிறது. திரை விலகித் தீபாராதனை. பிறகு டிக்கெட் வாங்கிய அத்தனை பேருக் கும் உட்கார வைத்து பிளாஸ்டிக் பாட்டி லில் அபிஷேகம் செய்த பாலும், பிரசாதமும் தருகிறார்கள். ரொம்பக் கச்சிதமாக இதைச் செய்கிறார்கள். இடம் காலியாகும்போதே அடுத்த அபிஷேகத்துக்கு டிக்கெட் வாங்கிய மக்கள் வந்து குழுமி விடுகிறார்கள். முக்கிய மாக ஞாயிற்றுக் கிழமைகளில் ஆறு தடவை ராகு கால அபிஷேக ஆராதனைகள் நடை பெறுகிறதாம். அந்த விமரிசையைப் பார்த் தால்தான் நம்ப முடியும்.

**கோ**விலைச் சுற்றி வருவோம். அழ காகக் கட்டப்பட்ட கோவில்.

ஐந்து நிலைக் கோபுரத்தில் நுழைந்து உள்ளே சென்றால் விசாலமான பிராகாரம். இடது பக்கம் சூரிய புஷ்கரணி. பல விநா யக மூர்த்தங்கள். குட்டிக் கொண்டே உள்ளே போனால் வாகன மண்டபங்கள் உள்ள பிராகாரம். நவக்ரஹ ஸந்நிதி. இங்கே விளக்குகள் ஏற்றும் பணி நடக்கிறது. திருவிளக்கேற்றுவது என்பதும் நவக்ரஹங் களுடைய சந்நிதியில் விளக்குகள் ஏற்றும் சம்பிரதாயமும் இப்போது மிகப் பரவலாக இருப்பதைப் பார்க்கிறோம். ஒளி தரும் கிர ஹங்களுக்கு விளக்கேற்றி வைத்து சந்நிதி ஒளி பெறச் செய்தால் நமது வாழ்வும் ஒளி பெறும் என்ற நம்பிக்கை. அங்கேயே எண் ணெய்த் திரி போட்டு, எள் முடிச்சு வைத்து, அகல் விளக்குகளை விற்கிறார்கள். விளக் கேற்ற படிகள். எங்கும் எண்ணெய்ப் பிசுக்கு. புகை மணம்.

## வாட் அபவுட் மீ?!

***ப**டத்தைப் பார்த்தால் 'வாட் அபவுட் மீ?' என்று ஆனந்தா சங்கர் ஜெயந்த் கேட்பது போலில்லை..? அந்தத் தலைப்பிலான ஓர் ஆங்கிலப் படைப்புக்கு நடன வடிவம் தந்துள்ளார் ஆனந்தா சங்கர் ஜெயந்த்! ரொம்ப தத்துவார்த்தமான சப் ஜெக்ட்!*



*ஆனந்தா, சென்னை கலாக்ஷேத்ரா மாணவி. பரதநாட்டியம் போதாது என்று, ராமலிங்க சாஸ்திரியிடம் குச்சுப் புடியும் கற்றுக் கொண் டாராம். உஜ்ஜயின் 'நிஷாகத்தி' விழா முதல் திருவனந்தபுரம் சூர்யா ஃபெஸ்டிவல் வரை, நாடு முழுக்க நடனமாடி யவர். எகிப்து, எமி ரேட்ஸ் என்று நிறைய அயல் நாட்டு விஜயங்களிலும் வெற்றிதான். கிருஷ் ணம் வந்தே ஜகத் குரும், புத்தம் சரணம் கச்சாமிக்கும் நடன வடிவமைப்பு வழங்கியிருக்கிறார் ஆனந்தா! இவர் பெற்றுள்ள விருதுகள் பட்டியலில் கடைசியாகச் சேர்ந்திருப்பது கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸின் 'நடனமாமணி'. ஆனந்தா இந்திய ரயில்வே அதிகாரியும் கூட!*

– **சித்தார்த்**

சிவபெருமான் இந்தத் தலத்தில் நாக நாதராக விளங்குகிறார். நாகராஜன் சிவராத்திரி இரவில் குடந்தைக் கீழ்த்தோட்டத்திலும் திருநாகேச்வரத்திலும், திருப்பாம்பு புரத்திலும், நாகைப்பட்டினத்திலும் வழிபட்டாராம். இந்த நான்கு கோவில்களிலும் சிவபெருமானுக்கு நாகநாதர் என்ற பெயரே இருப்பது சிறப்பு.

ஈசன் இந்தத் தலத்தில் அர்த்தநாரீசுவரராகவும் இருக்கிறார். பிருங்கி முனிவர் தன்னைவிட்டு ஈசனை மட்டும் பணிந்ததால் கோபம் கொண்ட தேவி இங்கே வந்து தவம் செய்ததால் பாகம் பிரியாளாகும் பேறு பெற்றாள். எத்தனையோ மகான்களும், தேவர்களும், மெய்யன்பர்களும் வழிபட்டிருக்கிறார்கள்.

கோவிலின் சிறப்பு அது ஸோமாஸ்கந்த வடிவமாக இருப்பதுதான். இருபுறமும் முருகப் பெருமான், தேவியின் ஸந்நிதிகள் திகழ மத்தியில் நாகநாதர் வரம் நல்குகிறார். மூர்த்தி வடிவங்களிலேயே பரம மங்களமானது என்று போற்றப்படுவது ஸோமாஸ் கந்த மூர்த்தம். அன்பு மனைவி அருகிலிருக்க மகன் ஞானக் கந்தனைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கும் கோலம். மங்கலம் என்ற சொல்லுக்கே விளக்கமாக அமைந்தது ஸோமாஸ் கந்த வடிவம்.



தேவியின் மிக அழகான பெயர் பிறையணி வாணுதலாள் அம்மை. சுந்தரர் சூட்டிய தமிழ்ப் பெயர்.

தலவிருட்சம் சண்பக மரம். இது சண்பகக் காடாக இருந்ததாம். விநாயகருக்கும் சண்பக விநாயகர், சான்று விநாயகர் என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். ஷண்முகப் பெருமானின் திருக்கோலத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

முதல் பிராகாரத்தில் அறுபத்து மூவர், சேக்கிழார், அவர் தம்பி பாலறாவாயர். இவர்கள் காட்சி தருகிறார்கள்.

வெளிப்பிராகாரத்தில் அலைமகள், கலை மகள், பணி கீர்வாணியான கிரிகுஜாம்பாளின் தனிக் கோயில் இருக்கிறது. மூன்று தேவியரும் சேர்ந்து காட்சி தரும் கோலம் நமக்கு நம்பிக்கை அளிக்கிறது.

கலை, செல்வம் அருள் மூன்று வடிவமாகவும் இருப்பவள் ராஜராஜேச்வரியான அம்பிகை. இவர்கள் மூவரையும் ஒருசேரத் தரிசிக்கும் பாக்கியமும் இன்று கிடைத்திருக்கிறதே. ராஹு பகவானை வழிபட வந்ததால் கைமேல் பலன் கிடைத்து விட்டதே!

படங்கள் : வெங்கடேஷ்

---

**வி.எஸ். ராகவன்: 'நாடகக் கலா சிரோன்மணி'**

## சினிமாவுக்கு வந்தது எப்படி?

"எப்படி டிராமா ஃபீல்டுல இருந்து சினிமாவுக்கு வந்தீர்கள்?"

"49-50வாக்கில் ஒய்.எம்.ஐ.ஏ. ஃபைன் ஆர்ட்ஸ் செக்ஷன் நடத்தி வந்தார்கள். கோகலே ஹாலில்தான் நாடகங்கள் நடக்கும். தோட்டக்கார விசுவநாதனின் 'வைரமாலை'யில் அப்பா வேஷம் போட்டு நடித்தேன். அப்போ யங் ஏஜ்! அதைப் படமாக எடுக்க வைத்யா பிலிம்ஸ் வந்தபோது, என்னையே செலக்ட் பண்ணினாங்க. அப்புறம் சில சினிமாக்களில் நடிக்க ஆரம்பிச்சேன். ஆனா ஜெமினியோட 'ஒளிவிளக்கு'ல நடிச்சப்புறம்தான் நிறையப் படங்களில் நடிக்க வாய்ப்பு வந்தது. காரணம், எம்.ஜி.ஆர். 'ஒளிவிளக்கு'ல நான் பண்ணினது இன்ஸ்பெக்டர் ரோல். அவருக்கு அது ரொம்பப் பிடிச்சுப் போச்சு. அதனால பல படங்களில் ரெகுலரா எனக்கு வாய்ப்புகள் கொடுத்தார்."

"முதல்ல ஹிந்தி நாடகங்களில் கூட நடித்தீர்களே?"

"ஆமாம். 'சிக்கந்தர்'ல ஒரு சின்ன ரோல் பண்ணினேன். அதுதான் ஆரம்பம். அப்புறம்தான் தமிழ் நாடகங்களில் நடிக்க வந்தேன்..."

– எஸ்.வி.என்.

**ராஜ்மோகன் காந்தி, மகாத்மா காந்தி, ராஜாஜி என்ற இரு மாமனிதர்களின் பேரன். அமேதி தொகுதியில் ராஜீவ்காந்தி போட்டியிட்ட போது, ஜனதா தளம் கட்சி சார்பில் போட்டியிட்டவர். இப்போது தீவிர அரசியலிலிருந்து ஒய்வு பெற்று விட்டார். கூட்டணி ஆட்சி பற்றிய கருத்தரங்கம் ஒன்றில் கலந்து கொள்வதற்காக, அண்மையில் சென்னை வந்திருந்தார். கல்கிக்காக பேட்டி என்றதும் சந்தோஷமாகச் சம்மதித்தார். பேட்டியிலிருந்து –**

**கேள்வி** : மகாத்மாவின் இதயத்துக்கு மிகவும் நெருக்கமானவர் ராம். ஆனால் இன்று ராமர்தான் இந்த நாட்டின் மிகவும் சர்ச்சைக்குரியவர். இது குறித்து உங்களது கருத்து என்ன?

**ராஜ்மோகன்** : குண்டடிபட்டு விழுந்த பின், இறக்கிற போது கூட மகாத்மா கூறிய வார்த்தை ராம்! ராம் என்பது அவரவர் இஷ்டதெய்வத்தின் குறியீடு! ராம் என்பதை ஓர் இந்துக் கடவுளாக ஒரு சிலர் சித்திரிக்க முயற்சி செய்வதுதான் பிரச்னை. இந்துக்களும், மற்றவர்களும் காந்திஜி கூறிய ராம் என்பதன் உண்மையான பொருள் என்ன என்பதைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.



**கேள்வி** : இந்தப் பிரச்னைக்கு, நீதிமன்றங்களால் கூட கடந்த ஐம்பது ஆண்டுகளில் எந்த ஒரு தீர்வும் கூற முடியவில்லையே?

**ராஜ்மோகன்** : இதுகுறித்து நீதிமன்றங்கள் ஒன்றும் பெரிதாய்ச் செய்துவிட முடியாது. அனைத்துத் தரப்பினரும், ஒருவர் மீது ஒருவர் முழு நம்பிக்கை வைத்து, உணர்ச்சிகளுக்கு இடம் தராமல், பேசித்தான் தீர்த்துக் கொள்ள முடியும். சரித்திரத் தவறுகளைச் சரிசெய்வதாக நினைத்து செயல்படக் கூடாது. ராம், சக்தி வாய்ந்தவர். நமது முயற்சிகளால்தான் அவரைப் பிரச்னையிலிருந்து விடுவிக்கப்பட வேண்டும் என்பதே கிடையாது.

**கேள்வி** : இந்தப் பிரச்னைக்கு என்னதான் தீர்வு?

**ராஜ்மோகன்** : நாம், இருபத்தியோராம் நூற்றாண்டில் காலெடுத்து வைக்கப் போகிறோம். இந்த நூற்றாண்

# "காந்தியே வந்தாலும் இன்றைய இந்தியாவை மாற்றிவிட முடியாது!"

டின் சண்டை, மோதல்களையும் நம்முடன் எடுத்துக் கொண்டு போகக் கூடாது. பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டு அமைதியுடன் அடுத்த நூற்றாண்டுக்குப் போக வேண்டும். சம்பந்தப்பட்ட அனைத்துத் தரப்பினரிடமும், நன்னம்பிக்கையும், மாற்றுக் கருத்தை மதிக்கும் மனப்பான்மையும் இல்லாதவரை, எந்தவிதமான தீர்வுக்கும் எந்த மாதிரியான பார்முலாவையும் கொடுக்க முடியாது.

**கேள்வி** : ராஜீவ்காந்தியை எதிர்த்து, அமேதி தொகுதியில் போட்டியிட்டு, தோற்றுப் போனீர்கள். அதன்பின் தீவிர அரசியலிலிருந்தே விலகி விட்டீர்கள். இதற்கு என்ன காரணம்?

**ராஜ்மோகன்** : இந்த அரசியல் சூழ்நிலையைத் தனிமனிதனான என்னால் நல்லவிதமாக மாற்ற முடியவில்லை. அதனை மாற்றும்படியான திறமைசாலியாக- பலமானவனாக நான் இல்லை. எனவே, உருப்படியாக எதுவும் செய்ய இயலாமல் அரசியலிலேயே தொடர்ந்து ஈடுபடுவதற்குப் பதிலாக, வேறு ஏதாவது நல்லது செய்யலாம் என்று நினைத்தேன்.

**கேள்வி** : ஆனால், காந்திஜி என்ற தனி மனிதர்தானே இந்தியாவின் சரித்திரத்தையே மாற்றியமைத்தார்?

**ராஜ்மோகன்** : அது சரிதான். ஆனால் ஒரு மகாத்மாதானே இந்தியாவில் பிறந்திருக்கிறார். ஆண்டுதோறும் பல மகாத்மாக்கள் இல்லையே? அதே சமயம், ஒரு குழுவாக இணைந்து, நாட்டை மாற்ற நினைப்பவர்கள் செயல்பட்டால், அது சாத்தியம் என்றே நான் நினைக்கிறேன்.

**கேள்வி** : இந்த இலக்கை நோக்கி, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?

**ராஜ்மோகன்** : ஏராளமான மாணவர்கள் கூட்டங்களில் சொற்பொழிவாற்றுகிறேன். அவர்களைச் சிந்திக்க வைக்கிறேன். புத்தகங்கள் எழுதுகிறேன். என் லேட்டஸ்ட் புத்தகம் 'ரிவஞ்ச் அண்டு ரிகன்சிலியேஷன் - அண்டர்ஸ்டாண்டிங் சௌத் ஏசியன் பிராப்ளம்ஸ்.' என் இலக்கை நோக்கிய பணி தான் இதுவும். இந்தப் புத்தகத்தில், மகா பாரத காலம் தொடங்கி, இன்று வரையிலான பிரச்னைகளை அலசியிருக்கிறேன். இன்றைய சூழ்நிலையை ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டியதுதான் முதன்மையான அவசியம். அது பற்றிய விழிப்புணர்வைத் தான் நான் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறேன். இந்தப் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறேன்.

**கேள்வி** : சுதந்தரத்துக்குப் பின், காங்கிரஸ் கட்சியைக் கலைத்து விட வேண்டும் என்று காந்திஜி கூறினார். அது கடைப்பிடிக்கப்பட்டிருந்தால், இந்தியாவின் அரசியல் வேறு மாதிரியாக இருந்திருக்கும் என்று நினைக்கிறீர்களா?

**ராஜ்மோகன்** : காங்கிரஸ் கட்சியைக் கலைத்துவிட வேண்டும் என்று மட்டுமில்லை; அணுகுண்டு கூடாது. கிராமங்களின் முன்னேற்றம்தான் முதன்மையாக இருக்க வேண்டும். ராஷ்டிரபதி பவன், மக்களுக்குப் பணியாற்றும் மருத்துவமனையாக மாற்றப்பட வேண்டும் என்று இன்னும் பல கருத்துக்களைக் கூறியிருக்கிறாரே! ஆனால், யாரும் அவர் கூறிய எதையும் சீரியஸாக எடுத்துக் கொண்டு செயல்படவில்லை.

**கேள்வி** : மாபெரும் மக்கள் இயக்கமாக பெருந்தலைவர்களால் வளர்க்கப்பட்ட காங்கிரஸ் கட்சியின் இன்றைய நிலை காந்திஜியின் பேரன் என்ற வகையில் உங்களை வருத்தப்பட வைக்கிறதா? இந்த நிலைக்குக் காரணம் என்ன?

**ராஜ்மோகன்** : காங்கிரஸ் கட்சி, சென்ற தேர்தலை விட, இந்தத் தேர்தலில் மொத்தத்தில் ஒரு சதவீதம் கூடுதலாக வாக்குகள் பெற்றுள்ளது. எனவே, காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கு, காலப்போக்கில் குறைந்து கொண்டே வந்திருக்கிறதேயொழிய, முற்றிலுமாக மக்கள் மதிப்பை அது இழந்து விடவில்லை. மறுபடியும் காங்கிரஸ் கட்சிக்குப் புத்துயிர் அளிக்கப்பட வேண்டியது மிக



**"இப்பல்லாம் உன் வீட்ல சண்டை சப்தம் அதிகம் கேட்குதே!"**

**"என் மனைவியும், என் அம்மாவும் 'மிலெனியம் வார்' அறிவிச்சிருக்காங்க!"**

**– மிஸ்டர் எக்ஸ்**

அவசியம். மாநிலத் தலைமையை பலப் படுத்த வேண்டியது இதற்கு அவசியம். ஒரே ஒரு குடும்பத்தினரால் மட்டுமே காங்கிரஸ் கட்சியைப் பலப்படுத்தி விட முடியாது. கட்சியின் கடமைகளும், பொறுப்புகளும் பரவலாக்கப்பட வேண்டும்.

**கேள்வி** : மறுபடியும் அரசியலில் பிரவேசிக்கும் எண்ணமுண்டா?

**ராஜ்மோகன்**: இல்லை. எனக்கு வயதாகி விட்டது. (வயது 64.)

**கேள்வி** இன்றைய அரசியலில் இருக்கிற முக்கால்வாசிப் பேர் அறுபது வயதைத் தாண்டியவர்கள் தானே?

**ராஜ்மோகன்**: ஆனாலும் எனக்கு இஷ்டமில்லை. அடுத்த நூற்றாண்டில், இந்தியா முப்பது முதல் ஐம்பது வயதுக்குட்பட்டவர்களின் கையில் தான் இருக்கப் போகிறது. அவர்கள்தான் நாட்டின் தலை விதியை நிர்ணயிக்கப் போகிறார்கள்.

**கேள்வி** : காந்திஜியின் குடும்பத்தைச் சேர்ந்த யாருமே இந்திய அரசியலில் ஈடுபாடு கொள்ளாமல் போனதற்கு என்ன காரணம்?

**ராஜ்மோகன்** : அது தனிமனிதர்களின் முடிவு. ஒரு குடும்பத்தினர், தங்களால்தான் நாட்டைக் காக்க முடியும் என்று ஏன் நினைக்க வேண்டும்? மேலும், இன்று இந்தியாவுக்குத் தேவை ஒரு காந்தி இல்லை. அப்படி ஒரு காந்தி வந்தாலும் இன்றைய இந்தியாவை மாற்றிவிட முடியாது. நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான இளைஞர்கள் – ஆண்களும், பெண்களும், கைகோத்து தியாக மனப்பான்மையுடன் கடுமையாக உழைக்க முன்வர வேண்டும். அப்படிப்பட்டவர்கள் களமிறங்கினால், கிராமம் தொடங்கி, டெல்லி வரை மாற்றங்கள் நிகழும்.

**கேள்வி** : காந்திஜியைப் பற்றி பல்வேறு சமயங்களிலும், பலவிதமான சர்ச்சைகள், களங்கம் கற்பிக்கும் முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றனவே. அவை கண்டு நீங்கள் மனம் வருந்துகிறீர்களா?

## சினிமாவுக்கு மட்டும் நோ!

**இ**ந்திப் பட உலகில் இது வாரிசுகளின் காலம். நேற்றைய ஸ்டார்களின் வாரிசுகள் இப்போது சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஹேமமாலினியின் மகள் ஈஷாவையும் நடிக்கக் கூப்பிடுகிறார்கள். ஆனால் தம் மகள் நடிக்க மாட்டாள் என்று உறுதியாகக் கூறி வருகிறார்கள் அம்மா ஹேமமாலினியும் அப்பா தர்மேந்திராவும். அம்மாவும், பெண்ணும் எந்த சினிமா அல்லது நடன நிகழ்ச்சிக்குச் சேர்ந்து போனாலும் பெண் சினிமாவில் நடிப்பதுபற்றி அனைவரும் தவறாமல் கேட்கிறார்கள். ஈஷா பற்றி இன்னொரு நியூஸ்: அவருக்கு குச்சிப்புடி நடனம் தெரியும். மேடை புரோகிராம்கள் தருகிறார். ஆனால் சினிமாவுக்கு மட்டும் நோ!

**– சி.எம்.**



**ராஜ்மோகன்** : அவரது வாழ்நாளின் போதே, பல சர்ச்சைகளும், களங்கம் கற்பிக்கும் முயற்சிகளும் நடந்து கொண்டுதானே இருந்தன. அவரது மரணம் கூட இயற்கையான ஒன்று இல்லையே! அனைத்து விமர்சனங்களையும் தாங்கிக் கொண்டு தானே மகாத்மா வாழ்ந்தார். அவர் கருத்துச் சுதந்தரத்தைப் பெரிதும் மதித்தார். நானும் கருத்துச் சுதந்தரத்தை மதிக்கிறேன். ஒன்றிரண்டு நாடகங்கள் மூலம் காந்திஜியின் பெயருக்கோ, அவர் இந்த நாட்டுக்கு , இந்த மக்களுக்கு ஆற்றிய பணிகளுக்கோ, அவர் போதித்த அஹிம்சை தத்துவத்துக்கோ, யாராலும் எந்தவித களங்கத்தையும் ஏற்படுத்தி விட முடியாது என்று நான் ஸ்திரமாக நம்புகிறேன்! அதனால் அப்படிச் செய்பவர்களின் வாய்க்குப் பூட்டுப் போட வேண்டிய அவசியம் இல்லை!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படம் : **ஸ்ரீஹரி**



# சும்மா கொடுத்தது

**ப**தினாறுக்குப் பத்தில் அமைக்கப்பட்டிருந்த அந்தக் குடிசையில் அடுப்புடன் அல்லாடிக் கொண்டிருந்தாள் பூவாயி. பேருக்கேத்தாப்பல கிராமத்து அழகு கொட்டிக் கிடந்தது உடம்பில். பத்து வயசில மவன் இருந்தும் தெனமும் பூவாயியை அணைக்காம தூங்குனதில்ல தூங்காணி.

''சனியன் புடிச்ச வெறவு எறிவணாங்குது. இந்த ஆம்பளயப் போய் காஞ்ச வெறவா கட்டிட்டுவான்னா, ஈர வெறவ கொண்டாந்து இங்க நானுல்ல லோலுப் படறேன்...'' புலம்பிக் கொண்டே இரும்புக் குழலை அடுப்பில் நுழைத்து மூச்சை இழுத்து சீராக ஆனால் பலமாக ஊதினாள் பூவாயி.

ஈரவெறவில் ஊத்தியிருந்த சீமண்ணைக்கு மோப்பம் பிடித்த நெருப்பு 'தீ'யாக மாறியது.

''ம்மாவ்.... ம்மாவ்''

''என்னடா?''

''ம்மோய் அது வந்து....!''

''சொல்லித் தொலடா.''

''நம்மாளுங்கெல்லாம் சாமிய தூக்கிட்டு வெக்காயி கோயிலு வழியா ஊரச் சுத்தி போவனுமின்னு சொல்லிகிட்டத கேள்விப் பட்டு குடியானவங்க கும்பலா வந்துருக்காங்க.''

''கடவுளே...''

''முன்னயாட்டம் நடக்கப் போவுதுன்னு எல்லாரும் கூடிக் கூடி பேசிக்கிறாங்கம்மா.''

பையனின் கண்ணில் உறைந்த காட்சி பூவாயியையும் தொற்றிக்கொண்டது.

வாய் தானாக ''ஐயோ''வென்று அலறியது.

கண்கள் தானாக, குடிசையின் கூரையை நோட்டம் விட்டது. விட்டம் மொதக் கொண்டு எல்லாமே இருட்டு அப்பியது போல் புகை படர்ந்து, ஆனாலும் புதுசாகவே காட்சியளித்தது.

போன தடவ குடியானவங்க வச்ச தீயில் ஒரு குடிசை கூட மிஞ்சவில்லை. அங்கேயும் இது போல சேதமென்றாலும் கடனவுடன வாங்கி சமாளித்துக்கொண்டார்கள்.

இப்பவும் இதோ....?

**அ**கப்பையில் கம்மஞ் சோத்தை மொண்டு கழிச்சட்டியில் போட்டு உருட்டி உருட்டி குண்டானில் போட்டுக்கொண்டே கேட்டாள் பூவாயி.

''எப்பவும் போறவாக்குல சாமிய கொண்டு போயிட்டு வந்துட வேண்டியதான, ஏய்யா இப்படிப் பண்றீங்க?''

''யார்ரீ இவ ஒன்னு, எட்டி ஒதைச்சன்னா தெரியுமுல்ல சேதி. ஆளாளுக்கு நாட்டாமைப் பண்றானுங்க. எவங் கேக்கறான், இவ என்னமோ புதுசா சொல்ல வந்துட்டா.''

''அப்ப இப்போதிக்கு ஓயாதா...''

''ஒரு எழவும் தெரில...'' வேகமாய் வெளியேறினான் தூங்காணி.

மொதல்ல நடந்த சண்டக்கே ஒவ்

**கீரா. மூர்த்தி**

வொருத்தருக்கும் மூழி பிதுங்கிப் போயிருந்தது. அவன் அவன் கடனவுடன வாங்கி இப்பத்தான் கொஞ்சமா வீட்டை வேலை செய்ய ஆரம்பிக்க, ஊருல வேற இப்பத்தான் மழை பேஞ்சி வெள்ளாமை கண்டு சனங்க கையிலயும் நாலுக் காசு புரள ஆரம்பித்திருந்தது. ஊரும் இப்பத் தான் சகஜமா பழக ஆரம்பிச் சிருந்தது. என்னதான் கெவரு மண்டு சட்டம் போட்டாலும் ஊரு கட்டுப்பாட்ட மீறி யாரும் சேரி ஆளுங்களுக்குக் குச்சி மிட்டாய் கூட கொடுக்காமதான் இருந்தாங்க. போகப் போகத்தான் எல்லாஞ் சரியாயி, சேரி ஆளுங்க ஊருக்குள்ள பொழங்க ஆரம்பிச் சிருந்தாங்க.

''சாமி தூக்கிட்டு போயி சாதில ஓசரணுமின்னு நெனைக் கிறவனுங்க கெவுரு மண்டு குடுக்கற சலுவயுமில்ல ஒதுக் கணும். நாங்க இன்ன சாதின்னு சொல்லி என்னைக்கு நாம சலுவ கேக்க ஆரம்பிச்சமோ அன் னிக்கே நாம கீழன்னு ஆயிப் போச்சி. அப்புறம் என்னத்துக்கு வீராப்புங்கறேன்?''

பூவாயிடம் பக்கத்து வீட்டு நல்லிதான் புலம்பிக் கொண்டிருந் தாள்.

போன தடவ நடந்ததில நல்லிக்குத்தான் ரொம்ப பாதிப்பு.

"ஏ பூவாயி, கொஞ்சம் சோறு ஊத்து புள்ள!"

"என்னா நல்லி பண்றது. நம்ம பொழப்பு உண்டு நாம உண் டுன்னு கெடக்க, நேரம் நம்மள எப்டில்லாம் இழுத்துக் கொண் டாந்து உடுது பாரு. நம்ம பாட் டுக்கு கெடக்க நாலெழுத்து படிச்சிப்புட்டு வெட்டியா வேல இல்லாம வேதாந்தம் பேசிக்கிட்டு அலயற பசங்க, ஊரயே ரெண்டு பண்றாங்க.''

''இம்புட்டு காலமா இப்டி யெல்லாம் நடக்கலியேண்ணே."



## புது மிலெனியத்தில் கூடுதல் சட்டங்கள்!

**சிட்டிஸன் (Citizen) என்றால் தெரியும். நிட்டிஸன் (Netizen) என்றால்? உலகம் முழுவதிலும் இன்டர்நெட் என்னும் வலைப் பின்னல்களை வைத்திருப்பவர்களுக்குப் பெயர்தான் நிட்டிஸன்ஸ்! 2010-ல் டெலிபோன் இருக்கிற எல்லா வீடுகளிலும் இன்டர்நெட் வசதி வந்து விடும் என்கிறார்கள். இந்த நிலையில் இன்டர்நெட்டில் ஆபாசம் புகுவது, இன்டர்நெட் மூலம் செய்யப்படும் எதிரியின் வியாபாரத்தைக் கெடுப்பது போன்ற குற்றங்கள் நிகழுமல்லவா! அதைத் தடுப்பதற்கும் அப்படிப்பட்ட குற்றவாளிகளைத் தண்டிப்பதற்குமான சட்டத்துக்குப் பெயர்தான் Cyber Laws. நம் நாட்டிலும் இது விரைவில் அமலுக்கு வரப் போகிறது. இ.பி.கோ மாதிரி புது மிலெனியத்தில் இதையும் நாம் தெரிந்து கொள்வது அவசியம். இல்லையனில் நாம் ஒரு நல்ல நிட்டிசனாக இருக்க முடியாமல் போய்விடும்!**

***(சைபர் லாஸ் (Cyber Laws), ஆசிரியர்: விஜயசங்கர், உஜ்வலா கன்சல்டென்ட்ஸ், பிரைவேட் லிமிடெட், 37,20-வது மெயின்ரோடு, பி.எஸ்.கே. ஸ்டேஜ்-1, பெங்களூர் – 560 050. விலை ரூ. 180/–)***

***— ப்ரியன்***




''அந்தப் பக்கமும் தூண்டுறதுக்குன்னு சில்லுவண்டு பசங்க இருக்கானுங்க, என்னா பண்றது?''

''சோறு ஊத்தி வெச்சிருக்கேன் போயி சாப்புடு'' என்றாள் பூவாயி.

பருக்கச் சோத்தோட கம்மஞ் சோத்தையும் கரைத்து, கரண்டியில் இருந்த புளிச்சக் கீரையை நாக்கில் வில்லையாக போட்டுக் கொண்டு 'மடமட'வென சோற்றை வாயில் ஊற்றினான் தூங்காணி.

''யம்மோய்... எனக்கு பள்ளிடுத்துல நோட்டுல்லாம் குடுத்தாங்களே'' என்று வாயெல்லாம் பல்லாகச் சொன்னான் குமாரு.

''அதுக்கென்னடா இப்போ...''

''எங்கூட படிக்கிறான்ல ராமு கவுண்டரு மவன் சிவா. அவனுக்கு ஒண்ணுமே குடுக்குலம்மா. பாவம்ம்மா. அவன் உம்னே இருந்தானா, எனக்கே பாவமா போச்சி.''

''அப்புறம்?''

''ஏண்டா ஒனக்கு குடுக்குலன்னு கேட்டதுக்கு அவன் கவுண்டராம். அதுனால குடுக்குலடான்னு சொன்னாம்மா.''

சரமாகத் தொண்டையில் இறங்கிக் கொண்டிருந்த கம்மஞ்சோறு பாதியிலேயே நின்றது தூங்காணிக்கு. அருவருப்பாய் உணர்ந்தான். இது வரை வயிற்றுக்குள் இறங்கியது கூட கசப்பது போலிருந்தது.

சோற்றுச் சட்டியை விட்டு எறிந்து விட்டு குடிசையின் மூலையில் கிடந்த மாடு ஓட்டும் தார்க்குச்சியை எடுத்தான்.

''ஏண்டா கருவாணிப் பயலே, நோட்டு குடுத்தா வாங்குவியாடா?''

வேகமாய்ச் சுழன்ற தார்க்குச்சி குமாரின் முதுகில் தைத்தது. அப்பொழுதுதான் சட்டையைக் கழட்டி விட்டிருந்த பிஞ்சின் முதுகில் இரத்தக் கோடு ஒன்று உப்பளமாக மேடு போட்டிருந்தது.

''தவறு செய்யுங்காட்டியும் அடிக்கிறாரே'' என்று பயந்த குமாரு சேரிக்குள் புகுந்து ஓட ஆரம்பித்தான்.

அரும்பின் முகத்தில் 'எதற்கு அடிச்சார்?' என்ற கேள்வி பூதாகாரமாய் நிற்க, ஆனாலும் மூச்சைப் பிடித்துக்கொண்டு ஓடினான்.

தூங்காணியும் விடாமல் விரட்ட, பிஞ்சுக்

கால்கள் பதைப்போடு சேரியைச் சுற்றி ஓட, சேரி மொத்தமும் கூடி விட்டது.

பூவாயி கூட எவ்வளவோ தடுத்தும் கேளாமல் குமாரை விரட்டினான் தூங்காணி.

தெரு மொத்தமும் வேடிக்கை பார்க்க ஒரு பெருங் கட்டை மட்டும் துடுக்குத்தனமாய்க் கேட்டது.

"ஏண்டா முட்டாப் பயலே! என்ன செஞ்சான்னு இந்த அடி அடிக்கிறே?"

"யோவ் பெரிசு, பேசமா கெட இவன் பண்ண காரி யத்துக்கு இவன..."

மிரண்டு கொண்டு பெரிசுவின் பின்னால் ஒதுங் கினான் குமார்.

"அப்படி என்னடா செஞ்சிப்புட்டான்? சின்னப் புள்ளங்கன்னா வெளயாட்டுத்தனமா ஏதாவது செய் யத்தான் செய்யும். அதுக்காவ தார்க்குச்சிலயா அடிப் பாங்க."

உரக்கக் கத்தினார் பெரியவர்.

"யோவ் மாமா! பள்ளிக்கூடத்துல சும்மா நோட்டுக் குடுத்தாங்கன்னு வாங்கிட்டு வந்துருக்கான் இவன்..."

பற்களைக் கடித்தான் தூங்காணி.

"போடா போக்கத்த பயல. அதுல என்னடா தப்பு? இவனெல்லாம்...!"

"என்ன தப்பா? நாமெல்லாம் குடியான வனுக்குச் சமமா இருக் கணும்னு போராடறோம். குடியானவன் வீதிக்குள்ள சாமிய தூக்கிட்டு போயி அவனுக்குச் சமமா நாமளும் இருக்கணும்னு நெனைச்சோம்ல. நாமளும் மனுசனா வாழ ஆசைப் பட்டோம்ல. இங்க நாம எதுக்குலாம். பள்ளிக் கூடத்துல மட்டும் சலு வயா."

"அது செவருமண்டு நமக்குக் குடுக்கற சலு வப்பா."



"ஏதோ வெவரம் தெரியாத நாள்ல அடிமையாக் கெடந்தப்போ நமக்கு செவருமண்டு சலுவ தேவயா இருந்துச்சி. நாமதான் அடிமையா இல்லன்னு சொல்லித்தான வாய்கிழிய கத்துறம். கீழுசாதின்னு சொல்லி நாம சலுவ வாங்கறதுனாலதான், நாமள யாரும் மனு சனாவே மதிக்கல. என்னக்கி செவருமண்டு சலுவய ஒதுக்கி மத்தவங்களுக்குச் சமமா ஆவுறமோ அன்னைக்குத்தான் நாம மனுசன். அப்பத்தாய்யா அவங்களும் நம்மள மதிப் பாங்க. அதுவரைக்கும் நாம கீழுசாதி தாய்யா."

சொல்லிவிட்டு குமாரைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு குடிசையை நோக்கி நடந்தான் தூங்காணி.

ஒட்டுமொத்த சேரியும் இவனைப் பார்த்து ஸ்தம்பித்து நின்றது. அவர்களுக்குள் எதுவோ ஒன்று நிகழ்வது தூங்காணியின் முதுகிற்குத் தெரிந்தது. உடம்பு சிலிர்த்து நின்றது.

## இரண்டாவது சுற்று!

'யார் இவர்?' என்று கேட்டு போட்டி வைக்கிற உத்தேசமில்லை. படத்தில் பூனம் எனும் பூவுடன் சம்பாஷணை செய்து கொண்டிருப்பது, கொஞ்ச நாள் காணாமல் போயிருந்த சின்னி ஜெயந்தேதான். இந்த 'உனக்காக மட்டும்' படத்தில் ஏற்றிருக்கும் குணசித்திரம், சின்னியின் 'மறு சுற்றுக்கு' உதவும் என்பது யூனிட் ஆட்களின் கருத்து.

48

**ய**க்ஞமாகிற கர்மாவினாலே ஆராதிக்கப்படக்கூடியவன் விஷ்ணுதான் என்று அச்வமேத பிரகரணத்திலே விஷ்ணுவைக் கொண்டாடுகிறது வேதம். – 'யக்ஞ கர்ம சமாராத்யன்.'

– அச்வமேத யாகத்திலே விசேஷமாக இருந்து பலனைத் தருகிறவன். அதே போல் பௌண்டரீக மகா யக்ஞத்திலும் இருப்பவன்.

அச்வமேதம் – க்ஷத்ரியர்கள் பண்ணக்கூடிய பெரிய யக்ஞம்.

இன்று அமாவாசை என்றால், இன்று ஆரம்பித்து நாளை வரை பண்ணக்கூடிய யக்ஞத்துக்கு தர்சம் என்று பெயர். அதே மாதிரி பௌர்ணமாசையன்று ஆரம்பித்து அடுத்த நாள் முடிக்கக்கூடியதற்கு பௌர்ணமாசி என்று பெயர்.

தருசம், பௌர்ணமாசம் – இதைக் காட்டிலும் சின்ன யக்ஞம் கிடையாது. அச்வமேத யாகத்தைக் காட்டிலும் பெரிய யக்ஞம் இடையாது.

அதனால்தான் வேதம் ஆரம்பிக்கிற போது தர்ச பௌர்ணமாசத்திலே ஆரம்பித்து அச்வமேதத்திலே முடிகிறது.

அச்வமேதத்தில் ஆராதிக்கப்படக்கூடியவன் விஷ்ணு. தர்ச பௌர்ணமாஸ்யத்தில் ஆராதிக்கப்படக்கூடியவனும் விஷ்ணு. ஆக, இங்கே – ஆதியிலேயும் விஷ்ணு; அந்தத்திலேயும் விஷ்ணு. இடையில் பெரிய பெரிய மகா யக்ஞங்கள். அப்படிப்பட்ட மகா யக்ஞங்களையெல்லாம் நன்கு விவரிக்கிறது வேதம். யஜுர் வேதத்தில் இரண்டாம் காண்டத்திலே 213 இஷ்டிகளைச் சொல்கிறது! சின்னச் சின்னதாகப் பண்ணக்கூடிய யக்ஞங்கள்.

எல்லாவற்றிலும் யக்ஞசம் ரக்ஷகன், யக்ஞ கர்ம சமாராஜ்யன் விஷ்ணுதான் என்று விசேஷமாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

வித்யாரண்யர் அதற்கு பாஷ்யம் எழுதுகையில் சொல்கிறார் : 'சமஸ்தத்தையும் ஆராய்ந்து பார்த்தால், சர்வ யக்ஞ சமாராத்யன் – வேள்விகளினால் ஆராதிக்கப் படக்கூடியவன் விஷ்ணு என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆகையினாலே, ஓம் விஷ்ணவே நம : என்கிற திருநாமத்தைச் சொல்லுங்கள்' என்கிறார்.

**ந**மக்கிருக்கிற பாக்யத்தைப் பாருங்கள்! இந்தக் கலியுகத்திலே அதிகமாக சிரமமே கிடையாது.

விஷ்ணவே நம : என்று வாக்கினாலே அந்தத் திருநாமத்தைச் சொன்னோமானால் இத்தனை யக்ஞங்களையும் பண்ணின பலன் நமக்கு வந்து விடுகிறது.

கிருத யுகத்திலே யக்ஞம் பண்ணினால்தான் பலன்! திரேதா யுகத்திலே, யக்ஞம் பண்ணினால்தான் பலன்! 'விஷ்ணு' என்று சொல்லி விட்டால் பலன் ஏற்படாது. அந்த யுகத்திலே எல்லாம்.

கலியுகத்திலே மாத்திரம் கதை வேறு! 'கலி சாது; ரொம்ப நல்லது' என்று சொன்னார்கள் பெரியோர்கள். வியாசரே சொன்னார். ஆனால், நாமோ கலியுகம் ரொம்பக் கொடியது என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

கலியுகம் நல்லது என்றால் எதனால்...? சுலபமாகப் பலனைக் கொடுப்பதனால் அதை நல்லது, சாது என்றார்கள். அதிக சிரமமில்லாமல் நம்மை ரக்ஷிக்கிறது அதனால்.

கிருத யுகத்திலே அஹோராத்ரம் நாம் சிரமப்பட்டு, ராத்திரி பகல் தூக்கமில்லாமல் பகவானுக்குப் பக்கத்திலேயே இருந்து கொண்டு, யக்ஞ யாகாதிகளெல்லாம் பண்ணிக் கொண்டு இருக்க வேண்டும். தூக்கத்தை எதிர்த்து, பசி – தாகத்தை எதிர்த்து பத்து வருஷ காலம் சிரமப்பட்டால் என்ன பலன் கிடைக்குமோ அந்தப் பலன் கலியுகத்திலே ஒரே ஒருநாள் சிரமப்பட்டால் கிடைத்து விடுகிறது.





ஆனால் ஒன்று... கிருத யுகத்திலே பத்து வருஷமும் அழகாக சிரமப்படலாம். கலியுகத்திலே ஒரு நாள் படுவதுதான் கஷ்டம்!

சாஸ்திரம் சொல்கிறது பாருங்கள்.... எவனொருவன் கலியுகத்திலே உட்கார்ந்து கொண்டு ஆரம்பத்தில் அனுக்ஞை கேட்கிறானோ, அவனை எதிரே இருப்பவர்கள் 'ததாஸ்து; யோக்யதா சித்தி ரஸ்து' என்று சொல்லி ஆமோதிக்க வேண்டும்.

அனுக்ஞை கேட்பது என்றால், 'அடியேன் தர்மபத்தினியோடு, கிருத யுகத்திலே என்ன தர்மமெல்லாம் உண்டோ அந்த தர்மத்தையெல்லாம் இப்போது அனுஷ்டிக்கலாம் என்று நினைக்கிறேன்...' என்று அறிவிப்பதாகும். 'எதிரே இருக்கும் மகான்களே, நீங்கள் எல்லோரும் அதை

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

அங்கீகரிக்க வேண்டும்' என்று கேட்பதாகும்.

இதற்குத்தான் எதிரே இருக்கிற மகான்களெல்லாம் 'ததாஸ்து' 'யோக்யதா சித்திரஸ்து' – அப்படியே ஆகட்டும் என்று சொல்கிறார்கள்.

எதிரே இருக்கக்கூடியவர்கள் சொல்லிவிடுவார்கள். ஆனால், இந்த யுகம் என்ன சொல்கிறது...? இந்த யுகம் ரொம்பக் கொடியதாகும். இது என்ன பண்ணுமாம், – 'என்னுடைய ஆதிக்கம், என்னுடைய ஆளுகைக்கு உட்பட்டு நீ இருந்து கொண்டிருக்கிறாய். கலியுக தர்மத்தைத்தான் நீ அனுஷ்டிக்க வேண்டும். கிருத யுக தர்மத்தை நீ அனுஷ்டிப்பதாவது! உன்னை விட்டேனா பார்!' என்று கலி கொடுமைப்படுத்துமாம்!

ஒரு நல்லதையும் பண்ண விடாது. அது என்ன நினைக்குமாம் கலியுகம் – 'ஸ்வாமி துரோகி!' என்று இவனை நினைக்குமாம். நமக்கு ஸ்வாமி – யஜமானனான கலியுகத்துக்கு நாம் துரோகம் செய்கிறோம் என்று நம்மைப் பழிக்குமாம். எப்போதும் ஹிம்சையே, கஷ்டமே கொடுத்துக் கொண்டிருக்குமாம்.

அதனால், இந்த யுகத்தில் நல்லது பண்ணுவது என்பது ரொம்ப சிரமம்! நல்லது பண்ணிவிட்டால், கலியுகம் அந்த இடத்திலே வேலை செய்யவில்லை என்று அர்த்தம்! 'கலியும் கெடும் கண்டுகொள்மின்' என்றார் ஆழ்வார். இந்தக் கலியுகமும் கெட்டுப் போய்விட்டது என்று அர்த்தம்!

இப்படிப்பட்ட கலியுகத்திலே பகவான் நாமா விஷ்ணு: விஷ்ணு: என்ற திருநாமத்தை மூன்று தடவை சொன்னோமேயானால், அந்த எம்பெருமான் பரிபூரண திருப்தியும் ஆனந்தமும் அடைந்து எல்லா பலனையும் நமக்குக் கொடுக்கிறான். இப்படிக் கொடுப்பவன்தான் யக்ஞ பிரகரணத்திலேயும் இருந்து கொண்டு நம்மை ரக்ஷிக்கிறான்.

யக்ஞத்தைக் கெடுக்கக்கூடிய தேவதைகள் உட்கார்ந்து கொண்டேயிருக்குமாம். எங்கேயாவது லோபம் ஏற்பட்டால் உடனே தொப்பென்று குதித்து அந்த யக்ஞத்தைக் கெடுத்து விடுமாம்! ஆகையினாலே தேவதைகள் காத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வருமாம். நாம் ஏதாவது கொஞ்சம் குறைவாக நடந்து கொண்டால் அவற்றுக்கெல்லாம் பலம் ஏற்பட்டுப் போய்விடுகிறது. ஆகையினால் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க

## அருள்வாக்கு

**லோ**க ரக்ஷணம் என்றால் என்ன? எல்லா தேசங்களுக்குமாக பெரிய கவர்ன்மெண்ட், பெரிய கோர்ட், பெரிய ஸைன்யம், பெரிய போலீஸ் டிபார்ட்மெண்ட் வைத்துக் கொண்டு பண்ணுகிற கார்யமா என்ன? இல்லை. வேதத்தை ரக்ஷித்துக் கொடுத்து, அவரவர்களும் ஸ்வதர்மத்தைப் பண்ணும்படியாக ஆக்கிவிட்டால் அதுதான் லோக ரக்ஷணம். வேதரக்ஷணம்தான் லோக ரக்ஷணம். வேத மந்த்ர சப்தங்கள் அட்மாஸ்ஃபியரில் குறையாமல் பரவிக் கொண்டு, வைதிக யஜ்ஞங்களால் ஸகல தேவதா ப்ரீதி ஏற்பட்டு விட்டால், தன்னால் லோகம் முழுதும் ரக்ஷிக்கப்பட்டதாக ஆகிவிடும். அதனால் எப்போதெல்லாம் வேத தர்மத்துக்கு ஹீனம் உண்டாகி,

வேண்டும்.

ஜ்வாலையை நன்றாக ஜ்வலிக்கப் பண்ணி, ஜ்வாலை இருக்கிறபோதுதான் ஹோமம் பண்ண வேண்டும். ஏனென்றால் அக்னியிலே வெறுமே மேலே மேலே போட்டுக் கொண்டேயிருந்தால் அதை அவன் எப்படி ஏற்பான்? அவன் ஏற்கும் விதமாக அக்னியை நன்கு பிரஜ்வலிக்கப் பண்ணி அதன் பிறகு சேர்க்க வேண்டும். அதற்காகக் காத்திருந்து நிறுத்தி நிறுத்திச் சேர்க்க வேண்டும்.

நரசிம்ஹ யக்ஞத்திலே கவனிக்கலாம். ஒரு ஆஹுதி ஆனவுடனே ஒரு கனம் சொல்வது என்று வழக்கம். ஒருமுறை கனம் சொன்னால், அதற்குள் அக்னி பகவான் அதை பஸ்மீகரணம் பண்ணி விடுவான். இன்னொரு திரவியத்தைச் சேர்க்க சௌகர்யமாயிருக்கும். ஒரு கனம் சொல்லி, ஒரு சாம வேதம் சொல்லி, ஒரு ரிக் வேத மந்திரத்தைச் சொன்னால் அதற்குள் அவன் ஸ்வீகரித்து விடுவான். ஆகையினால், யக்ஞ ஹோம சமயத்திலே அக்னி ஜ்வலித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

அது மட்டுமில்லை.... இந்த மாதிரி உபன்யாஸத்துக்கு, பகவத் குணத்தைக் கேட்க வந்தாலும் யக்ஞ வாடிகைக்கு வந்தாலும் முக்கியமாக ஒன்று கூடவே வரும். அது என்னது என்று கேட்டால், ஜேஷ்டா!

ஜேஷ்டா என்றால் மூத்தவள். மூத்தவள் என்றால் மூதேவி! எப்படி அவன் வருவாள் என்றால் தூக்கமாக, நித்திரையாக வந்து

லோகம் க்ஷீணமாயிற்றோ அப்போ தெல்லாம் பாவன கர்த்தாவான மஹா விஷ்ணு அவதாரம் பண்ணி வேதத்தை புநருத்தாரணம் செய் வார். இதனால் லோகம் க்ஷேமம் அடைந்துவிடும்.



ஸோமுகாஸுரன், ஹயக்ரீவன் போன்ற அஸுரர்கள் வேதத்தையெல்லாம் ஜலக் காட்டிலே ஒளித்து வைத்தபோது பகவான் மீனாகத் தோன்றி அதை மீட்டு வந்ததுதான் மத்ஸ்யாவதாரம். 'ப்ரளய பயோதி ஜலே'என்று ஜயதேவர் அஷ்டபதி யில் இதைச் சொல்லியிருக்கிறது.

இது மாதிரியான பத்து அவதாரங்களில் பகவான் தம்முடைய உயர்ந்த ஸ்தானத்தை விட்டு இந்த பூலோகத்துக்கு இறங்கி வரு கிறார். பரமபதம் என்று சொல்கிற உத்தம மான வைகுண்டத்திலிருந்து இறங்கி நம் லோகத்துக்கு வருகிறார். 'அவ தாரம்' என்றாலே 'இறங்கி வருவது' என்பதுதான் அர்த்தம். 'தார' என்றால் உச்சி. தார ஸ்தாயி என்று மேல் ஸஞ்சாரத்தைச் சொல்கிறோம் அல்லவா? 'அவ-தாரம்' என்றால் reverse order-ல் அந்த உச்சியிலிருந்து கீழே வருவது. பரம கருணையால் பகவான் இப்படி இறங்கி வருகிறான். கீழே இருக்கிற நம்மைக் கையைப் பிடித்து மேலே அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்பதற்காக, உச்சத்துக் கெல்லாம் உச்சத்திலுள்ள பகவான் நம் லெவலுக்கு இறங்கி வருகிறான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

விடுவாள்! உபன்யாசம் நடக்கிற இடத்தில், கதை சொல்கிற இடத்தில் வந்து விடுவாள். யக்ஞ வாடிகைக்கு வந்து விடுவாள்.

புராணம் சொல்கிறவர் ஒருத்தர் ஒரு ஊரில்... அவர் புராணம் சொல்கிற போது விசேஷமாக எல்லோரும் தூங்குவார்கள். நன்றாகத் தூக்கம் வரும். கிருஹத்திலே இருந்தால் தூக்கம் வராது! இங்கே உபன் யாசம் ஆரம்பித்தவுடனே நன்றாக, சுவாரஸ் யமாகத் தூக்கம் வரும்!

அதனால் ஊர்க்காரர்கள் என்ன பண்ணினார்கள்... பார்த்தார்கள், தூக்கம் வருவதற்கு இனி மாத்திரை மருந்தெல்லாம் எதற்கு?

இவர் உபன்யாசம் சொன்னாலே நன்றா கத் தூக்கம் வருகிறது. ஆகையினாலே, இவரை இந்த ஊரை விட்டு அனுப்பவே கூடாது. இவரை இங்கேயே குடிவைத்து விடுவோம். வேண்டிய வசதிகளெல்லாம் ஏற்பாடு செய்வோம் என்று அவரை அங் கேயே இருக்கப் பண்ணி விட்டார்கள்.

அவர் நித்யம் உபன்யாஸம் பண்ண வேண்டியது. இருக்கிறவர்கள் மொத்தமும் அங்கே வந்து உட்கார்ந்து தூங்க வேண்டி யது!

ஒருநாள் அந்த ராஜதானியிலே ராஜாவு டைய பட்டத்துக் குதிரைக்குத் தூக்கமே வரவில்லை. தூங்காமல் அது ரொம்ப அவஸ்தைப்படுவதைப் பார்த்து யாரோ ஒருத்தர் சொன்னார் : புராணம் சொல்கிற ஒருத்தர் இருக்கிறார். அவர் சொன்னால் எல்லோரும் நன்றாகத் தூங்குகிறார்கள். அவரை அழைத்துக் கொண்டு வந்து குதிரைக்கெதிராகப் புராணம் சொல்ல வைத்தால் அது தூங்கிப் போய்விடும். அத னால் கவலைப்படாதீர்கள். உடனே போய் அவரை அழைத்து வந்து குதிரைக்கெதி ராகப் புராணம் சொல்ல வையுங்கள் என் றார்.

அவரை அழைத்து வந்து குதிரைக்குப் புராணம் சொல்லச் சொன்னார்கள்! நடு நடுங்கிப் போய் விட்டார் அவர்! ஒருநாளும் ஹயக்ரீவர் ஸ்தோத்திரமே சொல்லி அறி யாதவர் அவர்! அன்றைக்கு ஏகமாக புத் தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு ஹயக்ரீவ ஸ்தோத்ரத்தைச் சொல்கிறார் :

'குதிரை முகம் உடையவனே! வாக்குக்கு ஈசனே; ஹே ஹயக்ரீவனே! குதிரைக்குத் தூக்கம் வரவேண்டுமாமே! மனிதர்களைத் தூங்கச் செய்து கொண்டிருந்தேன். குதிரை யைத் தூங்க வைக்க என்னால் முடியுமா... நீதான் எனக்கு அருளவேண்டும்' என்று குதிரைக்கு எதிரில் போய் நின்றார். புரா ணம் சொல்ல ஆரம்பித்தார். குதிரை தூங்கிப் போய் விட்டது!

பார்த்தான் ராஜா, ராஜதானியிலே அவரை ஆஸ்தான வித்வானாக வைத்துக் கொண்டு விட்டான்!

(தொடரும்)

## வட்டமேஜை



✉ பண்பில் இமயமென உயரத் திகழும் ரஜினியைப் பற்றி ஏவி.எம். சரவணன் வழங்கிய கருத்துக்கள் ரஜினி என்ற அந்த மூன்றெழுத்தின் வசீகரத்தைப் புலப்படுத்தியது.
போடிநாயக்கனூர், எம். பாலசுப்ரமணியன்.

✉ எங்கள் இதய தெய்வத்தின் படத்தினை அட்டையில் போட்டு கோடானுகோடி உள்ளங்களைத் தொட்ட 'கல்கி'யே உனக்கு நன்றியை எம்மொழியில் கூறுவது?
இலால்குடி, சூரியன்.

# எம்மொழியில் நன்றி சொல்ல!

✉ மதுரையில் ஆறேழு முறை முதல்வன் படத்தை கேபிளில் ஒளிபரப்பியதால், மதுரை மாவட்ட தலைமை அர்ஜுன் நற்பணி மன்றம், போஸ்டர் அடித்து ஒட்டியதில் நமக்கு ஆட்சேபம் ஏதுமில்லை. ஆனால், 'வண்மையாகக் கண்டிக்கிறோம்' என தப்பும் தவறுமாக போஸ்டரில் அச்சிட்டு தமிழைக் கொலை செய்ய வேண்டுமா, என்ன!
சென்னை – 5,
கே. தெய்வசிகாமணி.




✉ நடிகை மௌனிகா ரசித்த கவிஞர் கண்ணதாசன் கவிதை, அவர் மட்டுமல்ல; வாசகர்கள் அனைவரும் ரசிக்கும் அற்புதமான தத்துவக் கவிதை!
ஸ்ரீரங்கம், வி. சௌரிராஜன்.

✉ இடுக்கிப் பிடியில் சிக்கித் தவிக்கும் கிரிதர் கோமாங்கோவின் பரிதாபமான நிலையைப் பட்டியல் போட்டுக் காட்டிய விதம் அருமை. ஒரிசா மக்களை 'வித் அவுட்' ஆக்கிய புயல், கோமாங்காவின் பதவியையும் 'வாஷ் அவுட்' பண்ணி விட்டு போனது 'ஹைலைட்' சமாசாரம்!
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ சிறந்த நடிகராக இருந்தும், முதலில் டீவியைத் தாழ்வாகத்தான் நினைத்தேன் என மறைக்காமல் உண்மையை ஒப்புக் கொண்ட உயர்ந்த உள்ளம் சிவகுமாரைத் தவிர வேறு யாருக்கும் வராது.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ சின்னத் திரை ஸ்பெஷல்களை ரசித்துப் படித்தோம். சின்னத் திரையின், பற்பல விஷயங்களோடு, சின்ன விஷயங்களைக் கூட விட்டு விடாமல் தொகுத்தளித்து, எங்களை ஆனந்தக் கடலில் அமிழ்த்தி விட்டீர்கள்.
பெங்களூர், என். கே. ஈசுவரி.

✉ "இன்னமும் நாங்கள்தான் நம்பர் ஒன்!" என தூர்தர்ஷன் இயக்குனர் ஸ்ரீனிவாசா கூறுவது உண்மைதான். ஏனெனில் என் போன்ற கிராமத்தினருக்கு கேபிள் டீவி எல்லாம் எட்டாத வரை டிடி. நம்பர் ஒன்தான். திரையிட்ட படங்களையே மீண்டும் மீண்டும் திரையிடுவதும், செய்திகளைக் கூட சுருக்கி நிமிடங்களுக்குக் குறைத்ததும் தூர்தர்ஷன்தான். சன் – ராஜ் போன்ற சானல்கள் பார்க்க வாய்ப்பிருந்தால் தூர்தர்ஷனுக்கு குட்பை சொல்லி விடுவர் நம் மக்கள்!
விசலூர் – 1, ஜி. ஜி. கிருஷ்ணன்.

✉ 'முக ஸ்துதியை விரும்புவது ஆண்களா? பெண்களா?' என்ற வாசகரின் கேள்விக்கு தராசு அளித்த பதிலை அமைச்சர்களின் பார்வைக்கு அனுப்பலாம்!
சென்னை – 84, ஜோ. பன்னீர் செல்வம்.

✉ 'விடியல்' சிறுகதை மருமகளுக்கும், மாமியாருக்கும் இடையேயான ஈகோ பிரச்னையை ஒரு நூலிழை வித்தியாசத்தில் அழகாக எடுத்துக்காட்டியது. அதிலும், 'வெளியே மட்டும் தான் விடிந்திருந்தது' என்ற வரி அதன் பொருளைத் தெளிவாக உணர்த்தியது.
மயிலாடுதுறை, எல். துர்காதேவி.

✉ 'கம்யூனிஸ்ட் தம்பிகள்' எனும் சிறுகதை யாராயிருப்பினும், தலைவலியும், திருகுவலியும் தனக்கு வந்தால்தான் தெரியும் எனும் அடிநாதத்தில் அமைந்த நடைமுறை யதார்த்தம்.
மணவாளநகர், பொன். இளவேற்கோ.




பத்தாம் அத்தியாயம்

## மனித வேட்டை

அமரர் கல்கி

வந்தியத்தேவன் நாயின் வாயில் அகப்படாமல் தரையில் குதிக்கப் பார்ப்பதா, அல்லது மறுபடியும் மதில் சுவரின் மேல் ஏறுவதா என்று தீவிரமாகச் சிந்தித்துக்கொண்டிருந்தான். அதே சமயத்தில் பக்கத்திலிருந்த மரங்களின் மறைவில் யாராவது ஒளிந்திருக்கிறார்களா என்றும் கூர்மையாகக் கவனித்தான். ஒரு மரத்தின் மறைவில் வெள்ளைத் துணி தெரிவது போலிருந்தது. சற்று முன் நாயின் குரைப்புச் சத்தத்தோடு மனிதனின் சிரிப்புக் குரல் கலந்து கேட்டது நினைவுக்கு வந்தது. மனிதர் யாராவது உண்மையில் மறைந்திருந்தால்? ஒரு மனிதனோ? பல மனிதர்களோ? அதைத் தெரிந்து கொள்ளாமல் குதிப்பது பெருந் தவறாக முடியும். நாயின் வாயிலிருந்து தப்பினாலும் மனிதர்களின் கையில் அகப்படும்படி நேரிடலாம். அரண்மனை மேல் மாடத்திலிருந்து பார்க்கும்போது ஆழ்வார்க்கடியானுடைய முகம் மதில் சுவர் மேல் தெரிவது போலத் தோன்றியது. அந்த வைஷ்ணவன் தான் அய்யனார் கோவிலில் காத்துக் காத்துப் பார்த்து அலுத்துப் போய் இங்கு வந்து நாயை ஏவி விட்டு வேடிக்கை செய்கிறானா, என்ன? எல்லாவற்றுக்கும் கூப்பிட்டுப் பார்த்தால் போகிறது. "வைஷ்ணவரே! வைஷ்ணவரே! இது என்ன வேடிக்கை?" என்றான். மறுபடியும் ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது. அது ஆழ்வார்க்கடியான் குரல் அல்ல. ஆகை

யால் திரும்ப மதில் மேல் ஏறி அரண்மனைக்குள் இறங்குவதுதான் சரி. பெரிய பழுவேட்டரையரின் வரவேற்பு தடபுடல்களில் எப்படியாவது தப்பித்துக் கொள்ளலாம். அல்லது சுரங்க வழி இருக்கவே இருக்கிறது. மணிமேகலையிடம் மீண்டும் கொஞ்சம் கெஞ்சுமணியம் செய்தாற் போகிறது. இல்லாவிடில் பழுவூர் இளையராணியின் தயவையே சம்பாதித்துக் கொள்ள வேண்டியதுதான்! இதுவரை தன்னைக் காட்டிக் கொடுக்காதவள் இப்போது மட்டும் காட்டிக் கொடுத்து விடுவாளா...?

வந்தியத்தேவன் இறங்கிய வழியில் மறுபடி மேலே ஏறத் தொடங்கினான்.

நாய் இன்னும் உயரமாக எழும்பிக் குதித்துக் குரைத்தது.

மீண்டும் சிரிப்புச் சத்தம் கேட்டது.

மரத்தின் மறைவிலிருந்து ஓர் உருவம் வெளியே வந்தது. அதன் கையில் ஒரு வேல் இருந்தது.

அவன் தேவராளன் என்பதை வந்தியத்தேவன் தெரிந்துகொண்டான்.

தேவராளன் வந்தியத்தேவன் சுவரில் தொங்கிய இடத்திற்கு அருகில் வந்தான்.

''அப்பனே! உன் உயிர் வெகு கெட்டி!'' என்றான்.

''அதுதான் தெரிந்திருக்கிறதே! ஏன் மறுபடியும் என்னிடம் வருகிறாய்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''இந்தத் தடவை நீ தப்ப முடியாது!'' என்று கூறித் தேவராளன் தன் கையிலிருந்த வேலை வந்தியத்தேவனை நோக்கிக் குறி பார்த்தான்.

வந்தியத்தேவன் தன்னுடைய ஆபத்தான நிலையை உணர்ந்துகொண்டான். பாதிச்சுவரில் தொங்கிக்கொண்டிருப்பவன் கீழேயிருந்து வேலினால் குத்தப் பார்ப்பவனுடன் எப்படிச் சண்டையிட முடியும்? குதித்துத் தப்பப் பார்க்கலாம் என்றால், வேட்டை நாய் ஒன்று மேலே பாயக் காத்துக்கொண்டிருக்கிறது.

''தேவராளா! ஜாக்கிரதை! உங்கள் எஜமானி பழுவூர் ராணியின் கட்டளையை ஞாபகப்படுத்திக் கொள்! என்னை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று உங்களுக்கு ராணி சொல்லியிருக்கவில்லையா?''

தேவராளன் ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்துவிட்டு ''பழுவூர் ராணி என் எஜமானி அல்ல; எந்த ஊர் ராணியும் என் எஜமானி அல்ல. பத்திரகாளி துர்க்கா பரமேசுவரிதான் என்னுடைய எஜமானி!'' என்றான்.

''என் குலதெய்வமும் துர்க்கா பரமேசுவரிதான்! அவளுடைய அருளினால்தான் நடுக்கடலில் எரிகிற கப்பலிலிருந்து தப்பித்து வந்தேன். என்னைத் தொட்டாயானால் துர்க்கை உன்னை அதம் செய்து விடுவாள்!'' என்றான் வந்தியத்தேவன்.

''நீ துர்க்கையின் பக்தன் என்பது உண்மையானால், இப்பொழுது எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும். அப்போதுதான் உன்னைக் கொல்லாமல் விடுவேன்!'' என்றான் தேவராளன்.

''என்ன செய்ய வேண்டும்! - முதலில், உன்னுடைய நாயை அப்பால் போகச் சொல்லு!''

''இந்தப் பக்கம் ஒரு வீர வைஷ்ணவன் வந்தான். அவனைத் தேடிப் பிடிப்பதற்கு நீ ஒத்தாசை செய்தால் உன்னைச் சும்மா விட்டு விடுகிறேன்.''

''எதற்காக அவனைப் பிடிக்க வேண்டும்?'' என்றான் வந்தியத்தேவன்.

''துர்க்கா தேவிக்கு ஒரு வீர வைஷ்ணவனைப் பலி கொடுப்பதாக நான் சபதம் செய்திருக்கிறேன். அதற்காகத்தான்!'' என்றான் தேவராளன்.

இந்தச் சமயத்தில் வந்தியத்தேவன் மதில் சுவரில் பிடித்துத் தொங்கிக்கொண்டிருந்த சிறிய செடி வேரோடு பெயர்ந்து வர ஆரம்பித்தது.

வேலின் முனையில் சிக்காமல் எப்படித் தேவராளன் கழுத்தின் மேல் குதிப்பது என்று வந்தியத்தேவன் யோசித்துக்கொண்டே ''அந்த வீர வைஷ்ணவன் என் அருமைச் சிநேகிதன். அவனுக்கு ஒருபோதும் நான் துரோகம் செய்ய மாட்டேன். அவனுக்குப் பதிலாக என்னையே பலி கொடுத்து விடு!'' என்றான்.

''அப்படியானால் இந்த வேலுக்கு



இப்போதே இரையாகி விடு!'' என்று தேவராளன் வேலைத் தூக்கி வந்தியத் தேவன் மீது குறி பார்த்தான்.

வந்தியத்தேவன் செடியை விட்டு விட்டு வேலின் முனைக்கு அடியில் அதைத் தாவிப் பிடித்துக்கொண்டு கீழே குதித்தான். குதித்த வேகத்தில் தரையில் மல்லாந்து விழுந்தான். தேவராளன் அந்த அதிர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு வேலைத் தூக்கினான்.

அந்தச் சமயத்தில் பின்னாலிருந்து ஓர் உருவம் ஓடி வந்து தன் கையிலிருந்த தடியினால் தேவராளன் தலையில் ஓங்கி ஒரு போடு போட்டது.

தேவராளன் வந்தியத்தேவன் பேரில் பொத்தென்று விழுந்தான்.

நாய் தன் எஜமானைத் தாக்கியவன் பேரில் பாய்ந்தது. ஆழ்வார்க்கடியான் அதற்கும் சித்தமாயிருந்தான். தன்னுடைய மேல் துணியை விரித்து நாயின் தலை மீது போட்டான். நாய் சில வினாடி நேரத்துக்குக் கண் தெரியாத குருடாகியிருந்தது. அச் சமயம் சுருக்குப் போட்டுத் தயாராக வைத்திருந்த காட்டுக் கொடியை அதன் கழுத்தில் எறிந்து வைஷ்ணவன் நாயை ஒரு மரத்தோடு சேர்த்துப் பலமாகக் கட்டினான்.

இதற்குள் வந்தியத்தேவன் தேவராளனைத் தன் மேலிருந்து தூக்கித் தள்ளி விட்டு எழுந்தான்.

தேவராளன் வைஷ்ணவனுடைய ஒரே அடியில் நினைவு இழந்து மூர்ச்சையாகிக் கிடந்தான். இருவரும் இன்னும் சில காட்டுக் கொடிகளைப் பிடுங்கி அவனுடைய கால்களையும் கைகளையும் கட்டிப் போட்டார்கள்.

பிறகு வந்தியத்தேவன் வேலையும் ஆழ்வார்க்கடியான் கைத் தடியையும் எடுத்துக்கொண்டு கிளம்பினார்கள்.

சம்புவரையர் மாளிகையின் வாசற் பக்கத்தைத் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் நெடுந் தூரத்துக்குக் காடு மண்டிக் கிடந்தது. அதற்குள்ளே புகுந்து விட்டால் வெளியில் வருவது கஷ்டம். ஆகையால் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மதில் சுவர் ஓரமாகவே விரைந்து சென்றார்கள்.

விரைந்து நடக்கும்போதே ஆழ்வார்க்கடியான் "நீ புத்திசாலி என்று நினைத்தேன். நான் நினைத்தது தவறு என்று இப்போது தெரிந்தது!" என்றான்.

"அவசரப்பட்டுச் சுரங்க வழியில் புகுந்ததைச் சொல்கிறீரா? அதன் மூலமாக எவ்வளவு பயங்கரமான மர்மங்களைக் கண்டுபிடித்திருக்கிறேன் தெரியுமா?" என்றான் வந்தியத்தேவன்.

"அது ஒருபுறம் இருக்கட்டும். 'வைஷ்ணவனைக் கண்டுபிடிப்பதற்கு ஒத்தாசை செய்கிறாயா?' என்று தேவராளன் கேட்டதும், 'ஆகட்டும்' என்று

சொல்லித் தொலைப்பதற்கு என்ன? வீணாக ஏன் அபாயத்துக்கு உள்ளாக வேண்டும்?'' என்றான் வைஷ்ணவன்.

''எல்லாம் சகவாச தோஷந்தான்!'' என்றான் வந்தியத்தேவன்.

''யாருடைய சகவாசத்தைச் சொல்கிறாய்? இத்தகைய தவறு செய்யும்படி நான் உனக்கு ஒருநாளும் சொன்னதாக நினைவில்லையே?''

''உம்மைச் சொல்லவில்லை, ஐயா! பொன்னியின் செல்வரைச் சொல்லுகிறேன். அவரைப் பார்த்துப் பழகிய பிறகு, பொய் சொல்லுவதற்கு உள்ளம் இடம் கொடுக்கவில்லை...''

''உயிர் தப்புவதற்



காகக் கூடவா? அவ்வளவு சத்திய சந்தனாகி விட்டாயா?''

"அது மட்டுமல்ல. நீர் எங்கேயோ பக்கத்தில் மறைந்திருக்கிறீர் என்று எனக்குத் தெரியும். நான் உம்மைப் பிடித்துக் கொடுக்கிறேன் என்று தேவராளனிடம் சொல்வதை நீர் கேட்டுக் கொண்டிருந்து அதை உண்மை என்று நம்பி விட்டால்! இந்த ஆபத்துச் சமயத்தில் எனக்கு உதவி செய்ய வந்திருப்பீரா?"

''அப்பனே! உன் அறிவுக்கூர்மை அபாரம்; சந்தேகமில்லை. உண்மையில், தேவராளன் கேட்ட கேள்விக்கு நீ என்ன பதில் சொல்லப் போகிறாய் என்று கேட்க நான் மிகுந்த ஆவலாய்த் தான் இருந்தேன்!''

''பார்த்தீரா? நீர் ஒரு சந்தேகப் பிராணி என்று நான் கருதியது சரி யாய்ப் போயிற்று. அதைத் தவிர, எப் பேர்ப்பட்ட நன்மை வருவதாயிருந் தாலும் வாய் வார்த்தைக்குக் கூடச் சிநேகத் துரோகமாக எதுவும் நான் சொல்லும் வழக்கமில்லை. ஆனால் நீர் 'அய்யனார் கோவிலில் காத்திருக் கிறேன்' என்று சொல்லிவிட்டு இங்கு வந்தது எப்படி? சுரங்க வழியில் நான் திரும்பி வந்திருந்தால் உம்மைக் காணாமல் திண்டாடியிருப்பேனே?'' என்றான் வந்தியத்தேவன்.

"சுரங்க வழியில் நீ திரும்பி வந்திருந் தால் உயிரோடு வந்திருப்பது சந்தேகந் தான். நீ சுரங்க வழியில் புகுந்த சிறிது நேரத்துக்கெல்லாம் சதிகாரர்கள் அதில் புகுந்தார்கள். நீ புத்திசாலியாகையால் நிச்சயம் வேறு வழியாகத்தான் வரு வாய். அநேகமாக இங்கே சுவர் ஏறிக் குதித்து வரக் கூடும் என்று எண்ணி னேன்.''

''அவ்வாறு எண்ணிக்கொண்டா இவ்விடத்துக்கு வந்தீர்?''

''அது மட்டுமல்ல. சுரங்கப் பாதை யில் புகுந்த சதிகாரர்கள் தேவராளனை மட்டும் வெளியில் காவலுக்கு வைத்து விட்டுச் சென்றார்கள். அவர்கள் திரும்பி வரும்போது அய்யனார் கோவிலில் யாரும் இல்லாமலிருக்க வேண்டாமா? அதற்காக, ஏதோ சமிக்ஞை சொல்லிவிட்டுப் புகுந்தார்கள் போலிருக்கிறது. ஆனால் அது எனக்குத் தெரியாது. எல்லாரும் சுரங்கத்துக்குள் புகுந்து விட்டார்கள் என்று நினைத் தேன். நீ உள்ளே போய் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாயே என்று வேறு கவலையாயிருந்தது. சுரங்கப் பாதையை வெளியிலிருந்து திறப்பதற்கு என்ன உபாயம் என்று தெரிந்து கொள்ளவும் விரும்பினேன். ஆகையால் பலிபீடத் தின் அருகில் சென்று அதைத் திருப்ப முயன்றுகொண்டிருந்தேன். காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். தேவராளன் கையில் வேலுடன் வந்துகொண்டிருந்தான். என்னைக் கண்ட இடத்தில் கொன்று விடச் சதிகாரக் கூட்டத்தார் வெகு நாளைக்கு முன்பே தீர்மானித் திருந்தார்கள். அது எனக்குத் தெரியும். என் கையிலோ ஆயுதம் இல்லை. ஆகையால் ஓட்டம் பிடிப்பதைத் தவிர வேறு வழி இல்லை. தேவராளனும் தொடர்ந்து ஓடி வந்து கொண்டிருந் தான். அடர்ந்த காடாக இருந்தபடியால் அவனால் என்னைப் பிடிக்க முடிய வில்லை. வேலை எறியவும் முடிய வில்லை. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு என்னை அவன் தொடர்ந்து வர வில்லை என்று தோன்றியது. வேட் டையைக் கைவிட்டு விட்டான் என்று எண்ணிக் காட்டிலிருந்து இனி இராஜ பாட்டைக்குப் போய் விடலாம் என்று உத்தேசித்தேன். சற்றுத் தூரத்தில் ஒரு குடிசை தெரிந்தது. அதில் ஒரு சிறிய விளக்கு மினுக்கு மினுக்கு என்று பிர காசித்துக்கொண்டிருந்தது. அந்தக் குடிசையில் இராஜ பாட்டைக்கு வழி கேட்கலாம் என்று நினைத்து அதை அணுகினேன். சற்றுத் தூரத்திலிருந்து உற்றுப் பார்த்தேன். நல்லவேளையாய்ப் போயிற்று. குடிசை வாசலில் தேவரா ளன் நின்றுகொண்டிருந்தான். ஒரு பெண் பிள்ளையும் ஒரு நாயும் அவன் அருகில் நின்றார்கள். தேவராளன் பெண் பிள்ளையிடம் ஏதோ சொல்லி விட்டு நாயை அழைத்துக்கொண்டு மறு படியும் புறப்பட்டான். நாய் நான் நின்ற திசையை நோக்கிக் குரைத்தது. ஆகவே

அபாயம் இன்னும் அதிகமாயிற்று. இராஜ பாட்டைக்குப் போகும் உத்தேசத்தைக் கைவிட்டுக் காட்டு வழியிலேயே புகுந்து ஓடி வந்தேன். நாய் அடிக்கடி குரைத்துக்கொண்டு வந்தபடியால் அவர்கள் எங்கே வருகிறார்கள் என்பதை நான் ஊகிக்க முடிந்தது. ஓடி வந்துகொண்டிருக்கும்போதே மூளையும் வேலை செய்துகொண்டிருந்தது. இரவு முழுவதும் காட்டில் சுற்றிக்கொண்டிருப்பது அசாத்தியம். எப்படியும் அவர்கள் வந்து பிடித்து விடுவார்கள். கையில் வேலுடன் கூடிய தேவராளனையும் வாயில் பல்லுடன் கூடிய வேட்டை நாயையும் ஏக காலத்தில் சமாளிப்பது சுலபம் அல்ல. அச் சமயத்தில் இப் பெரிய மாளிகையின் மதில் சுவர் தெரிந்தது. மதிலில் ஏறி உள்ளே குதித்து விட்டால் எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம் என்று எண்ணினேன். அப்படியே ஏறி விட்டேன். அச் சமயம் நீ அரண்மனை மேன் மாடத்தில் ஓடி வந்துகொண்டிருப்பதைப் பார்த்தேன். நீ மதில் ஏறி வெளியே குதிப்பதற்குத்தான் ஓடி வருகிறாய் என்று தெரிந்துகொண்டு மறுபடியும் கீழே குதித்தேன். நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து தேவராளனையும் அவனுடைய நாயையும் சமாளித்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. இதற்குள் நாய் குரைக்கும் சப்தம் கேட்கவே பக்கத்திலிருந்த மரத்தின் மேலே ஏறிக்கொண்டேன். நாயும் தேவராளனும் நான் ஏறியிருந்த மரத்தை அணுகித்தான் வந்தார்கள். அதற்குள் நீ மதில் சுவரிலிருந்து இறங்கியது தேவராளனின் கண்ணில் பட்டது போலும். நாயையும் அழைத்துக்கொண்டு நீ இறங்குமிடத்தை நெருங்கினான். பிறகு நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும்...''

"வைஷ்ணவரே! விதியின் வலிமையைப் பற்றி உமது அபிப்பிராயம் என்ன?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இது என்ன கேள்வி! திடீரென்று விதியின் பேரில் உன்னுடைய எண்ணம் போனது, ஏன்?''

"ஒவ்வொருவனும் பிறக்கும்போதே 'இன்னாருக்கு இன்னபடி' என்று பிரம்மதேவன் தலையில் எழுதி விடுவதாகச் சொல்கிறார்களே! அதை நீர் நம்புகிறீரா, இல்லையா?''

"இல்லை! எனக்கு விதியில் நம்பிக்கையில்லை. விதியை முழுதும் நம்புவதாயிருந்தால், பரந்தாமனிடம் பக்தி செய்து உய்யலாம் என்பதற்குப் பொருள் இல்லாமற் போய் விடும் அல்லவா. ஆழ்வார்கள் என்ன சொல்லியிருக்கிறார்களென்றால்...''

''ஆழ்வார்கள் எதையாவது சொல்லியிருக்கட்டும். எனக்கு விதியில் பூரண நம்பிக்கை உண்டாகியிருக்கிறது. விதியின்படிதான் எல்லாம் நடக்கும் என்று கருதுகிறேன். இல்லாமற் போனால் இன்றைக்கு நான் தப்பித்துக்கொண்டு வந்திருக்க முடியாது...''

"அப்பனே! விதியினால் நீ தப்பித்து வரவில்லை. மதியின் உதவியினால் தப்பித்து வந்தாய்...''

''இல்லவே இல்லை; என் மதி என்னை ஆழந் தெரியாத அபாயத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. விதி என்னை அதிலிருந்து கரையேற்றியது!''

இப்படி அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே காட்டைக் கடந்து வந்து விட்டார்கள். கடம்பூர் அரண்மனையின் முன் வாசல் அங்கிருந்து தெரிந்தது. அங்கு ஒரே அல்லோலகல்லோலமாக இருந்ததும் தெரிந்தது. பழுவேட்டரையரின் யானை, குதிரை, பரிவாரங்கள் வெளியிலிருந்து வாசலை நெருங்கி வந்துகொண்டிருந்தன. அமோகமாக அலங்கரிக்கப்பட்டிருந்த அரண்மனை வாசலில் சம்புவரையரும், அவருடைய பரிவாரங்களும் வரவேற்பதற்குக் காத்திருந்தார்கள். நூற்றுக்கணக்கான தீவர்த்திகள் இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. பேரிகைகள், முரசுகள், கொம்புகள், தாரைகள், தப்பட்டைகள் ஒன்று சேர்ந்து முழங்கின.

ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனுடைய கையைப் பிடித்து இழுத்து "வா! போகலாம். யாராவது

நம்மைப் பார்த்து விடப் போகிறார் கள்!'' என்றான்.

''இந்தப் பக்கம் ஒருவரும் பார்க்க மாட்டார்கள். பார்த்தாலும் என்னு டைய விதி என்னைக் காப்பாற்றும்.''

''அப்படியாவது எதற்காக இங்கே நிற்க வேண்டும்?''

''பெரிய பழுவேட்டரையர் யானை மீது வந்து இறங்கும் காட்சியைப் பார்க்க வேண்டாமா?''

''அது மட்டுந்தானா?''

''பழுவூர் ராணி நந்தினி அவருடன் யானை மீதில் வந்து இறங்குகிறாளா, அல்லது மூடு பல்லக்கில் வருகிறாளா என்று பார்க்கவும் விரும்புகிறேன்...''

''தம்பி! விதி எப்போதும் உனக்கு அனுகூலமாக இருக்கும் என்று எண் ணாதே. ஒரு மாயமோகினியின் உரு வத்தில் வந்து உன்னைக் குடை கவிழ்த்தாலும் கவிழ்த்து விடும்...''

''அப்படியெல்லாம் மயங்கி விடு கிறவன் நான் அல்ல, வைஷ்ணவரே! அதற்கு வேறு ஆட்கள் இருக்கிறார்கள்!''

கம்பீரமான யானை வந்து அரண் மனை வாசலில் நின்றது. அதன் மேலிருந்து பெரிய பழுவேட்டரையர் இறங்கினார். அவரைத் தொடர்ந்து பழு வூர் இளைய ராணியும் இறங்கினாள்.

''ஓ! இந்தத் தடவை இளைய ராணி மூடு பல்லக்கில் வரவில்லை. பகிரங்க மாகவே அழைத்து வந்திருக்கிறார்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அதைத் தெரிந்து கொள்ளத்தான் விரும்பினேன். இனிப் போகலாம்'' என்று வந்தியத்தேவன் பின்னால் சென்றான்.



ஆனால் இப்போது ஆழ்வார்க்கடியான் பின் செல்வதற்கு அவ்வளவு அவசரப்படவில்லை. மேலும் அந்த இடத்திலேயே நின்றுகொண்டிருந்தான். பழுவூர் இளைய ராணி நந்தினியைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான்.

தற்செயலாகவோ, அல்லது அவனுடைய மனோ சக்தியினால் இழுக்கப்பட்டுத்தானோ என்னவோ நந்தினி அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

ஆழ்வார்க்கடியானுடைய முகம் இருண்ட மரங்களின் மத்தியிலிருந்து எட்டிப் பார்த்துக்கொண்டிருந்ததைக் கூர்ந்து கவனித்தாள்.

அவள் முகத்தில் உடனே பீதியின் சாயல் பரவிற்று.

இளைய ராணியின் முக மாறுதலைப் பெரிய பழுவேட்டரையர் கவனித்தார். அவள் பார்த்த திசையை அவரும் ஒரு தடவை கூர்ந்து நோக்கினார்.

இரண்டு உருவங்கள் நெருங்கி வளர்ந்திருந்த மரங்களின் இருண்ட நிழலில் மறைந்துகொண்டிருந்தன.

உடனே சம்புவரையரின் காதோடு ஏதோ சொன்னார்.

சம்புவரையர் தம்முடைய வீரர்களில் இருவருக்கு ஏதோ கட்டளையிட்டார்.

பழுவேட்டரையரும் இளையராணியும் அமோகமான வாத்திய கோஷங்களுக்கிடையில் அரண்மனை வாசல் வழியாக உள்ளே பிரவேசித்தார்கள்.

அதே சமயத்தில் இரண்டு குதிரை வீரர்கள் அரண்மனை மதிலைச் சுற்றியிருந்த காட்டிற்குள் பிரவேசித்தார்



கள்.

குதிரைகளைக் காட்டுக்குள் அவர்கள் கஷ்டத்துடன் செலுத்திக் கொண்டு போனார்கள்.

வெகுதூரம் சென்றும் யாரும் இருப்ப தாகத் தெரியவில்லை. கிட்டத்தட்ட காட்டைக் கடந்து அப்புறத்தில் சம வெளியாக இருந்த இறந்த மைதானத் தண்டை வந்து விட்டார்கள்.

''அண்ணே! காட்டில் ஒருவரும் இல்லை. கிழவரின் மனப்பிராந்திதான்!'' என்றான் அவர்களில் ஒருவன்.

அச்சமயம் நாய் ஒன்று அவர்களுக் கெதிரே ஊளையிட்டுக்கொண்டு வந்தது.

"தம்பி! நாய் எப்போது ஊளையிடும் தெரியுமா?'' என்று மற்றவன் கேட் டான்.

''யாராவது செத்துப் போனால் ஊளையிடும்!'' என்றான் முதலில் பேசியவன்.

''பேய், பிசாசு, வேதாளம் முதலி யவைகளைக் கண்டாலும் ஊளை யிடும்!'' என்றான் இன்னொருவன்.

''உன்னைப் பார்த்துத்தான் பிசாசு என்று நினைத்துக்கொண்டு விட்டதோ, என்னவோ?''

"இல்லை, தம்பி! உன்னை வேதாளம் என்று எண்ணிக்கொண்டு விட்டது!''

இச் சமயத்தில் அவர்களுடைய தலைக்கு மேலே பயங்கரமான பேய்ச் சிரிப்பைக் கேட்டு இருவரும் திடுக் கிட்டு அண்ணாந்து பார்த்தார்கள்.

இரண்டு பேரின் தலைக்கு மேலேயும் இரண்டு மரக்கிளைகளில் இரண்டு வேதாளங்கள் உட்கார்ந்திருந்தன.

இரண்டு வேதாளங்களும் அந்த இரண்டு வீரர்களின் கன்னத்திலும் பளீர் என்று அறைந்து, கழுத்தைப் பிடித்து நெட்டிக் கீழே தள்ளின!

பிறகு, அந்தப் பொல்லாத வேதாளங் கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு காட்டைக் கடந்து இறந்த மைதானத் தில் விரைந்து சென்றன!

### பதினொன்றாம் அத்தியாயம்

## தோழனா? துரோகியா?

மணிமுத்தா நதி வெள்ளாற்றில் கலக்கும் வளப்பு வாய்ந்த இடத்தைத் தாண்டி ஆதித்த கரிகாலனும் அவனுடைய தோழர்களும் பரிவாரங்களும் வந்துகொண்டிருந்தார்கள்.

முதல் நாள் இரவு திருமுதுகுன்றத்தில் இளவரசருக்கு நடந்த உபசாரங்களைப் பற்றியும், அந்த க்ஷேத்திரத்தில் நடந்து கொண்டிருந்த ஆலயத் திருப்பணியைப் பற்றியும் அவர்கள் பேசிக்கொண்டு வந்தார்கள்.

''திருமுதுகுன்றத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் செய்த காரியம் எனக்கு ரொம் பப் பிடித்திருக்கிறது!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''எதைப் பற்றிச் சொல்லுகிறாய்?'' என்று ஆதித்த கரிகாலன் கேட்டான்.

"கிழவியைப் பாட மாட்டேன் என்று சொன்னதைத்தான்!"

"அது என்ன? எனக்குத் தெரியாதே? விவரமாகச் சொல்" என்றான் ஆதித்த கரிகாலன்.

சுந்தர மூர்த்தி நாயனார் க்ஷேத்திர யாத் திரை செய்துகொண்டு வந்த பொழுது திரு முதுகுன்றம் என்னும் விருத்தாசலத்துக்கு வந்தார். வழக்கம் போல் அந்த ஊர் சிவா லயத்துக்குச் சென்றார். பட்டர்கள் நாய னாருக்குச் சுவாமி தரிசனம் பண்ணுவித்து, "எங்கள் ஊர் இறைவன் பேரிலும் பதிகம் பாடி அருள வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டார்கள்.

"பார்ப்போம். இந்த ஆலயத்திலுள்ள சுவாமியின் பெயர் என்ன?" என்று சுந் தரர் கேட்டார்.

திருமுதுகுன்றம் என்ற பெயரைக் கொண்டு அந்தச் சிவாலயத்திலுள்ள சுவா மிக்கு விருத்தகிரீசுவரர் என்று பெயர்



சூட்டியிருந்தார்கள். படடர்கள் அந்தப் பெயரைச் சொன்னார்கள்.

நாயனாரின் முகம் சுருங்கிற்று. போயும் போயும் கிழவரையா பாட வேண்டும் என்று மனத்தில் எண்ணிக்கொண்டு, "போகட்டும்; அம்மன் பெயர் என்ன?" என்று வினவினார்.

"விருத்தகிரீசுவரி" என்றார்கள் கோவில் பட்டர்கள்.

''சுவாமிக்குத்தான் கிழவர் என்று பட்டம் கட்டினீர்கள்; அம்மனையும் கிழவியாக்கி விட்டீர்களே? கிழவனையும் கிழவியையும் என்னால் பாட முடியாது போங்கள்!'' என்று சொல்லிவிட்டுச் சுந்தரமூர்த்தி நாயனார் கோபமாகக் கோவிலை விட்டுக் கிளம்பி விட்டார்.

சுந்தரமூர்த்தி நாயனாரால் பதிகம் பாடப் பெறாவிட்டால் தங்கள் ஊர் ஆலயத்துக்கு மகிமை ஏற்படாது என்று பட்டர்கள் கருதினார்கள்.

ஆகையால் ஆலயத்தில் இன்னொரு அம்மனைப் பிரதிஷ்டை செய்து 'பாலாம்பிகை' என்று பெயர் சூட்டினார்கள்.

மறுபடியும் சுந்தரமூர்த்தி நாயனார் இருந்த இடத்துக்குப் போய் அவரிடம் மேற்படி விவரத்தைச் சொல்லித் திரும்பவும் திருமுதுகுன்றம் ஆலயத்துக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் பெரிய மனசு செய்து மீண்டும் அந்த ஊருக்குச் சென்று பாலாம்பிகை சமேத விருத்தகிரீசுவரர் மீது பதிகம் பாடித் துதித்தார்.

இந்தக் கதையைக் கேட்டு விட்டு ஆதித்த கரிகாலன் உடல் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

"பெரிய பழுவேட்டரையரிடம் வந்த கவிஞன் யாராவது ஒருவேளை சுந்தரமூர்த்தியைப் போல் சொல்லியிருப்பான். கிழவனையும் கிழவியையும் பாட மாட்டேன் என்று கூறியிருப்பான். அதற்காகத்தான் அவர் நந்தினியை மணந்துகொண்டாரோ, என்னவோ?" என்றான்.

இதைக் கேட்டுப் பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். அப்படி அவர்கள் சிரித்த சிரிப்பில் குதிரை மேலிருந்து கீழே விழுந்து விடுவார்கள் போலிருந்தது.

சிரித்து ஓய்ந்த பிறகு, பார்த்திபேந்திரன், ''கடவுள் முதுமை என்பதாக ஒன்றை எதற்காக ஏற்படுத்தியிருக்கிறாரோ, தெரியவில்லை. அவரவர்களும் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட வயது வரையில் ஒரே மாதிரி இருந்து விட்டுச் சாவது என்று ஏற்படுத்தியிருக்கக் கூடாதோ?" என்றான்.

''கடவுள் என்ன ஏற்படுத்தினால் என்ன? முதுமை அடைவதும் அடையாததும் நம்முடைய கையிலேதான் இருக்கிறது?'' என்றான் கரிகாலன்.

"அது எப்படி முடியும்?" என்று கந்தமாறன் கேட்டான்.

"அபிமன்யுவையும் அரவானையும் கிழவர்கள் என்று நாம் எண்ணுவதுண்டா?"

மற்ற இருவரும் ஒன்றும் கூறாமல் மௌனமாயிருந்தார்கள்.

"தஞ்சாவூர் அரண்மனைச் சித்திர மண்டபத்தில் என் மூதாதையர்களின் சித்திரங்கள் எல்லாம் எழுதப்பட்டிருக்கின்றன. விஜயாலய சோழர், ஆதித்த சோழர், பராந்தக சக்கரவர்த்தி எல்லாரும் முதிய பிராயத்தவராகக் காட்சி அளிக்கிறார்கள். ஆனால் என் பெரிய பாட்டனார் இராஜாதித்தர் எப்படியிருக்கிறார்? நவ யௌவன வீர புருஷராக விளங்குகிறார்! இராஜாதித்தர் இளம் வயதில் இறந்து போனார்; அதனால் என்றைக்கும் அவர் யௌவனம் நீங்காத பாக்கியசாலி ஆனார்! நம்மில் யாருக்கு அத்தகைய பாக்கியம் கிட்டுகிறதோ, தெரியவில்லை!"

மற்ற இருவருக்கும் இந்தப் பேச்சு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவர்கள் மௌனமாகவே இருந்தார்கள்.

"ஏன் திடீரென்று மௌனமாகி விட்டீர்கள்? சாவு என்றால் உங்களுக்கு ஏன் இவ்வளவு பயம்? இந்த உடம்பு போனால் இன்னொரு புத்தம் புதிய உடம்பு கிடைக்கிறது. எதற்காக மரணத்துக்கு அஞ்ச வேண்டும்? என்னுடைய நண்பன் வந்தியத்தேவன் இங்கே இருந்தால் என்னை ஆமோதிப்பான். அவனைப் போன்ற உற்சாக புருஷனைக் காண்பது அரிது. யம லோகத்தின் வாசலில் கொண்டு போய் விட்டாலும் அவன் குதூகலமாய்ச் சிரிப்பான்!" என்றான் இளவரசன் கரிகாலன்.

அச்சமயத்தில் அவர்களுக்கு எதிரே சாலையில் இரண்டு குதிரைகள் புழுதியைக் கிளப்பிக்கொண்டு வெகு வேகமாக வருவதை அவர்கள் பார்த்தார்கள். கண் மூடித் திறக்கும் நேரத்தில் அக் குதிரைகள் அவர்களை நெருங்கி வந்து விட்டன. அவை வந்த வேகத்தைப் பார்த்தால் இளவரசர் கோஷ்டி எதிரில் வருவதைக் கூடக் கவனியாமல் தாண்டிப் போய் விடும் எனத் தோன்றியது.

அவ்வளவு அகம்பாவம் பிடித்தவர்கள் யார் என்று பார்ப்பதற்காகக் கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் வேல்களை நீட்டிச் சாலையின் குறுக்கே வழி மறிக்க ஆயத்தமானார்கள்.

ஆனால் வந்த குதிரைகள் அவர்களுக்குச் சிறிது தூரத்தில் தடால் என்று பிடித்து இழுத்து நிறுத்தப்பட்டன.

வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் குதிரைகள் மீதிருந்து கீழே குதித்தார்கள்.

வந்தியத்தேவனைக் கண்டதும் இளவரசன் ஆதித்த கரிகாலனுக்குக் குதூகலம் தாங்கவில்லை. அவனும் குதிரை மீதிருந்து கீழே குதித்து முன்னேறிச் சென்று வந்தியத்தேவனைக் கட்டித் தழுவிக்கொண்டான்.

"தம்பி! உனக்கு வயது நூறு. இப்போதுதான் உன் பெயரைச் சொல்லி ஒரு கண நேரங்கூட ஆகவில்லை!" என்றான் கரிகாலன்.

கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் இந்தக் காட்சியைப் பார்த்து அடைந்த அசூயை அவர்கள் முகத்தில் தெரிந்தது. அவர்கள் சற்று முன்னால் குதிரையைச் செலுத்திக்கொண்டு போய் நின்றார்கள்.

சிறிது தூரத்தில் இன்னும் சில குதிரைகள் வருவதை அவர்கள் கண்டார்கள். சில நிமிஷத்துக்கெல்லாம் அந்தக் குதிரைகளும் வந்து நின்றன. அந்தக் குதிரைகளின் மீது வந்தவர்கள் கடம்பூர் ஆட்கள் என்பதைக் கந்தமாறன் கவனித்தான். அவர்களிடம் நெருங்கிச் சென்று விவரம் கேட்டான்.

பின்னர், இளவரசன் ஆதித்த கரிகாலனிடம் வந்தான். "கோமகனே! இந்த வந்தியத்தேவன் தங்களுக்கும் நண்பன்; எனக்கும் சிநேகிதனாகத்தான் இருந்தான். ஆனால் இவன் மீது நான் குற்றம் சுமத்த வேண்டியதாயிருக்கிறது. இவன் சிநேகத் துரோகி! இவன் என்னை முதுகில் குத்திப் படுகாயப் படுத்தினான்! ஆகையால் இவன் விஷயத்தில் தாங்கள் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும் என்று எச்சரிப்பது என் கடமையாகிறது!" என்றான் கந்தமாறன்.

(தொடரும்

## நடக்குமென் பார்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கஷ்டங்கள் நீங்கி சந்தோஷ சம்பவங்கள் நடக்கப் போவுது. உற்சாகமா இருங்க. உங்க நீண்ட நாள் பிரார்த்தனைகள், கோரிக்கைகள் எல்லாம் இப்ப நிறைவேறும். பண வரவும் எதிர்பாராத பெரிய இடத்து உதவிகளும் கூடும். சிலருக்கு உத்யோக / வீடு மாறுதல் இருக்கும். நண்பர்கள் உதவுவாங்க. தொலை தூரப் பயணம் ஒண்ணு லாபகரமா அமையும். புதிய நகை, உடைகள் வாங்குவீங்க. பெற்றோர் மூலமா ஒரு மகிழ்ச்சியான செய்தி வந்து சேரும்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

தடைகள் வலுவா இருந்தாலும் நீங்க குரு பார்வைல இருக்கறதால எதையும் சுலபமா சமாளிப்பீங்க. இந்த வாரம் பலருக்கு வெளிநாட்டு வேலை வாய்ப்பு அமையும். நவீன விஞ்ஞானம், கணிதத் துறையினருக்கு இந்த வாய்ப்பு பிரகாசமா இருக்கு. வியாபாரிகளுக்கு லாபம் கூடும். கலைத் துறையினர் கொஞ்சம் போராடித்தான் ஜெயிக்க வேண்டியிருக்கும். பெண்களுக்கும் முதியோருக்கும் உடல் நலன் கொஞ்சம் படுத்தும். மருத்துவச் செலவுகளும் இருக்கும்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பொருளாதார ரீதில வலுவா இருக்கற உங்களுக்கு இந்த வாரம் எதிர்பாராத செலவுகள் கொஞ்சம் இருக்கும். தவிர்க்க முடியாம சிலருக்குக் கடன் தர வேண்டி வரலாம். வங்கி ஊழியர்கள், பிற அரசுப் பணியாளர்களுக்கு இது ஏற்றமான வாரம். கல்வி - இலக்கியத் துறையினருக்குப் புகழ் கூடும். இசைத் துறையினருக்குத் தொண்டைக் கட்டு வந்து அவஸ்தைப் படுத்தலாம். எச்சரிக்கையா இருங்க. உடன் பிறந்தவர்களால் சில உபத்திரவங்கள் நேரும். வம்பு வழக்குகள்ல தலையிடாம இருக்கறது நல்லது.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

அறிவாற்றல் வெளிப்படும். பல முக்கியமான காரியங்களைச் சுலபமா சாதிப்பீங்க. எதிர்ப்புகள் அகன்று வெற்றிக் கொடி நாட்டுவீங்க. வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். விவசாயிகளும் விஞ்ஞானிகளும் வெற்றிப் பாதைல நடப்பாங்க. பெண்களுக்குப் புதிய ஆடைச் சேர்க்கை இருக்கும். மாணவர்கள் படிப்பில் பிரகாசிப்பாங்க. வயசானவங்களுக்குப் பிள்ளைங்க மூலமா சில நன்மைகள் ஏற்படும். வீடு, வாகனம் வாங்க இது சிறந்த வாரம்.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் வயசுப் பசங்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். மனசுக்கு மகிழ்ச்சியான பல காரியங்கள் நடக்கும். எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள், எதிர்பார்த்த பதவி உயர்வு எல்லாம் இப்ப நடக்கும். வீடு, மனை வாங்கற யோகம் சிலருக்கு இருக்கும். சிலர் பக்திமார்க்கத்துல தீவிரமா இறங்குவாங்க. தொழிலாளர்கள், கல்வியாளர்களுக்கு இது லாபகரமான வாரமா இருக்கும். பெண்களுக்குப் பதவி உயர்வோ, குழந்தைப் பிறப்போ இருக்கும். பஸ் பயணத்துல மட்டும் எச்சரிக்கையா இருங்க. பிக்பாக்கெட்டுக்கு வாய்ப்பு இருக்கு.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

ரொம்ப கவனமா சிந்தித்துச் செயல்பட வேண்டிய வாரம் இது. கிரகங்கள் எதுவும் சாதகமா இல்லை. வாயைக் கொடுத்து, எதிலும் மாட்டிக்காதீங்க. மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகும் வாய்ப்பு பலமா இருக்கு. வீட்லேயும் சண்டை சச்சரவுகளைத் தவிர்க்க முடியாது. சொத்துப் பிரச்னையால சகோதரர்கள் நடுவுல சண்டை எழலாம். தெருச் சண்டைல தலைவிட்டு கெட்ட பேர் வாங்கிக்காம இருக்கறதும் அவசியம். பண விஷயத்துல கவனம் முக்கியம். கடன் கொடுக்கல் வாங்கல் விவகாரமே வேணாம். இரவுப் பயணத்தைத் தவிர்க்கறது நல்லது.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

நல்லவர்கள் தொடர்பால சில முக்கியமான பிரச்னைகளைச் சுலபமா

சமாளிப்பீங்க. இந்த வாரம் பல சங்கடங்கள் ஏற்பட்டாலும் எல்லாமே உடனே காணாம போயிடற அதிசயத்தைச் சந்திப்பீங்க. வழக்கு விஷயத்துல மட்டும் வாய்தா வாங்கிடறது நல்லது. வீடு, மனை வாங்கவும் இது சரியான நேரம் இல்லை. சிலருக்கு விரும்பாத இட மாறுதல்கள் ஏற்படலாம். விற்பனையாளர்கள், வியாபாரிகளுக்கு அளவோட லாபம் இருக்கும். கடன் கொடுக்கற வேலை மட்டும் இப்ப வேணாம். கலைத் துறையினருக்கு மட்டும் இது பிரச்னை இல்லாத வாரம்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

தன்னம்பிக்கை மேலோங்கியிருக்கும். பல காரியங்களை வெற்றிகரமாக சாதிப்பீங்க. நண்பர்களும் உறவினர்களும் போட்டி போட்டுக்கொண்டு உதவுவாங்க. கலைஞர்கள் பல புதிய வாய்ப்புகள் பெற்றுக் குதூகலமடைவாங்க. எழுத்தாளர்களுக்கு விருதுகள் வரும் வாய்ப்பு இருக்கு. அரசு ஊழியர்கள், விஞ்ஞானிகள் ஆகியோருக்கு உத்தியோக உயர்வு இருக்கும். பெண்கள் உடல் நலனில் அக்கறை காட்ட வேண்டிய நேரம் இது.

# நடக்கும்!



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

குரு ரொம்ப சாதகமா இருக்கிறதால வெற்றி நாயகனா வலம் வரப் போறீங்க. திருமணம், வேலை வாய்ப்பு, பதவி உயர்வு - எதை எதிர்பார்த்துட்டிருக்கீங்களோ, அது இப்ப கிடைக்கும். வீடு வாங்கற யோகமும் இருக்கு. சிலருக்கு வெளியூர்/வெளிநாடு செல்லும் வாய்ப்பு கூடி வரும். எதிர்ப்புகள் அடங்கி, நல்ல வளர்ச்சி ஏற்படும். கலைத் துறையினருக்கு ஊதியம் கூடும். இளைஞர்களுக்கு லேசான விபத்துகளோ, பண இழப்போ - பயணத்துல இருக்கும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

தடைகள் நிறைந்த வாரம். அதனால உங்க புது முயற்சிகளைத் தள்ளிப் போடறதே நல்லது. நண்பர்கள், அதிகாரிகள், உறவினர்கள் - எந்தத் தரப்பினருக்கும் உங்க மேல அதிருப்திதான் இருக்கும். கடினமான உழைப்பு, குறைவான பலன்! என்ன செய்யறது? பல்லைக் கடிச்சிட்டு இருங்க. டூ வீலர் பயணம், ராத்திரி ரொம்ப நேரம் கண் விழிக்கறது ரெண்டும் கண்டிப்பா வேணாம். யார் கிட்டேயும் எதுக்கும் வாக்குறுதி கொடுக்காம இருக்கறது ரொம்ப நல்லது.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சுயபலம் மேலோங்கி இருக்கும். எந்தப் பிரச்னையையும் சுலபமா ஊதித் தள்ளிடுவீங்க. தொழில் துறைல இருக்கறவங்களுக்கு வெற்றி வாய்ப்புகள் பிரகாசமா இருக்கும். வழக்கறிஞர்கள், கல்வியாளர்கள், விஞ்ஞானிகள் எல்லோரும் புகழும் பாராட்டும் பெறுவாங்க. பெண்கள் செயற்கரிய செயல் ஏதாவது செய்து பாராட்டுப் பெறுவாங்க. வயசானவங்களுக்கு மக்களால அனுகூலம் உண்டு. அரசியல்வாதிகளுக்குக் கொஞ்சம் போறாத காலம். அறிக்கை விடும்போது நல்லா யோசிச்சிச் செயல்படறது நல்லது.



**ரிஷப ராசிக்காரரான கலைஞர், வலுவான தடைகளையும் சுலபமா சமாளிப்பாராம்!**



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

மதிப்பும் அந்தஸ்தும் உயரும். சில எதிர்பாராத உதவிகளை நண்பர்கள் மூலம் பெறுவீங்க. பெரியவங்க ஆதரவும் ஆசியும் உங்களுக்கு இருக்கறதால, புது முயற்சிகளைத் தாமதமில்லாம தொடங்கலாம். வழக்கறிஞர்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது. பெண்களுக்குப் புதிய ஆடைகள் வாங்கும் யோகம் உண்டு. தெய்வ காரியங்கள்ல நாட்டம் ஏற்படும். சிலர் தீர்த்த யாத்திரை போவாங்க. வெளியூர்ப் பயணங்களின்போது கண்ட தண்ணி குடிக்காம இருக்கறது நல்லது. சிலருக்குத் தொண்டை சம்பந்தமான பிரச்னைகள் ஏதாவது வரலாம்.



செய்யாறு தி.தா. நாராயணன்

**ஒ**ரு மாதப் போராட்டம்! கோபக்ஸின் நல்ல சிகிச்சையும் கவனிப்பும் ஒன்றுசேர, ரஷ்ஷு கொஞ்சம் கொஞ்சமாய் உடல் தேறி, ரணங்கள் ஆறி, ஜுரவேகம் தணிந்து, தென்புடன் பழைய மனிதனாய் நேற்றுத்தான் மீண்டும் கிளைடரில் ஏறினான். கிளம்பும் போது கோபக்ஸ் அவனை தூர இழுத்துக் கொண்டு போய், காதில் ஏதோ ரகசியம் சொல்லியனுப்பியது. என்னவாவது பேசிக் கொள்ளட்டும்! ரஷ்ஷு பிழைத்ததே போதும்.

ரஷ்ஷு உயிர் மீண்டதில் கோபக்ஸின் உழைப்பை நினைக்காமல் இருக்க முடியாது. இரவும் பகலும் எவ்வளவு உழைப்பு!

சூர்யா மீண்டும் தன் வேலையில் ஆழ்ந்து போனாள். அவர்கள் பற்றிய ரகசியம் மட்டும் நெஞ்சில் முள்ளாய் உறுத்திக்கொண்டிருந்தது. அந்த கறுப்புப் பெட்டி, ஹைட்ரஜன் குண்டு, எஸ்.ஏ.ரெனே 2200 கிழிருந்து வந்த நலம் விரும்பியின் செய்தி. இவை இன்றும் விடை தெரியாத புதிர்கள். கோபக்ஸிடம் எதுவும் பெயராது. ரஷ்ஷுவை மீட்ட சம்பவங்களையே பலமுறை கேட்டு நச்சரித்த பின்பு நேற்றுத்தான் சொல்லியது. மலைக் குகையில் தான் கிடந்தானாம். குகையின் கததகப்பு தான் அவனைக் காப்பாற்றியிருக்கிறது. அவன் கிடந்த இடம் பூராவும் ரத்தம் உறைந்திருந்ததாம். அவன் உடலில் ரத்தம் உறையும் தன்மையில் கோளாறு ஏற்பட்டிருக்கிறதாம்.

16

**பூ**மிக்குத் திரும்ப வேண்டிய காலம் நெருங்கி விட்டது. அவரவர்களின் ஆராய்ச்சிகள் முடிவுபெறும் தருணம். விதவிதமான ஸ்பெஸிமன்கள், ஆராய்ச்சிக்



# உயிர்களைத் தேடித் தேடி...

குறிப்புகள், அனுமானங்கள், கிரகத்தின் வளமை, சீதோஷ்ணம், ஒன்று விடாமல் சூர்யாவால் ஆராயப்பட்டிருந்தது.

கனிவளம்? இரும்பும் துத்தநாகமும் அதிக அளவில் கிடைக்கிறது. தங்கம் பாறைகளில் பாளம் பாளமாக!

காற்றும் நீரும் மனிதன் வாழ ஏதுவானதே. ஆக்ஸிஜன் சற்று அதிகம். இன்னமும் பெருமளவு கார்பன்டையாக்ஸைட் துருவங்களில் உறைந்து கிடக்கிறது. ஒன்று புரிந்தது. உயிர்களின் பரிணாம வளர்ச்சியில் புல்லாகிப் பூண்டாகி, புழுவாகி... இல்லை புழு இன்னும் தோன்றவில்லை. இனிமேல் புழுக்கள், பூச்சிகள், நீந்துவன, ஊர்வன, விலங்கினங்கள் என்ற வரிசை மாறி, நேரடியாக மனிதன் பூமியிலிருந்து வந்து குடியேறப் போகிறான். முதல் குடிமகன் இந்தியன்!

அவளுக்குப் பெருமையாக இருந்தது. செவ்வாயின் இன்றைய வளத்தைக் கணித்த, கண்டறிந்த பெருமைக்கு முழுச் சொந்தக்காரி இந்த சூர்யா. அப்பாடா. விடுதலை. அங்கே சற்று நிதானித்து மூச்சு விட்டுக் கொள்ளலாம். மக்கள் அடர்த்தி சற்று குறையும். மக்கள் இனி இங்கு குடியேறப் போகிறார்கள். கொஞ்ச காலத்திலேயே நிலத்தைப் பயன்படுத்தி, நிலத்தடி நீரை எடுத்து, இந்த இடத்தில் என்னவெல்லாம் மாயம் செய்யப் போகிறார்கள்? அப்பாவுக்கு பேரும் புகழும் காத்திருக்கிறது. இந்தப் பயணத்தின் ஒவ்வொரு அடியையும் நிர்மாணித்த சிற்பி. அப்பாவின் கதி என்னவாயிற்றோ? அரெஸ்ட் பண்ணி வைத்திருப்பதாய் நலம் விரும்பி செய்தி சொன்னதே. ஒன்றையும் நம்ப முடியவில்லை. அப்பாவும் தலைவரும் திக் ஃப்ரெண்ட்ஸ்தான். பார்ப்போம்.

இன்னும் பதினைந்து வருடங்கள் கழித்து நான் மீண்டும் இங்கு வருவேன். நான் விதை போட்டு வளர்த்து விட்ட இந்தப் பழ மரங்கள் விதவிதமான பழ வகைகளை மக்களுக்கு வாரி வழங்கிக் கொண்டிருக்கும். ஒரு நிமிடம் அங்கே விவசாய நிலங்களும், சிறு சிறு கிராமங்களும், புது மோஸ்தர் கட்டடங்களும், நீண்ட நெடும் சாலைகளும், ஓடும் வாகனங்களும், இருமருங்கும் ஓங்கி உயர்ந்து நிற்கும் மரங்களும் இருப்பதாகப் பாவித்து சந்தோஷப்பட்டாள்.

சட்டென்று நினைவுக்கு வந்தது. இத்தனை சந்தோஷங்களும் பொய்த்துப் போக, செவ்வாயில் அவர்கள் ஹைட்ரஜன் குண்டுகளைப் போட்டு அழிக்கத்தானே போகிறார்கள்? கூடாது. முடிந்தவரை இதைச் செய்ய விடக் கூடாது. விட மாட்டேன். முதலில் ரஷ்ஷுவை என் பக்கம் இழுக்க வேண்டும்.

எல்லாம் முடிந்து கிளம்ப வேண்டிய நாளும் வந்தே வந்து விட்டது. ஸ்பேஸ் ஈகிள் கிளம்பப் போகும் கடைசி காலை நேரம். சிலுசிலுவென்று குளிரடித்துக் கொண்டிருந்தது. சூர்யாவுக்கு இன்னும் விஷயம் பிடிபடவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் கிளம்பப் போகிறோம். ஆயினும் இன்னும் ஹைட்ரஜன் குண்டுகளைப் போடவில்லை. என்ன விஷயம் என்று தெரியவில்லை. இவளும் ராக்கெட் முழுக்க சல்லடை போட்டாயிற்று. இன்னமும் தேடிக் கொண்டுதானிருக்கிறாள். ஹைட்ரஜன் குண்டுகளின் இருப்பிடம் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

கோபக்ஸ் ராக்கெட்டை ஆயத்தம் செய்வதில் ஈடுபட்டிருந்தது. கைடன்ஸ் மானிட்டரில் தகவல்களைக் கொடுத்து, திருப்பி வாங்கி, சரிபார்த்துக் கொண்டிருந்தது.

ரஷ்ஷ¬! சூர்யா! இப்போது மணி சரியாகக் காலை 10:15. சரியாக மாலை 2:00 மணிக்கு ராக்கெட்டை கிளப்பி விடுவேன். நீங்கள் தயாராகுங்கள். இன்னும் இக்கிரகத்தில் செய்ய வேண்டிய சோதனைகள் ஏதும் இருப்பின் சீக்கிரம் சென்று முடித்து விடுங்கள்!''

"ஓ.கே. கோபக்ஸ்! கடைசி சில மணி நேரங்கள்."

ரஷ்ஷ¬வும் சூர்யாவும் கிளம்பினார்கள். கடைசியாக இக் கிரகத்தை ஒரு சுற்று சுற்றி விட்டு வருவதாக ஃபோர்வீலரைக் கிளப்பினார்கள். சூர்யா வண்டியை ஓட்ட ரஷ்ஷ¬ அமைதியாக இருந்தான்.

"அக்கா! எனக்கு சந்தோஷமாயிருக்கிறது. கிழே மக்கள் வரவேற்பு எப்படியிருக்கும்? அப்பா நம்மைப் பார்த்து எப்படி பூரித்துப் போவார்?'' தன் நண்பர்களிடமெல்லாம் சொல்லி பீற்றிக் கொள்வார்.

சூர்யாவின் முகம் இறுகியிருந்தது. பதிலெதுவும் பேசவில்லை.

"என்ன ஆச்சு?"

வண்டியை நிறுத்தினாள்.

''எனக்கு இப்போதாவது உண்மை தெரிஞ்சாகணும். உங்கள் மர்மங்கள் என்ன? இன்னும் என்னிடம் ஏன் மறைக்கிறீர்கள்? இந்தப் பயணத்திற்கு இரவு பகல் பாராமல் எப்படியெல்லாம் உழைத்தேன் தெரியுமா? நம் நாடு கடமைப்பட்டுள்ளது; அப்பாவுக்கு மட்டுமல்ல எனக்குந்தான். சொல்லுடா. நீ என் தம்பிதானா? கோபக்ஸ் என்னைக் கொன்று போட்டால் கூடப் பார்த்துக் கொண்டுதானிருப்பாயா? கமான்!" – அவன் சட்டையைப் பிடித்து உலுக்கினாள். ரஷ்ஷ¬ அவள் கையை விலக்கி விட்டான்.

''முதலில் எனக்குக் கடமைதான் முக்கியம். உறவுகள் அப்புறம். என்னை எத்தனை முறை கேட்டாலும் பதில் வராது. என்னை வெறியனாக்காதே. அப்புறம் கோபக்ஸ் என்ன? நானே உன்னைக் கொன்று விடுவேன்!" வெறிபிடித்தவனைப் போல காட்டுக் கூச்சல் போட்டான்.

"என்னைக் கொல்வாயா?" – அதிர்ச்சியாய்க் கேட்டு விட்டு நிதர்சனத்தைத் தாங்க மாட்டாமல் ஓவென்று அழுதாள். கொஞ்ச நேரம் அவன் 'அழட்டும்' என்று விட்டு விட்டு பின் எதையோ தீர்மானித்தவனாய், அவள் தோளைத் தொட்டு பேச வேண்டாமென்று சைகை காட்டினான். தன் குறிப்பு நோட்டை எடுத்து சரசரவென்று எழுத ஆரம்பித்தான்.

அக்கா!

நான் வாயைத் திறந்தால் ஆபத்து. நம் பேச்சு முழுவதையும் இந் நேரம் கோபக்ஸ் கேட்டுக் கொண்டிருக்கும். என் உடலில் ஆட்டோ டிரான்ஸ்மிட்டர்கள் பொருத்தப்பட்டுள்ளன. அவை என் கட்டுப்பாட்டில் இல்லை."

"ஆ!" – கத்தியவள் வாயை ரஷ்ஷ¬ பொத்தினான்.

உதட்டில் விரலை வைத்து எச்சரித்தான்.

'உன்னுடைய சந்தேகங்களை ஒவ்வொன்றாய் இங்கே வைத்துத் தீர்க்கின்றேன். முதலாவதாக ஹைட்ரஜன் குண்டுகள் இங்கே போடவிருப்பதற்கான காரணங்கள் : அது எனக்குச் சொல்லப்படவில்லை. ஆயினும் அப்பாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். இரண்டு துருவங்களிலும் இரண்டு ஹைட்ரஜன் பாம்களை நாம் கிளம்பிச் செல்லும் போது போடவிருக்கிறோம். வெளிப்படும் அதிக உஷ்ணம் அங்கே உறைந்து கிடக்கும் கார்பன்டையாக்ஸைடை வெளிப்படுத்தும். கார்பன் டையாக்ஸைடு அளவு கூடினால் வளிமண்டலத்தின் சராசரி வெப்பநிலை உயரும். எனவே ஹைட்ரஜன் குண்டுகள் போடுவது ஆக்கபூர்வமான செயல். உயிரினங்கள் தழைக்க, இந்த கிரகத்தை தயார்படுத்தும் ஒரு நடவடிக்கை. அடுத்து செவ்வாயில் உயிரினங்கள் வாழுமா? வாழ்கிறதா? என்று தேடிக் கொண்டு நாங்கள் இங்கு வரவில்லை. அத்தகைய ஆராய்ச்சிகளுக்குப் பணம் செலவிட யாரும் இப்போது தயாரில்லை. இது வேறு... ஆயுதப் போட்டி! நாங்கள் இங்கே தேடிக் கொண்டு வந்தது... "யுரேனியம் 235." எஸ்! பூமியில் தற்போது யுரேனியப் பஞ்சம். இருந்த கொஞ்ச நஞ்ச யுரேனியமும் போன நூற்றாண்டிலேயே அணு உலைகளில் ஜீரணித்தாகி விட்டது. தற்போது உலகத்தின் மொத்த கையிருப்பு மிகச் சொற்பமே. அதுவும் சீனாவின் வசம் உள்ளது. அதை வைத்துக் கொண்டு அது உலகையே மிரட்டிப் பார்க்கிறது. ஒரு ஆயுத சமன்பாட்டிற்காவது நமக்கு யுரேனியம் தேவை. அது எங்காவது உள்ளதா? என்று தேடும் படலமே இது. செவ்வாயில் யுரேனியப் படிவுகள் உள்ளதாக நம்

விஞ்ஞானிகள் கணித்தார்கள். அதைப் பற்றி ஆராயவே வந்தோம். இதில் நாங்கள் யாரும் எதிர்பார்க்காமல் திடும் என்று நீ நுழைந்து விட்டாய். எங்களைக் குழப்பியும் விட்டாய். ஏனெனில் யுரேனியம் விஷயம் ரகசியம் என்று முத்திரை குத்தப்பட்டுள்ளது.

''இந்தப் பயணம் எதற்காக? என்ற ரகசியம் இதில் சம்பந்தப்படும் நான்கே நான்கு பேருக்கு மட்டுமே தெரியும். நான், கோபக்ஸ், அப்பா, தலைவர் அவ்வளவுதான். யுரேனியம் இங்கே கிடைக்கிறது என்று தெரிந்து விட்டால் கும்பல் கும்பலாய்க் கிளம்பி விடுவார்கள். எனவே இது அதிமுக்கியமாகக் காக்கப்பட வேண்டிய ரகசியம். உனக்குத் தெரிந்தால் என்ன வென்று கேட்பாய். நீ ரகசியம் காக்கத் தெரியாதவள். உன் வெளிநாட்டுத் தோழிகள் கலபத்தில் உன்னிடம் கறந்து விடுவார்கள். எத்தனை ரகசியங்கள் உன் மூலம் வெளிநாட்டுக்குப் போய்விட்டது தெரியுமா? அது பற்றி ஒரு பட்டியலையே உளவுத் துறை வைத்திருக்கிறது. உன் நோக்கமின்றி உளறிக் கொட்டி விடுவாய். எனவே எல்லாவற்றையும் மறைத்து உன் லட்சியமே அரசின் லட்சியமும் என்று நடிக்கச் சொல்லி தலைவரின் உத்தரவு. இப்போது செவ்வாயில் உயிரினங்கள் என்ற உன் கண்டுபிடிப்பு பலித்து விட்டதில் உலகளவில் நம் நாட்டுக்குப் பெருமை, புகழ், மரியாதை எல்லாம்.''

**அ**வள் பிரமித்துப் போய் உட்கார்ந்திருக்க, ரஷ்ஷு ஒருமுறை எச்சரிக்கையாய்ச் சுற்றிலும் பார்த்து விட்டு மீண்டும் எழுத ஆரம்பித்தான்.

''ஒரிஜினல் ப்ளான்படி செவ்வாயின் தென் துருவத்திலிருந்து இரண்டாயிரத்து நானூறு கிலோ மீட்டர் வடக்கே அரெஸ் பள்ளத்தாக்கில்தான் இறங்கியிருக்க வேண்டும். ஏனெனில் அந்தப் பகுதியில் தான் யுரேனியம் இருக்கலாமென்று நம் அப்பா கணித்து வைத்திருந்தார். இடையில் நீ புகுந்ததால் திட்டத்தை மாற்றினோம். வடதுருவத்திலிருந்து மூவாயிரம் கிலோ மீட்டர்கள் தென்மேற்கில் ஹெல்லாஸ் மலைப் படுகையில் தரையிறங்கினோம். அது மட்டுமல்ல; கிளைடர் எனக்கும், ஃபோர்வீலர் உனக்கும் என்று தீர்மானித்ததில் கூட சூட்சுமம் இருக்கிறது. ஃபோர்வீலரில் அதிகபட்சம் முந்நூறு, நானூறு கிலோ மீட்டர். சுற்று வட்டாரத்துக்கு மேல் எவ்வளவு கடுமையாகச் சுற்றினாலும் உன்னால் கவர் பண்ண முடியாது. எனவே இதன் மூலம் கிட்டத்தட்ட நாம் இருக்கும் ஹெல்லாஸ் படுகையிலிருந்து ஆயிரத்து ஐந்நூறு கிலோ மீட்டர்கள் தாண்டியிருக்கும் யுரேனியத் திரட்சிப் பகுதிக்கு உன்னை வரவொட்டாமல் தடுத்து விட்டோம். ஆச்சர்யமாயிருக்கிறதல்லவா? இவை

## தலைவா! தலைவா!

**ஓ**ர் அரசியல்வாதி தம் தொண்டர்களுடன் ஹெலிகாப்டரில் பயணம் செய்து கொண்டிருந்தார். அவர் தமது பணப்பெட்டியைத் திறந்து பணத்தைச் சரி பார்க்கும்பொழுது ஓர் ஆயிரம் ரூபாய் நோட்டு பறந்து கீழே விழுந்துவிட்டது. உடனே அரசியல்வாதி பெருந்தன்மையாக, ''பரவாயில்லை. கீழே விழுந்த 1000 ரூபாய் நோட்டு யாராவது ஒருவனுக்குப் பயன்பட்டிருக்கும்!'' என்றார். தொண்டர்களில் ஒருவன், ''500 ரூபாய் நோட்டுகள் என்றால் 2 பேர் பயனடைந்திருப்பார்கள்!'' என்றான். மற்றொருவன், ''100 ரூபாய் நோட்டுகள் என்றால் 10 பேர் பயனடைந்திருப்பார்கள்'' என்று சொல்ல, அருகிலிருந்தவன் ''50 ரூபாய் நோட்டுகள் என்றால் 20 பேர் பயனடைந்திருப்பார்கள்'' என்றான். கடைசியாக ஒருவன், ''10 ரூபாய் நோட்டுகள் என்றால் 100 பேர் பயனடைந்திருப்பார்கள்!'' என்றான். முத்தாய்ப்பாக ஒரு தொண்டன், ''தலைவா... நீ விழுந்திருந்தால் இந்தத் தேசத்தின் கோடானு கோடி மக்கள் பயனடைந்திருப்பார்கள்!'' என்றான்.




— எஸ். அழகேசன்

## கற்றது காதல் அளவா? காதளவா?

**'சைட்'**, 'பெட் ரிங்கல்ஸ்' போன்ற ஆங்கிலப் படங்களைப் பார்த்தவர்களுக்கு ரோஹினைத் தெரிந்திருக்கும். ஹாலிவுட்டின் முக்கிய ஒளிப்பதிவாளர்களுள் ஒருவர். ஹாலிவுட் கேமராமேன் கோடம்பாக்கத்துக்கு வருகிறார்.

கஸ்தூரி சுந்தர் என்கிற புது இயக்குநரின் 'கற்றது காதல் அளவு' படத்துக்கு இவர்தான் ஒளிப்பதிவாளர்.

ரோஹின் புகைப்படம் கிடைக்க இன்னும் ஒரு மாத காலம் ஆகும். ஆகவே, அவரெடுத்த ஸ்டில் இங்கே. ஆகாஷும் விந்தியாவும் காதல் அளவு கற்கிறார்கள்.



அத்தனைக்கும் மாஸ்டர் ப்ரெய்ன் யார் தெரியுமா? நம் அப்பா.

"கடைசியில் யுரேனியத் திரட்சியைக் கண்டுபிடித்து விட்டேன்! ஜி.எம். கவுண்டர் காட்டிக் கொடுத்தது. அதுதான் நீ திறந்து பார்க்கத் துடித்த கறுப்புப் பெட்டி. லேட்டஸ்ட் மாடல். பத்து செகண்டுகளில் பதினாறாயிரம் பார்ட்டிகிள்களை ட்ரேஸ் பண்ணக்கூடிய திறன் கொண்டது.

"யுரேனியத் திரட்சி ஒரு மலைப்பிளவில் கொட்டிக் கிடக்கிறது. ஆர்வத்தில் கிட்டே ஓடினேன். ரேடியேஷன் பாதிப்பு ஏற்பட்டு விட்டது. ஒரே தடவையில் என் உடல் மீது அறுபத்தியெட்டு ராட் அளவு கதிர் வீச்சு பாய்ந்து விட்டது. அப்போதே உடல் முழுக்கக் கொப்புளங்கள் உண்டாகி விட்டன. கண்களை இருட்டிக் கொண்டு வந்து விட்டது. எப்படியும் ராக்கெட்டில் போய் விழுந்து விட வேண்டும் என்று விரைவாய் ஓட்டி வந்தேன். வரவர என்னால் முடியவில்லை. நினைவு தவற ஆரம்பித்தது. எனவேதான் வரும் வழியில் கிளைடரை இறக்கி நிக்ஸ் ஒலிம்பிகா பக்கம் ஒரு குகையில் போய் விழுந்தேன். அப்போதுதான் உடம்பெல்லாம் வெடித்துப் புண்ணாகி, மயங்கிக் கிடந்த அந்தக் கொடிய நாட்களைச் சந்தித்தேன். இப்போது இதுவரையிலும் நான் தெரிவித்த விஷயங்கள் அனைத்தும் ரகசியம். வெளியே சொன்னால் நம் இருவர் உயிரும் போய் விடும். சொன்ன என்னையும், தெரிந்து கொண்ட உன்னையும் கோபக்ஸ் தீர்த்து விடும். ஜாக்கிரதை. இப்போது என் உயிருக்கும் கூட நீதான் பொறுப்பு. நாம் பூமிக்குத் திரும்பிய பின்னர் கூட ரகசியம் ரகசியம் தான். இதுவரையிலும் படித்ததை இந்த நிமிஷமே மறந்து விடு."

அவள் படித்து முடித்து விட்டு, எதையும் ஜீரணிக்க முடியாமல் திகைத்து உட்கார்ந்திருக்க, ரஷ்ஷு எழுதிய காகிதங்களைக் கிழித்துப் பற்றவைத்தான். இவர்களுக்கு நேர் பின் பக்கம் சற்றுத் தள்ளி, அசையாமல் கோபக்ஸ் நின்றிருந்ததை இருவருமே கவனிக்கவில்லை.

"ரஷ்ஷு!" என்று உச்சஸ்தாயியில் கர்ஜித்தது.

(தொடரும்)

# சபதங்கள்
# அன்றும் இன்றும்



## அன்று...

பாஞ்சாலியின் சபதம்
அதர்மத்தை அழித்தது.
கண்ணகியின் சபதம்
அநீதியை எரித்தது.

## இன்று...

உங்களுடைய சபதம்...
சபலத்தை ஒழிக்கட்டும்.
சாதனைகள் படைக்கட்டும்.
எய்ட்ஸ் இல்லா
பாரதம் உருவாகட்டும்.

**சபலத்தைத் தவிர்ப்பீர் ! சாதனை படைப்பீர் !!**

கேட்போம்
கற்போம்
அதற்கேற்ப
வாழ்வோம்

**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாடு சங்கம்**
417, பாந்தியன் ரோடு, எழும்பூர்,
சென்னை - 600 008. போன் : 8255467

MCS COMM/1772/AIDS/99

**கேட்போம், கற்போம் அதற்கேற்ப வாழ்வோம்**

# நீங்கள் கேட்டவை – தராசு





• சுமையின் சுகம்!

எல்.ஐ.சியிலும் பாலிசிதாரர்கள் எதிர்பார்க்க ஆரம்பித்து விடுவார்களே, அதனால்தான்!

● **ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.**

*? 'அமைதி திட்டத்தை இந்தியா மறுக்கிறது' என்று பாகிஸ்தான் ராணுவ அதிபர் முஷரஃப் சொல்கிறாரே?*

! இதைத்தான் சாத்தான் வேதம் ஓதுவதாகச் சொல்வார்கள்.

● **புளியரை கணேசன், சென்னை – 30.**

*? 'சோனியாவுக்கு நடத்தப்படும் பிறந்த நாள் விழா உழவாரப் பணி போன்றதாகும்' என்று மூப்பனார் கூறியுள்ளது பற்றி...?*

! இந்த உழவாரப் பணி களைகளை நீக்குவதற்குப் பதில் வளர்க்கிறது! அதனால்தான் சோ. பாலகிருஷ்ணன் 'சோனியாவின் அடிமையாயிருப்பதில் பெருமைகொள்கிறோம்' என்கிறார்!

## சோனியா பிறந்த நாள் விழா உழவாரப் பணியாகுமா?

● **மஞ்சுதேவன், ஸ்ரீராம்பூர்.**

*? சமீபத்திய சோதனை...?*

! சோதனை : புதுதில்லி விமான நிலையத்தில் பயங்கர எஸ்கலேட்டர் விபத்து.

வேதனை : எஸ்கலேட்டரை நிறுத்தும் ஸ்விட்ச் எங்கு உள்ளது என்று தெரியாமல் எல்லோரும் அரை மணிநேரத்துக்கு மேல் தவித்தது.

● **இரா. புவனேஸ்வரி, சென்னை – 81.**

*? கி. வீரமணிக்குப் புதிதாகக் கொடுக்கப்பட்டுள்ள 'அரக்கர் இனத் தலைவர்' அடைமொழி குறித்து...?*

! அவருக்கே ஆட்சேபணை இல்லாத போது நமக்கென்ன வந்தது. தாராளமாகப் பட்டத்தைச் சுமக்கட்டும்!

● **கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.**

*? இன்ஷூரன்ஸ் துறையில் தனியார் நுழைவதை அனுமதிக்கும் சட்டம் மூலம் தற்போது உள்ள பொதுத் துறையில் எந்த விதமான மாற்றமும் இருக்கப் போவதில்லை. பின் ஏன் அத்துறை ஊழியர்கள் அச் சட்டத்தைக் கடுமையாக எதிர்க்கிறார்கள்?*

! தனியார் துறையில் இருக்கிற சுறுசுறுப்பை

• கனியும்....



• ...சுவையும்!





• சிறந்த, சிறந்த, சிறந்த!



• மாற்றமும் மர்மமும்



• முதலும் கடைசியும்!



• ஒது மந்திரம்!

● ப.லக்ஷ்மி நரசிம்மன்,
கோவை –11.

? அரசியலில் நிலையானது எது?

! ஊழல்.

● எஸ். அழகேசன், திருச்சுழி.

? கவி சிவத்தை வாரியாரோடு ஒப்பிடலாமா?

! ஒன்று பங்கனபள்ளி என்றால் ஒன்று மல்கோவா – ஆக இரண்டுமே மாம்பழம் தான். ஒவ்வொன்றும் ஒரு ருசி.

● வி. லக்ஷ்மிராமன், சென்னை – 73. ❑

? ஒரிசாவில் புது முதல்வரை நியமனம் செய்தால் மட்டும் புயலால் ஏற்பட்ட பாதிப்பு சீரடையுமா...?

! அரசியல் புயல் அடங்கியிருக்கிறது. இயற்கைப் புயல் பாதிப்புக்கு நிவாரண நடவடிக்கைகள் சுறுசுறுப்பு அடைந்து விட்டதாகத் தெரியாவிட்டாலும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போய் குறைந்து விட்டது.

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

? இனி என்றும் கூட்டாட்சிதான் என்று கலைஞர் கூறுவது சரியா...?

! மாநிலத்திலுமா?!

● ஸி. மகேஷ், சென்னை – 26.

? சென்னைக்கு எது முதலில் வரும் – கிருஷ்ணா நதி நீரா? குடிதண்ணீர்ப் பஞ்சமா?

! மணியோசை கேட்க ஆரம்பித்து விட்டது – குடிநீர்ப் பஞ்சம்; பின்னாலேயே கிருஷ்ணா நதி நீர் என்ற யானையும் வந்தால் தேவலாம்!

● தி. சந்தானம், சென்னை – 35. ✱

? முக்கால்வாசி தமிழர்களால் 'ழ' என்ற சொல்லை உச்சரிக்க முடியவில்லை. இதைக் கருதி, எல்லோராலும் எளிதாக உச்சரிக்கப்படுகிற 'ள'வை 'ழ'க்குப் பதிலாக ஏற்றுக் கொண்டு 'தமிழ்' என்பதை 'தமிள்' என்று மாற்றிவிட வேண்டும். நாம் எல்லோரும் 'தமிளர்கள்'. அப்போது தான் தமிழை – மன்னிக்கவும் – தமிளை கட்டாயப் பயிற்றுமொழியாகச் செய்வது பொருத்தமாக இருக்கும்! என்ன சொல்கிறீர்கள்?

! பாளாய்ப் போற யோசனையாயிருக்கே!

● கப்புவேதையா சித்திரவேலு,
கருப்பம்புலம்.

? அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமியின் இலாகா மாற்றம் ஏன்...?

! ஊட்டி வனப்பகுதியில் படப்பிடிப்புக்கு அனுமதி தரப்பட்டதன் எதிரொலியாக இருக்கலாம்.

● எம். ராஜேந்திரன், லால்குடி.

? நுழைவுத் தேர்வில் தோற்ற லல்லு பிரசாத்தின் மகன் எம்.பி.பி.எஸ். தேர்வில் முதலிடம் பெற்றதைப் பற்றி...?

! பேப்பர் திருத்தியது ராப்ரியோ என்னவோ?

● ஆர். ராஜா சாஹிப், சென்னை – 6.

? இந்த நூற்றாண்டின் சிறந்த தமிழர் யார்?

? இந்த நூற்றாண்டின் சிறந்த இந்தியர் யார்...?

? இந்த நூற்றாண்டின் சிறந்த இந்தியப் பெண்மணி யார்...?

! மூன்றுக்கும் சேர்த்து ஒரே மூன்றெழுத்து பதில்: எம்.எஸ்.எஸ்.

❑ ரூ. 50 முதல் பரிசு
பெறுபவர் :
வி. லக்ஷ்மிராமன்,
13, தனலக்ஷ்மி நகர் பிரதான சாலை,
ஸ்ரீ ராஜேஸ்வரி நகர் மேற்கு (விரிவு),
சேலையூர், சென்னை – 73.

✱ ரூ. 25 இரண்டாம் பரிசு
பெறுபவர் :
தி. சந்தானம்,
6, ஐந்தாவது தெரு,
நந்தனம் விரிவு,
சென்னை – 35.



# அக்கு

பேருந்து கக்கிய கரும்புகைப் படலம் காற்றில் கலைய நடந்து சென்று கொண்டிருந்த அப்பாவின் பின்புறம் முதலில் கலங்கலாகவும் பிறகு தெளிவாகவும் தெரிந்தது.

திரும்பிப் பார்க்கக் கூடாது என்று ஒவ்வொரு முறையும் நினைத்தாலும் பேருந்தில் ஏறினால் கடைசி வரிசையில் இடம்பிடித்து அமர்வதும் கையசைத்துத் திரும்பிச் செல்லும் அப்பாவின் முதுகை வெறிப்பதும் தவிர்க்க முடிவதே இல்லை.

கொஞ்சம் தளர்ந்த நடையில் அவருடைய முதுகைப் பார்க்கும்போதெல்லாம் ஏதோ ஒரு மாதிரியான உணர்வில் அடிவயிறு பிசையப்பட்டு கண்கள் பொங்கி விடுகின்றன. அந்த முதுகில் நான் செய்த தவறுகள் படமாய்த் தெரிவது போல் தோன்றும். காரணமே இல்லாமல் 'அப்பா பாவம்! அப்பா பாவம்' என்கிற பச்சாதாபம் ஊற்றெடுத்துப் பீறிடும்.

இதற்காகவே அப்பாவிடம் பலமுறை சொல்லியிருக்கிறேன். நீங்க என்னை வழியனுப்ப பேருந்து நிறுத்தம் வரை வரவேண்டாம் என்று. அவர் கேட்க மாட்டார். எனக்குக் கோபம்தான் வரும்.

காரணமே இல்லாமல் இப்போதெல்லாம் சள்புள் என்று கோபம் வருகிறது எனக்கு. என்னுள் இந்த மாற்றத்தைக் கடந்த ஓரிரு வருடங்களாகவே உணர முடிகிறது. முன்பெல்லாம் நான் சாது என்று சொல்லிக் கொள்ளத் தயாரில்லை என்றாலும் அப்படி ஒரு முத்திரை என் மீது விழுந்திருந்தது. நான் கோபப்பட்டால் கூடக் குழந்தையின் கோபம் மாதிரி இருக்கும் என்பார் அப்பா. எனக்கு அதற்கு அர்த்தம் புரிவதில்லை. மற்றவர்கள் பொருட்படுத்தாமல் விடுகிற அளவில்தான் என் கோபத்தின் வீரியம் அப்போது இருந்ததோ என்னவோ?

இப்போதைய கோபம் யார் மீது என்று என்னால் குறித்துச் சொல்ல முடியவில்லையே தவிர, கோபத்தில் என்னிடமிருந்து வார்த்தைகள் தெறித்து விழுந்த பிறகு கொஞ்ச நேரத்தில் தெரிந்து விடுகிறது - இந்தச் சந்தர்ப்பத்துக்கு இவ்வளவு கோபமும் இவ்வளவு கூர்மையான வார்த்தைகளும் தேவையற்றவை என்று. ஆனாலும் காலம் கடந்த தெளிவாக இருக்கிறதே.

என்னுடைய கோபத்திற்கு அதிக அளவில் பலியாவது அப்பாவாக அமைந்து விடுவதுதான் அதைத் தொடர்ந்த என் வேதனைகளுக்கு முக்கியக் காரணம். சங்கடப்பட்டு நான் மன்னிப்புக் கேட்ட சந்தர்ப்பங்களும் உண்டு.

இன்று காலை கூட லேசான வாய்ச் சண்டை...

பெ. நாயகி



நான் இரண்டு நாட்கள் அலுவலக விஷயமாகச் சென்னை கிளம்பிக் கொண்டிருந்தேன். தனியான அப்பா நேற்று வரை சின்ன அக்கா வீட்டுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் போய் வந்து விடுகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தார். இன்று காலை என்ன நினைத்தாரோ தெரியவில்லை. நான் போகலை. நீ திரும்பி வரும் வரை இங்கேயே இருந்து விடுகிறேன் என்றார்.

சரி, அவர் இஷ்டம் என்று நான் விட்டிருக்கலாம். அல்லது நீங்க அக்கா வீட்டுக்குப் போய் ரொம்ப நாளாச்சு. ஒரு நடை போய்ப் பார்த்துவிட்டு வந்திடுங்க என்று அவரைச் சம்மதிக்க வைக்க முயற்சி செய்திருக்கலாம். இரண்டையும் செய்யாமல் லேசான எரிச்சலுடன் பேச்சு வளர்த்தேன்.

"என்னாச்சு, நினைச்சு நினைச்சுப் பேசறீங்க?"

அப்பா பதில் சொல்லாமல் தயங்கினார்.

"சும்மா முழுங்கி முழுங்கிப் பேசாதீங்கப்பா. ஏன் என்னை மாதிரி வெளிப்படையா இருக்க மாட்டேங்கறீங்க?"

"என்னவோ போக வேணாம்னு தோணுது. அவ்வளவுதான்" என்றார்.

"உங்களுக்குப் பயம். அக்கா ஏதாவது கோபிப்பாளோ என்று பயம். வர வர ரொம்பக் கோழையா ஆயிட்டு வர்றீங்க. ஏம்ப்பா இப்படி இருக்கீங்க? தைரியமா இருங்களேன். வாழ்க்கைல அஞ்சு பிள்ளைகளை வளர்த்துக் கரை சேர்த்திருக்கீங்க தனி ஆளா. யாருக்குப் பயப்படணும்..." என்று படபடவெனப் பொரிந்தேன்.

அப்பா வெறிப்பது போல் உணர்வுகளற்று என்னைப் பார்த்தார்.

எனக்கு என்னவோ போலாகி விட்டது. ஏன் பேசினேன்

என்று பட்டது. அற்ப விஷயம். அவருடைய மகன் வீடு. அவர் போகிறார் போகவில்லை. எனக்கு ஏன் தேவையில்லாத கோபம் என்று உள் மனது குத்தியது.

இந்தப் பாழாய்ப் போன உள் மனது எப்போதுமே நான் உளறிக் கொட்டிய பிறகு தான் குத்திக்காட்டி கண்டிக்க எழுகிறதே தவிர முன்கூட்டி எச்சரிப்பதே இல்லை.

“சரி, இப்போ நான் என்ன செய்யட்டும்?” என்று அப்பா பரிதாபமாகக் கேட்ட போது, எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

“உங்க இஷ்டம்ப்பா” என்றபடி புறப்பட்டேன்.

இந்தப் பயணம் முழுதும் இதே உறுத்தலாக இருக்கும்.

அப்பா மீது கோபமோ வருத்தமோ துளி கூட இருக்க முடியாது எனக்கு. சொல்லப் போனால் இப்படி ஓர் அப்பா யாருக்குக் கிடைப்பார் என்று நட்பு வட்டத்தில் அவரைப் பற்றித் தெரிந்த எவரும் சம்பிரதாயமாக அன்றி சத்தியமாகவே சொல்வது வழக்கம்.

ஐந்து பிள்ளைகளைப் பெற்றவர், மனைவியை இழந்ததில் இடிந்து போகாமல், தனி ஆளாக அனைவரையும் படிக்க வைத்து மூத்த நால்வரையும் நல்ல இடங்களில் மணமுடித்தும் வைத்து இப்போது என்னோடு இருப்பதைக் கடமையாகக் கருதி இருக்கிறார் என்பது சாதாரண விஷயமா?

நான் ஒரு பெண்ணைக் காதலித்து அவள் ஓர் அமெரிக்க மாப்பிள்ளையுடன் தன்னை இணைத்துக் கொள்ள, எனக்குத் திருமணமே வேண்டாம் என்று சொல்லி அதையும் மௌனமாக அங்கீகரித்துள்ளாரே.

அக்காள்களும் அண்ணன்களும் சொல்லிப் பார்த்துத் திட்டிப் பார்த்து சலித்து விட்டார்கள்.

“அப்பா! நீங்க சொன்னா கேட்பான்” என்றார்கள்.

அப்பா வெறும் புன்னகையுடன் விட்டு விட்டார்.

அவர் அதிகம் சிந்திக்கும் வழக்கம் உள்ளவர் அல்லர். ‘அவனுடைய வாழ்க்கையை அவன்தான் தீர்மானிக்க வேண்டும். யாருடைய கருத்தையும் யார் மீதும் திணிப்பது என்பது எனக்குச் சம்மதமில்லாத விஷயம்’ என்று கூறி இருந்தார் என்றால் என் அபிப்ராயத்தில் இமயத்துக்கு உயர்ந்திருப்பார். அவர் சிந்தனாவாதியாக இல்லாவிட்டாலும் அவருடைய சாதாரண அசைவுகளுக்கும் என் சிந்தனை மூலாம் பூசி அவரை உயரே தூக்கி வைத்துப் பார்ப்பதில் எனக்கு ஓர் அற்ப சந்தோஷம் எப்போதும். வைக்கோல் கன்றின் முட்டலில் கூட பால் சுரக்கிறதே பசு – அது போல.

முன்பும் அப்பாவுடன் வாய்ச் சண்டைகள் போட்டிருக்கிறேன். அப்போதெல்லாம் அப்பாவும் சரிக்குச் சரி வாதாடுவார். ஒரு வேளை என்னுடைய வார்த்தைகள் அப்போது தடிப்பாக இல்லாமல் மென்மையாக இருந்தனவோ. அதனால் பதில் பேசினாரோ? இப்போது அக்னி ஜ்வாலையாக வார்த்தைகள் வருவதால் அமைதியாகி விடுகிறாரோ?

அவர் வார்த்தைகளால் பதில் தந்த போது வாதாட முடிந்த என்னால் அவருடைய மௌனத்தை எதிர்கொள்ள முடியவில்லை.

வார்த்தைகளை உதறி விட்டு நிற்கும் போது அவர் நிராயுதபாணி இல்லை என்று தான் படுகிறது. மௌனம்தான் அவருடைய அல்டிமேட் வெப்பன். பல சமயங்களில் அந்த மௌனம் பெரிய கண்ணாடியாக என் முன் விரிந்து என்னுடைய கோர உருவை அடையாளம் காட்டி அவமானப்படுத்தியிருக்கிறது. ‘பார்! நீ இப்போது என்னுடைய பழைய மகன்தானா? அவனுடைய அடையாளங்கள் ஏதாவது உன்னிடம்



**மானேஜர்: கரண்ட் வந்து எவ்வளவு நேரமாச்சு... ஜெனரேட்டரை ஏன் இன்னும் அணைக்கலை?**

**ப்யூன்: ஜெனரேட்டரை அப்பவே ஆஃப் பண்ணியாச்சு சார்... இது ஹெட் கிளார்க்கோட குறட்டைச் சத்தம்!**

**— மேல்மங்கலம் பத்ரா**

இருக்கிறதா? உனக்காவது உன்னை அடையாளம் தெரிகிறதா? உன்னிடத்தில் இப்போது நிற்பது ஓர் அரக்கன். அவனுடன் எனக்கென்ன பேச்சு? என் மகனுடன் மட்டும்தான் நான் பேசுவேன்' என்று அப்பா சொல்லாமல் சொல்வது போல் உருவகித்துக் கொள்வேன்.

அவர் இவ்வளவெல்லாம் யோசித்துச் செயல்படுபவரில்லை என்று தெரியும். எனக்குத்தான் அளவுக்கு மீறிய சிந்தனை. அதுவே எனக்கு எதிரி.

இன்றைய பேச்சுக்களின் போது கூட நான் கொஞ்சம் இதமான வார்த்தைகளை உபயோகித்திருக்கலாம். நாக்கு தடித்துப் போனது என்று சொல்வது போல் என் வார்த்தைகள் தடித்து விட்டன என்பது நிஜம்.



பயப்படதீங்க என்று சொல்ல நினைப்பதை கோழை என்று சொல்லும் போது முகத்தில் அறைந்த மாதிரி படுகிறதே. முகம் என்பது மூஞ்சி என்றாகி இப்போதெல்லாம் முகரை என்று திரிந்து விட்டது. எதற்கு என்கிற பதம் கூட எந்த எழவுக்கு என்றுதான் வருகிறது.

பாவம் செய்கிறேன் என்று படுகிறது.

யோகம், தியானம் என்று ஏதாவது செய்ய வேண்டும். என்னை அறிய முயற்சிக்க வேண்டும். பாசமே உருவான அப்பா, எனக்கு முழு சுதந்தரம் கொடுத்து அன்பு பொழியும் அப்பா. அவர் மீது ஏன் எரிந்து விழுகிறேன் என்று தெரிய வேண்டும். காரணம் அறிந்து அதனை அகற்ற வேண்டும்.

குஞ்சு மிதித்து கோழிக்கு வலிக்கத் தொடங்கும் முன், அப்பா எப்போதாவது பெரிய அளவில் காயப்பட்டு விடும் முன் அதைச் செய்தாக வேண்டும்.

ஏதோ அப்பா வாழ்க்கையை, யோசனை, சிந்தனை, தெளிவு போன்ற உயர்நிலை அடுக்குகளைத் தொட்டுப் பார்க்கும் பிரயத்தனம் ஏதுமின்றியே ஓட்டி விட்டார். அவர் அதிர்ஷ்டம் இந்த மாதிரி காரணம் தேடி உள்மனம் உளைச்சல் பெறும் காரியம் ஏதும் அவர் வாழ்க்கையில் குறுக்கிடவில்லை. அதனாலேயேதான் என் கோபத்தை எதிர்கொள்ளக் கூடத் திராணி இல்லாதது போல் ஒடுங்கிப் போகிறார்.

பாவம் அவருக்கும் சிந்திக்க சொல்லித் தர வேண்டும்.

இப்போதைக்கு குறைந்தபட்சம் ஊருக்குத் திரும்பியதும் மன்னிப்புக் கேட்க வேண்டும்.

கேட்டேன். அப்பா வழக்கமான புன்னகையுடன் அதனையும் எதிர்கொண்டார்.

அப்பா என்னையே உற்று நோக்கினார்.

''என்னப்பா?''

''இருபத்தொன்பது வயது என்பது கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று முடிவு செய்வதற்குப் பக்குவமான வயது என்று எனக்குத் தோன்றவில்லை. நீ ஒப்புக் கொள்வாயோ மாட்டாயோ, இந்த மாதிரியான உன்னுடைய அர்த்தம் தெரியாத கோபக் கொந்தளிப்புகளுக்குக் காரணமே நீ கல்யாணம் செய்துக்காததுதான் என்பேன்'' என்றார்.

முதன் முறையாக அவர் முன் நடுங்கியபடி நின்றேன். ●

## 'நிருத்ய கலாசிரோன்மணி' ராதா!

**நா**ட்டிய ஆசிரியர் என்கிற முறையில் இன்று பெரிதும் மதித்துப் போற்றப் படுகிறவர் ராதா. வழுவூர் பாணியின் தூய்மை கெடாமல் அடுத்த தலைமுறைக்கு அதை வழங்கி வருகிறார். ஆரம்ப காலத்தில் அக்கா கமலா, தங்கை வசந்தி ஆகியோருடன் சேர்ந்து நிகழ்ச்சிகள் வழங்கி வந்தார். (கமலா – சினிமா புகழ் 'பேபி' கமலாதான்!)

ராதா, வகுப்புகள் ஆரம்பித்தபோது ஆறு மாணவிகள் மட்டுமே சேர்ந்தனர். இன்றும் அவர் மாணவிகளின் எண்ணிக்கை அதிகமில்லை. முப்பது பேர் கற்றுக் கொள்கிறார்கள் – ஆனால் முழுமையான, செறிவுள்ள பயிற்சி. வழுவூர் பாணியின் தனித்தன்மை, விறுவிறுப்புடன் கூடிய நளினம்.

நுங்கம்பாக்கம் கல்கரல் அகாடமியில் 'நிருத்ய கலா சிரோன்மணியாக' கௌரவிக்கப்பட்டார் ராதா.

— சாருகேசி

# இசையிலும் இயற்கையைப் போற்றியவர்!

**வீணைக் கலைஞர் கே.எஸ். நாராயணசாமி அண்மையில் காலமானார்.**

“அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வேலை பார்த்துக்கொண்டிருந்தார் கே. எஸ். நாராயணசாமி. எனக்கு அவர் மீது இருந்த நம்பிக்கையின் காரணமாக, அவரை திருவனந்தபுரத்தில் சுவாதித் திருநாள் இசைக் கல்லூரிக்கு வந்துவிடும்படி கேட்டுக்கொண்டேன். அப்போது பாபுலர் கவர்ன்மென்ட் இல்லை. மகாராஜாவின் விருப்பப்படிதான் அவரை வரவழைத்தேன். சுவாதித் திருநாள் கீர்த்தனைகளை ஸ்வரப்படுத்தி, நொட்டேஷன் எழுதுவதில் அவர் சூரர்.

“1942 வாக்கில் அவர் திருவனந்தபுரம் வந்தார். அவருடன் கூடவே அவர் தமையன் மகன் சிவராமனும் வந்தார். இருவரும் இருந்ததால், வீணை சொல்லித் தர ஒரு செக்ஷனை ஓபன் பண்ணி வைத்தேன். அவருடைய வாசிப்பினால் அவருக்கு மிக நல்ல பெயர். நிறையப் பேருக்குச் சொல்லிக் கொடுத்தார்.

“திருவனந்தபுரத்திலும், பிறகு பம்பாயிலும் அவருக்கு ஏராளமான மாணவிகள் - மாணவர்கள். காண்டாக்ட் மைக் வைத்துக் கொள்ளாமல்தான் வாசிப்பார். இயற்கையான வீணையின் நாதத்தை அது தராது என்பது அவர் கருத்து. அளவோடுதான் வாசிப்பார். அதுதான் அவரை மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காண்பித்தது.

“அவருடைய மருத்துவ சிகிச்சைக்காக அவருடைய மாணவ - மாணவிகள் அத்தனை பேரும் நிதி உதவி செய்தார்கள்.



எங்களைப் போன்ற இசையுலக நண்பர்களும் உதவினோம். நான் கடைசியாக அவரைப் பார்க்கச் சென்றபோது, உடம்பை முழுதும் போர்த்திக் கொள்ள ஒரு ஷால் வேண்டியிருக்கிறது என்றார். போய்க் கொடுத்துவிட்டு வந்தேன்,” என்றார் செம்மங்குடி சீனிவாசய்யர்.

பம்பாயில் கே.எஸ். நாராயணசாமி அவர்களிடம் வீணை பயின்றவர் நிர்மலா பார்த்தசாரதி. “பொறுமையாகச் சொல்லிக் கொடுப்பார். வகுப்பில் பத்துப் பேர் இருந்தால், அந்தப் பத்துப் பேரும் பல்லவியைப் பிழையின்றி வாசிக்கும் வரை அனுபல்லவி - சரணத்துக்குப் போக மாட்டார். அவரும் கூடவே அத்தனை தடவையும் பொறுமையாக வாசிப்பார். கீர்த்தனைகளுக்கு நொட்டேஷன் எடுத்துக் கொள்ள அனுமதிக்க மாட்டார். அப்போதுதான் மனத்தில் நன்றாகப் பதியும் என்பார். வீட்டில் போய்த்தான் எழுதி வைத்துக் கொள்வோம். இப்போதும் அவரது அபார பொறுமைதான் எனக்கு நினைவுக்கு வருகிறது!” என்கிறார் நிர்மலா பார்த்தசாரதி.

**— சாருகேசி**

# KALKI SHOPPING PAGE



## ராஜதிர்பார்

● லாலு, இப்போது வசமாக மாட்டிக்கொண்டிருக்கிறார், வருமான வரித் துறையினரிடம். லாலுவின் சம்பந்தி ராம் பாபு பாதிக்கையும் குடைந்து கொண்டிருக்கிறார்கள் வவரித்துறையினர். லாலுவின் மகள் மிசா பாரதியின் திருமணத்துக்கு எங்கிருந்து வந்தன அத்தனை தங்க - வைர நகைகள் என்பதுதான் கேள்வி. இது பற்றி டெல்லியிலுள்ள தங்க - வைர வியாபாரி ஒருவரிடமும் விசாரித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், லாலு பந்தல்காரரிலிருந்து, மேளக்காரர்கள் வரை யாருக்கும் இதுவரை செட்டில் செய்யவில்லையாம். ஆளுக்கு நூறு ரூபாய் என்று அட்வான்ஸ் தந்ததோடு சரியாம். இதுவும் வருமான வரித் துறையை ஏமாற்றுவதற்குத்தானா என்கிற கேள்வியும் எழுந்துள்ளது. இது சம்பந்தமான அனைவரும் லாலு சிஷ்யர்களால் மிரட்டப் பட்டுள்ளதால் யாரும் சரியாகப் பதில் சொல்ல மறுக்கிறார்களாம். இதற்கிடையில் வருமான வரித் துறையினரும் மிரட்டலுக்கு ஆளாகியுள்ளதால், டெல்லியின் உதவியைக் கோரியிருக்கிறார்களாம் அதிகாரிகள்.

● மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பிளந்து ஒரு புதிய கட்சியைத் தொடங்குவதற்குத் தயாராகி வருகிறது ஓர் இளைஞர் கூட்டம். இதற்குச் சென்ற தேர்தலில் டிக்கெட் மறுக்கப்பட்ட இளைஞர் ஸைஃபுத்தின் சௌத்ரிதான் தலைமை வகிக்கிறாராம். எனவே, கட்சியின் தலைமை அலுவலகமான, கோபால் பவனில், இந்தப் புதிய கட்சிக்கும் அரசியலிலிருந்து ஜோதிபாசு ஓய்வு பெறுவதற்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கிறதா என்பதுதான் பரபரப்பான பேச்சாக இருக்கிறது. ஏனெனில் பாசுவைத் தொடர்ந்து முதல்வராக வர இருப்பவர் புத்ததேவ் பட்டாச்சார்யா. அப்போது அவருக்கு எதிராக ஏற்படும் அதிருப்தி, பிளவில் முடியலாம் என்பது கணிப்பு. இது பற்றி ஸைஃபுத்தினிடம் கேட்டபோது, "இது பற்றி இந்த நூற்றாண்டில் ஒன்றும் பேச மாட்டேன். அடுத்த நூற்றாண்டு ஆரம்பத்தில் நடக்கப் போவதெல்லாம் நன்மைக்கானதாகவே இருக்கும்!" என்றார் பூடகமாக.



• மகளுடன் ராப்ரிதேவி

● நாடாளுமன்ற நடவடிக்கைகளில் தமிழகத்தைச் சேர்ந்த சில அமைச்சர்களின் செயல்பாடுகள் கடும் கண்டனத்துக்கு உள்ளாகியிருக்கின்றன. சுகாதாரத்துறை தொடர்பான கேள்வி ஒன்றுக்கு அமைச்சர் சம்பந்தமேயில்லாத பதில் ஒன்றைக் கூறப் போக, "வீட்டுப் பாடத்தைச் சரியாகப் படித்து விட்டு அவைக்கு வாருங்கள்!" என்று அமைச்சரை ஒரு பிடி பிடித்தார் சபாநாயகர். இது பற்றி டாக்டர் ராமதாசிடம் வாஜ்பாய் குறைபட்டுக் கொண்டிருக்கிறார்.

● பி.ஜே.பி., காங்கிரஸ் என்று எல்லா கட்சிகளிலிருந்தும் ஒன்றிணைந்த பிராமண உறுப்பினர்களைக் கொண்ட 'உ.பி. பிராமண மகாசபா' மீரட்டில் ஒரு மாநாடு நடத்தியது. அதில் கல்ராஜ் மிஷ்ரா என்ற உ.பி. அமைச்சர் ஒருவரும் கலந்து கொண்டார். 'வாஜ்பாயினால் பிராமண சமூகத்துக்கு ஒரு நன்மையும் ஏற்படவில்லை. உச்ச நீதிமன்றத் தீர்ப்பையும் மீறி இட ஒதுக்கீட்டை அங்கீகரித்து விட்டார் வாஜ்பாய். அதனால், மொழி, பிராந்திய உணர்வு, உட்பிரிவுகளைக் கடந்து பிராமணர்களெல்லாம் ஒன்று சேர வேண்டும்' என்று மாநாட்டில் ஒரு

தீர்மானமும் போட்டனர். அடுத்த ஆண்டு அப்படிப் வருவது உறுதியாகி விட்டதாம். இருபதாண்டுகளுக்குப் பிறகு நடக்கப் போகிற அமெரிக்க அதிபரின் விஜயம் என்பதால் புது டெல்லி வட்டாரங்கள் மிகுந்த பரபரப்புக்குள்ளாகியிருக்கின்றன. ஆனாலும் அணு ஆயுத ஒழிப்புப் பத்திரத்தில் இந்தியா கையெழுத்திட்டால் கிளிண்டனின் குரல் இந்தியாவுக்கு ஆதரவாக ஒலிக்குமாம். இல்லையெனில் எதிராகத்தான் ஒலிக்கு மென்றும் அதிகார வட்டாரங்களில் கிசுகிசுக்கப்படுகிறது.





• கிளிண்டன்

# மகள் திருமணத்தால் மாட்டிக் கொண்ட லாலு!

பட்ட அனைத்து பிராமண மகாசம்மேளனம் ஒன்று நடக்கும் என்றார் மகா சபா நிர்வாகி சகுந்தலா கௌஷிக். மாநாட்டில் பரசுராமர் பூஜிக்கப்பட்டார். காரணம்? அவர் அனைத்து க்ஷத்ரியர்களையும் ஒழிக்கச் சபதம் போட்டவர் என்பதாலாம்!

• ஒரு வழியாக, வரும் மார்ச் மாதத்தில் இந்தியா வருவதற்கு ஒப்புக்கொண்டு விட்டாராம் பில் கிளிண்டன். அணு ஆயுத ஒழிப்புப் பத்திரத்தில் இந்தியா கையெழுத்திட்டாலும் சரி, இடா விட்டாலும் சரி... அவர்

• சோனியாவின் ஐம்பத்திரண்டாவது பிறந்த நாள், ஒரு முடிசூட்டு விழா போல்தான் நடந்தது. வைரம் பதித்த கிரீடத்தை ஒருவர் சூட்ட, தங்கவாள் ஒன்றைச் சீக்கியர்கள் பரிசளிக்க, ஐம்பது கிலோ தங்கமும் பரிசாக அளிக்கப்பட்டது. எல்லாம் 'ஜெ'வுடனான கூட்டணி சகவாசமோ என்று பலரும் சந்தேகப் பார்வை பார்க்க, அவை அனைத்தையும் ஒரிசா புயல் நிவாரண நிதிக்கு என்று அறிவித்து, நேரு குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றி விட்டார், சோனியா!

• சோனியா – மூப்பனார் சந்திப்பின்போது என்ன பேசியிருப்பார்கள் என்பது மிக மிக ரகசியமாகவே வைக்கப்பட்டிருக்கிறது. மூப்பனார், செய்தியாளர்களைச் சந்திக்காமல் நழுவி விட்டார். ஆனாலும் அதிமுகவுடனான உறவைக் காங்கிரஸ் முறித்துக் கொள்வதற்கான தருணம் பற்றியும், ஜெ.மீதான வழக்குகளின் போக்கு பற்றியும் விவாதிக்கப்பட்டதாகச் செய்திகள் கசிந்தன. மூப்பனார் போன்ற ஒரு தென்னிந்தியத் தலைவர் காங்கிரஸில் இருந்திருந்தால், வட மாநில காங்கிரஸாரிடையே ஏற்படும் பிரச்னைகளைப் போட்டி பொறாமைகள் இல்லாமல் கையாள முடியும் என்று சோனியா தரப்பில் சொல்லப்படுகிறது. இருந்தும் காங்கிரஸ்– தமாகா. இணைப்பு இப்போதைக்குச் சத்தியமில்லையென்றும் 'இணைந்து செயல்படுதலே' தற்போதைய சாத்தியம் என்றும் சொல்லப்படுகிறது.

— இந்த்ரப்ரஸ்தன்

வில்லிவாக்கம் தொகுதி முன்னாள் எம்.எல்.ஏ. உ.ரா. வரதராசன் இப்போது டெல்லியில் வசிக்கிறார். இந்திய தொழிற்சங்க மையத்தின் (சி.ஐ.டி.யு.) அனைத்திந்திய செயலாளர்களில் இவரும் ஒருவர். சமீபத்தில் ஈராக்கில் நடைபெற்ற ஈராக் தொழிற்சங்க பொதுச் சம்மேளனத்தின் பன்னிரண்டாவது மாநாட்டில் உ.ராவும் அவர் மனைவியும் இந்தியாவின் சார்பில் கலந்து கொண்டு திரும்பியிருக்கிறார்கள்.



• சதாமுடன் நான்...

# சதாம் உசேன் பக்கத்தில்...

**தமது ஈராக் பயணம் பற்றிய அனுபவத்தை இங்கே பகிர்ந்து கொள்கிறார்....**

● 91-லிருந்து, கடுமையான அமெரிக்கத் தாக்குதல் மற்றும் பொருளாதாரத் தடையினால் மோசமாகப் பாதிக்கப்பட்டும், சதாம் உசேனின் தலைமையை அந் நாட்டு மக்கள் நேசிக்கும் ஆழத்தைப் பார்த்து நான் சிலிர்த்துப் போனேன். சதாம் உசேனின் தலைமையை மாற்றி விட வேண்டும் என்று அமெரிக்கா இன்னமும் துடியாய்த் துடிக்கிறது. ஆனாலும் சதாம் தலைமை வேண்டுமா வேண்டாமா என்று ஒரு கருத்துக் கணிப்பு எடுக்கப்பட்டபோது 'வேண்டும்.. வேண்டும்... சதாம் உசேன் வேண்டும்' என்றுதான் ஒரே குரலில் மக்கள் வாக்களித்தார்கள்.

● எங்கள் மாநாடு நடைபெற்ற அரங்கில் உரையாற்றியவர்கள் சதாம் உசேன் பெயரை உச்சரித்தபோதெல்லாம் ஆங்காங்கேயிருந்த பார்வையாளர்கள் சிறு சிறு குழுக்களாக எழுந்து ஏதோ அரேபிய மொழியில் கவிதை போல சில வரிகளைச் சொல்லி மகிழ்ந்தார்கள். அந்த வரிகள் கடைசியில் சதாம் உசேன் என்று முடியும். இதெல்லாம் எனக்கு வித்தியாசமான அனுபவமாக இருந்தது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பது ஈராக் மக்களுக்கு இயல்பான உணர்வாகவே வெளிப்படுகிறது. இது யாரோ சொல்லிக் கொடுத்து அவர்கள் பேசுவது போல இல்லை.

● பாக்தாத்தைச் சுற்றிக் காட்டிய போது குண்டுவீச்சால் பாழாகிப் போய், பின்னர் புதுப்பிக்கப்பட்ட பல பாலங்களைச் சுட்டிக்காட்டினார்கள். "வெளிநாட்டு நிதியுதவிக்குக் கையேந்தாமல், பிற நாட்டு தொழில்நுட்பத்தை நாடாமல் நாங்களே புதுப்பித்து விட்டோம்!" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்ள அவர்கள்

தவறவில்லை.

● பாக்தாத்தில், ஓர் இடத்தில் நான் என்னையுமறியாமல் அழுது விட்டேன்! 91-ம் ஆண்டு நடைபெற்ற அதிபயங்கர வான் தாக்குதலின்போது, பொது மக்கள் போய் பதுங்கிக் கொள்ள பாக்தாத் முழுவதும் மொத்தம் நாற்பத்து நான்கு பதுங்கு குழிகள் அமைத்தார்களாம். அதில் மிகப் பெரிதாக இருந்த குழியை அடையாளம் கண்டு, அமெரிக்கா குண்டுகளை குறி பார்த்து ஏவ, உள்ளே இருந்த நானூறு பேர்-முப்பது குழந்தைகள் உட்பட அப்படியே பலியாகிப் போனார்கள்.

அந்தப் பதுங்கு குழியை அதே நிலையில் அப்படியே பராமரித்து பாக்தாத் வரும் பயணிகளை அழைத்துப் போய் காட்டுகிறார்கள். நானும் என் மனைவியும் போயிருந்தோம். அங்கு ஒரு பெண்மணி அந்தப் பதுங்குகுழியின் 'கேர் டேக்கராக' பணிபுரிகிறார். அவரது எட்டு குழந்தைகளும் அந்தக் குழியில் பதுங்கி இருந்து இறந்து போயின! அவர்களின் படங்கள், மற்றும் அவர்களோடு இறந்து போன மற்றவர்களின் படங்கள் அங்கே வைக்கப்பட்டிருந்தன. அவரே 'கைடு' ஆகவும் இருந்து விளக்குகிறார். நான் அங்கே மிகவும் உணர்ச்சிவசப் பட்டுப் போனேன்.

• உம்மன கதாவுடன் பதுங்கு குழியில்....



குண்டுகள் விழுந்தவுடன் உடல்கள் சின்னாபின்னமாகிப் போனதாம். உறுப்புகள் சிதறி குழியின் பல இடங்களில் ஒட்டிக் கொண்டு, பின்னர் அவற்றைப் பிய்த்து எடுத்திருக்கிறார்கள். அப்படி குழியின் சுவரில் போய் ஒட்டிக் கொண்ட ஒரு பெண்ணின் உடல் பிய்த்து எடுக்கப்பட்ட 'வடு' ஒரு மெல்லிய நிழல் போல இன்னமும் தெரிகிறது.

அந்த கைடு பெண்மணியிடம் நான் கேட்டேன் : "எட்டு குழந்தைகளைப் பறி கொடுத்திருக்கிறீர்கள். அந்தச் சோகம் போதாதென்று தினந்தோறும் பலமுறை அந்தக் காட்சியை இங்கே வருபவர்களிடம் விவரித்துக் கொண்டிருக்கிறீர்கள். அந்தக் கொடூரத்தை ஏன் இப்படி உங்களுக்கு நீங்களே நினைவூட்டிக் கொள்கிறீர்கள்?"

"என் கண்ணீர் வற்றிப் போய் விட்டது. ஏகாதிபத்தியத்துக்கு எதிரான வெறுப்பு மட்டுமே மிஞ்சியிருக்கிறது" என்று சொன்ன அவர், "உங்களால் ஏகாதிபத்தியத்தை எதிர்க்க ஏதாவது செய்ய முடிந்தால் அதைத் தவறாமல் செய்யுங்கள்" என்றும் கேட்டுக் கொண்டார்.

அவர் பெயரைக் கேட்டதற்கு, 'உம்மன கதா' என்றார். 'உம்மன' என்றால் தாய் என்று பொருளாம். கதா என்பது பதுங்கு குழியில் உயிர் இழந்த அவரது எட்டுக் குழந்தைகளில் மூத்த பெண்ணின் பெயர். அதாவது, 'நான் கதாவின் அம்மா' என்றுதான் தமது பெயரை அவர் சொல்கிறாரே தவிர, இயற்பெயரைச் சொல்வதில்லை. எனக்கு உள்ளபடியே கண்கள் குளமாயின.

● மாநாடு தொடங்கி, ஈராக்கின் புரட்சி கவுன்சில் அமைச்சர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தபோது அரங்குக்கு சதாம் உசேன் வருகை தரவும் அந்த இடமே வினாடியில் பரபரப்பாகிப் போனது. முன் வரிசையில் அமர்ந்த அவரை நோக்கி டீவி கேமராக்கள் வெளிச்சம் போட, நான் எனது சிறிய கேமராவால் அவரைப் படம்பிடிக்க முண்டியடித்துக் கொண்டிருந்தேன். இதைக் கவனித்து விட்ட சதாம் உசேன் என்னைக் கையசைத்து அழைத்து, தம் பக்கத்தில் காலியாக இருந்த இருக்கையில் அமரவைத்து, இன்னொருவரை விட்டு என் கேமராவால் படம்பிடிக்கச் சொன்னார். அந்த அரங்கில் வேட்டி கட்டிக் கொண்டிருந்த ஒரே நபர் நான்தான்! இதுதான் சதாமைக் கவர்ந்ததோ என்னவோ!

தொகுப்பு:
**ராணிமைந்தன்**



# கடன் வாங்கிச் செலுத்திய அபராதம்!

இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலகட்டம். சென்னையிலிருந்து ஆந்திராவுக்குப் பயணம் செய்து கொண்டிருந்தார் ராஜாஜி. பயணத்துக்கான டிக்கெட்டும் பணமும் வைத்திருந்த பர்ஸ், பாத்ருமில் தவறி விழுந்து தொலைந்து போய் விட்டது. டிக்கெட் பரிசோதகர் மிகக் கடுமையாகச் சட்டம் பேசினார். 'ஒன்று பணத்தைக் கட்டுங்கள் அல்லது அடுத்த ஸ்டேஷனில் இறங்கி விடுங்கள்!'

அந்தச் சமயத்தில் சகபயணியாக இருந்த என் தந்தை ராமசாமி, நெல்லூர் மாவட்டத்தின் பிரபல வழக்கறிஞர். ஒரு தேசியத் தலைவரை இவ்வாறு மிரட்டலாகாது என்று டி.டி.ஈ.யிடம் எடுத்துச் சொல்லிப் பார்த்தார். ஆனால் அந்தப் பரிசோதகர் தமது கடமையில் மிக உறுதியாய் நின்றார்! இத்தனைக்கும் அப் பரிசோதகர் ஒரு வழக்கில் சிக்கி நீதிமன்றம் செல்ல நேர்ந்தபோது அவருக்காக வாதாடியவர்தான் என் தந்தை!

இந்த நாடகத்தையெல்லாம் பார்த்துக் கொண்டேயிருந்த ராஜாஜி என் தந்தையிடம் பணத்தைக் கடன் வாங்கி அபராதத்தைச் செலுத்தி விட்டுப் பயணத்தைத் தொடர்ந்தார்.

இரண்டு வாரங்கள் சென்று ராஜாஜியிடமிருந்து அப்பாவுக்கு மணியார்டரில் அத்தொகை திரும்பி வந்தது. டி.டி.ஈ. தமது பொறுப்பில் தவறாமல் செயல்பட்டதை சிலாகித்து ஒரு குறிப்பும் வந்தது!

பிற்காலத்தில் நான் ஆந்திராவில் ஐ.ஏ.எஸ். அதிகாரியாகப் பணியாற்றிய போது ராஜாஜி சுவதந்தரா கட்சித் தலைவராகத் தேர்தல் பிரசாரம் செய்ய (1962) கடப்பாவுக்கு வந்தார். காங்கிரஸ் தலைவர்களான நேரு, சஞ்சீவ ரெட்டி, சஞ்சீவையா ஆகியோர் அப்போதுதான் பிரசாரம் முடித்து விட்டுப் போயிருந்தார்கள்.

ராஜாஜியை சந்தித்து என் தந்தையின் அனுபவத்தை நினைவூட்டியபோது, 'தேர்தல் பணிகளுக்கிடையே என்னை வந்து பார்க்காவிட்டால் என்ன?' என்று கடிந்து கொண்டார். எனது செயலுக்கு அரசியல் நோக்கம் கற்பிக்கப்படும் என்று எச்சரித்தார்.

ஒரு முன்னாள் கவர்னர் ஜெனரல் என்ற முறையில் மரியாதை செலுத்த வந்ததாகக் கூறினேன். "தேர்தலில் ஆளுங்கட்சி தோற்றால் என் கதி அதோகதி ஆனாலும் ஆகிவிடும்" என்று நான் சொன்னபோது பெரிதாகச் சிரித்து விட்டு, "அதுதான் நடக்கப் போகிறது!" என்றார்.

அப்படியே நடந்தது! காங்கிரஸ் எல்லா தொகுதிகளிலும் தோற்றது! ஆந்திர முதல்வர் சஞ்சீவ ரெட்டி, தேர்தல் பணிகளில் சொதப்பிய என்னை 'சஸ்பெண்ட்' செய்யச் சொன்னதாகவும் அப்போதைய தலைமைச் செயலர் எம்.பி. பாய் அதற்கு உடன்பட மறுத்ததாகவும் கேள்விப்பட்டேன்!

இது நடந்து பல வருடங்களுக்குப் பிறகு, ராஜாஜியை மீண்டும் முசோரியில் சந்தித்தேன். ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் பயிற்சிப் பள்ளியில் அப்போது நான் துணை இயக்குநராக இருந்தேன்.

ராஜாஜியின் பேரன் கோபாலகிருஷ்ண காந்தி அப்போது அந்தப் பயிற்சிக் கூடத்தில் மாணவராக இருந்தார். கடப்பா சம்பவத்தை அவர் தமது பேரனுக்கு எடுத்துச் சொன்னதாகவும் மனஉறுதிக்கு அத்தகைய சம்பவங்கள் வழிகாட்டலாக அமையும் என்று கூறியதாகவும் பின்னர் அறிந்தேன்.

அதிகாரிகள் நடுநிலையாளர்களாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்திய அபூர்வ அரசியல் தலைவர் ராஜாஜி.

**— எம். கோபாலகிருஷ்ணன்,**
**ஐ.ஏ.எஸ். (ஓய்வு)**

(நன்றி : நியூ சுவதந்தரா டைம்ஸ்)

# கிள்ளிவளவன் ஒரு நடமாடும் கம்ப்யூட்டர்!



• வாழப்பாடியுடன் கிள்ளிவளவன்

*தமிழ்நாடு ராஜீவ் காங்கிரஸின் துணைத் தலைவராக இருக்கும் கிள்ளிவளவனின் பவள விழாவை கலைஞர் தலைமையில் வாழப்பாடியார் சிறப்பாகக் கொண்டாடுகிறார்...*

**1943**ல் டில்லியில் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி என்ற பத்திரிகையில் பத்திரிகையாளராக வாழ்க்கையைத் துவக்கியவர் 'கிள்ளி' என்று தெரிந்தவர்களால் அன்புடன் அழைக்கப்படும் கிள்ளிவளவன். அதன் பின் திராவிட இயக்கத்தில் பிடிப்பு ஏற்பட்டு அதில் இணைந்தவர் கிள்ளி. 'சன்டே அப்ஸர்வர்' மற்றும் அண்ணாவின் 'ஹோம்லேண்ட்' பத்திரிகையில் பணியாற்றியவர். பின் கலைஞரின் முரசொலியிலும் செய்தி ஆசிரியராக இருந்தவர். கடந்த பத்து வருடங்களுக்கு மேல் வாழப்பாடி ராமமூர்த்தியின் அரசியல் பணிகளுக்குத் துணையாக இருப்பவர்.

"ஒரு சமயம் கலைஞர் அவர்களிடம் பழைய நிகழ்ச்சி ஒன்றைப் பற்றிக் கேட்ட போது, 'நீங்கள் கிள்ளியிடம் கேட்டுப் பாருங்களேன்' என்றார். தமிழகத்தின் கடந்த 50 ஆண்டு கால அரசியல் நிகழ்வுகளைத் தம் முன் வைத்துக் கொண்டிருப்பவர் கிள்ளி. அதற்கான ஆதாரங்களும் கைவசம் இருக்கும் நடமாடும் கம்ப்யூட்டர். வரலாற்றுப் பெட்டகம். கடும் உழைப்பாளி. கொஞ்சம் கோபக்காரர். நல்ல பேச்சாளர். எனக்கு 35 ஆண்டுகளாகப் பழக்கம். பழைய விஷயங்களைப் பற்றி ஏதாவது தெளிவு பெற வேண்டிக் கேட்டால் முதலில் "தெரியலிங்களே... பார்த்துத் தான் சொல்லணும்" என்று மேலோட்டமாகச் சொல்வார். கொஞ்சம் நெருக்கினால் அந்த விஷயத்தை விலாவாரியாக நம்மிடம் கொட்டுவார். என்னுடன் நெருக்கமாகப் பழகும் கிள்ளி, தம் குடும்பச் சூழ்நிலையைப் பற்றியோ, தமது பொருளாதார நிலை பற்றியோ என்னிடம் எப்போதும் சொன்னதில்லை. ஒரு பிரச்னையில் ஆழமான கருத்து ஏற்பட்டு விட்டால் யார் சொன்னாலும் மாற்றிக் கொள்ளமாட்டார்.

"நெடுமாறனோடு துணையாக இருந்தார். விடுதலைப் புலிகள் விஷயத்தில் கருத்து வேற்றுமை ஏற்பட்டதால் பிரிந்து வந்துவிட்டார்.

"1967ல் காங்கிரஸ் தோற்ற பிறகு, காமராஜரின் மீது கொண்ட ஈடுபாடு காரணமாக தேசியப் பாதையில் வந்தவர் கிள்ளி. தேசிய மாணவர் தமிழ் வளர்ச்சிக் குழு என்ற இளைஞர்கள் பட்டாளம் அப்போது காங்கிரஸில் எழுச்சியுடன் இருந்தது. அந்தக் காலகட்டத்தில் கிள்ளியுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. நான் அதிகாரத்தில் இருந்தபோது எனக்கு மிக அண்மையில் இருந்தாலும் எந்த வித அப்பழுக்கும் சொல்ல முடியாதபடி பணியாற்றியவர் கிள்ளிவளவன்!" என்று பெருமையுடன் சொன்னார் வாழப்பாடி ராமமூர்த்தி.

— ப்ரியன்

படம்: சௌந்தர்ராஜன்

சுமி குப்பமார்க்கெட்

# பெப்ஸி உமா சொன்ன ஜோக்!



• உமா

சுமியோட 'தங்லீஷை'த் திட்றவங்கள்ளாம் நையாண்டி தர்பார்ல யூகி சேது யூஸ் பண்ற லாங்குவேஜை கொஞ்சம் குளோஸா கவனிக்கட்டும். பேச்சுத் தமிழ்ன்றதால அதை எக்ஸ்யூஸ் பண்ணிடுவீங்க; பரிதாபமா மாட்டிக்கிட்டு முழிக்கற சுமியை மட்டும் அட்டாக் பண்ணுவீங்க!

பட், நான் யூகி சேதுவை ரொம்ப அட்மைர் பண்றேன். (சே! என்னை தர்பார் கெஸ்டா கூப்டணும்ன்ற ஆசையெல்லாம் கிடையாது..) எதுக்குன்னா எந்த சப்ஜெக்ட் பேசினாலும் நல்ல ஹோம் ஒர்க் பண்ணிட்டு வரார். அப்புறம் 'A' டாபிக்கா இருந்தாலும் அதை ரொம்ப கரெக்டா அப்ரோச் பண்றது மூலமா ஒரு கண்ணியம் கொடுக்கறார். டாக்டர் சுனிதி சாலமனும் அவரும் 'தமிழ் நாட்டில் எய்ட்ஸ்' என்கிறதைப் பத்தி உரையாடல் நடத்தினப்போ பல முக்கியமான உண்மைகள் வெளியாச்சு. புருஷனுக்கு எய்ட்ஸ் இருந்தால்கூட பரவாயில்லைன்னு குழந்தை பெத்துக்கற பெண்கள் நிறைய இருக்காங்க; இவங்க அந்த எய்ட்ஸ் விஷயத்தையே டாக்டர்கிட்ட சொல்லாம மறைச்சுடறாங்க; பிளட் டெஸ்ட் பண்ணும் போதுதான் விஷயம் வெளியில வந்து டாக்டர்களுக்கு அதிர்ச்சியும் பிரச்னையும் சேர்ந்தாற் போல் தருது!



• யூகி சேது

எய்ட்ஸைக் கட்டுப்பாட்டுல வைக்க மருந்து இருக்கு; அடியோட குணப்படுத்த நல்ல மருந்து சீக்கிரமே தயாராயிடும்.

கு.க. சாதனம் உபயோகிச்சு எய்ட்ஸிலிருந்து பாதுகாப்பு தேடிக்கோங்கன்னு மட்டுமே விளம்பரப்படுத்தறதை டாக்டர் சுனிதி சாலமன் எதிர்த்தார். ஜாக்கிரதையா தப்பு செய்ங்கன்னு சொல்றதுக்குப் பதிலா தப்பு செய்யாதீங்கன்னு சொல்றதுதான் மேல்ன்னு எடுத்துச் சொன்னது என் ரொம்ப நாள் சிந்தனையோட எக்கோ மாதிரியிருந்தது.

லல்லு வீட்டுக் கல்யாணத்துக்குப் போகணும்னிருந்தேன் முடியாம போயிடுச்சு. அன்னிக்கு எங்க காலேஜ் ப்ரொபசர் பையனுக்கு மேரேஜ்.

லல்லு எவ்ளோ பெரிய அரசியல்வாதி பாருங்க... ஐ.டி.க்காரங்க மோப்பம் புடிச்சுடுவாங்கன்னு எதிர்பார்த்து பந்தல்காரன் பால்காரன் எல்லாருக்குமே சும்மா நூறு ருபாய் அட்வான்ஸ் மட்டும் குடுத்து வைச்சிருக்கார். ஐ.டி. இவங்களை விசாரிச்சா எவ்ளோ பாக்கின்னு சொல்லக்கூடாதுன்னுட்டு லல்லுவோட அடியாட்கள் மிரட்டி வைச்சுருக்காங்களாம். கடைசில மாடுங்களை ஏமாத்தி புண்ணாக்குப் புரட்சி பண்ணின மாதிரி இந்த காண்ட்ராக்ட்காரங்களையும் அழ வைச்சு புண்ணியம் கட்டிப்பார்னு தோணுது.

இந்த வார ஜோக்னு ஒண்ணு கடைசியா சொல்ற கெட்ட பழக்கத்தை விட்டியே ரொம்ப தேங்க்ஸ்னு நிறைய லெட்டர்ஸ். அவ்ளோ குட் கர்ல் ஆயிடல நான். ஹியர் இஸ் மை ஜோக்:



"உங்க பேர் என்ன?"

"விந்தியா. பெங்களூர்லேர்ந்து பேசறேன்."

"நீங்க என்ன பண்ணிட்டிருக்கீங்க?"

"பி.காம் ஃபைனல் இயர் பண்ணிக்கிட்டிருக்கேன்."

"உங்களுக்கு எத்தனை குழந்தைங்க?"

"ஐயோ!"

"இதுக்குப் போய் ஏன் இப்படி அதிர்ச்சியாகறீங்க?"

"நான் காலேஜ்ல படிக்கறேன். இப்போதைக்குக் கல்யாணம் பண்ணிக்கற உத்தேசம் கூட இல்லேங்க!"

(நன்றி: **பெப்ஸி உமா**)

— சுமி

லலிதா, புது வீட்டுக்குக் குடி போனாள். 'சொந்தக் கூடு' என்று திருப்தியாகச் சொல்லி விட்டு, தன் கணவருக்கு இப்போது தான் சந்தோஷம் திரும்பியதாகக் கூறினாள் லலிதா. அறைகளாகத் தடுத்த, கல் சுவர்கள், செங்கல் மறைப்புதான் மனிதர்க்குத் திருப்தி தரும் சமாசாரம், அதில் வாழும் மனிதர்கள் இல்லை என்று அதில் தொனித்தது. இதை லலிதா வருத்தமாகச் சொல்கிறாளா என்று பார்த்தாள், பாரதி. துக்கம், சந்தோஷம் இரண்டும் அற்ற நிலை.

புது வீட்டின் மாடியில்தான் அவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

"வீடு நன்றாக இருக்கிறது. வீட்டுக்கும் முகங்கள் உண்டு, லலிதா. அது குழந்தை மாதிரி. அடிக்கடி சிணுங்கும். அழகாகச் சிரிக்கும். அடிக்கடி தூங்கும். அழும். எல்லாம். ஆனால், முகராசி என்று ஒன்று உண்டு. சில வீடுகள் தோளில் கை போட்டு 'வாங்க' என்கும். சிலது, மூன்று மாடி இருக்கும். ஆனாலும் குட்டிச்சுவர் மாதிரி, 'வே' என்று இருக்கும். எல்லாம் மனுஷ சுபாவம் மாதிரிதான். மனிதர்களுடன் பழகுகிற மிருகங்களுக்குக் கூட மனித முகம் வந்து விடும். பிள்ளையார் கோவில் குருக்கள் ஒருத்தரை எனக்குத் தெரியும். சாட்சாத் யானை முகம்..."

"எனக்கும் கூட ஆஞ்சநேயர் உபாசகர் ஒருத்தரைத் தெரியும்" என்று விட்டுச் சிரித்தாள் லலிதா. தொடர்ந்து, "வீடு பற்றிச் சொன்னாய். எனக்கு வீடு பற்றிய பிரச்னை இல்லை. வீட்டுக்குள் இருக்கிற மனுஷர் மேல்தான் பிரச்னை."

"உன் மாமியார் நல்ல மாதிரியாச்சே?"

"இந்த நல்ல அல்லது மோசம் என்று பிரிவினை இருக்கிறதா, என்ன?"

"இல்லைதான். என்னமோ, அந்த வீட்டு மனுஷர்களோடு என்னால் ஒட்ட முடியல்லை."

"ஏன்? உன் கணவரின் தங்கை, பிரச்னை பண்ணுகிறாளா?"

"அவ கூட இல்லை. என் கணவரையே என்னால் சகித்துக் கொள்ள முடியலை."

"ஐயையோ, என்னடி இது, இப்படிப் பேசறே?"

"உன்கிட்ட தவிர வேறு யார்கிட்ட இதைப் பத்திப் பேச முடியும்? வேரோடு பிடுங்கின மாதிரி, என்னைக் கொத்தாப் பறிச்சுக் கொண்டு வந்து இங்க நட்டுட்டாங்க. முதல் நாள், நாங்க– நானும் என் கணவரும் தனியா சந்திச்ச போது, அவர் மேல எனக்கு அபிமானம் விழலை. சரி, போகப் போக, நல்லாப் பழகிக்கலாம்னு நினைச்சேன். அதுவும் சரியா வரலை. என்னமோ, 'பேயிங் கெஸ்ட்டா' இருக்கிற மாதிரி எனக்குள்ள ஒரு எண்ணம். இதை எங்க அம்மா வீட்டிலேயே பண்ணி இருக்கலாமோ, என்கிற ஒரு ஆதங்கம்."

லலிதாவுக்குள் இப்படி, ஒரு சோகம் இருக்கும் என்று பாரதி எதிர்பார்க்கவில்லை. கணவன் – மனைவி பிணக்குக்கு என்ன காரணம் என்று யாரும் புரிந்து கொள்ள முடியாது என்பது தான் பிரச்னை. ஏன், கணவன் மனைவியே கூட அந்தப் பிணக்குக்குக் காரணம் கண்டுபிடிக்க



**பிரபஞ்சன்**

முடியாது என்பதுதான் உண்மை. எந்தப் புள்ளியில், அந்த விரிசல் ஏற்பட்டது? கேட்டாள்.

# 8



"தெரியலைடி. இது தப்புன்னு என் மனசுக்குள்ள ஒரு குடைசல். அம்மாவுக்கு இது தெரிஞ்சா, அம்மா என்ன நினைக்கும்? என்னைப் பற்றித் தப்பா, நல்ல பெண் இல்லேன்னு புரிஞ்சுக்கு வாங்களோன்னு இருக்கு. நான் ஏன் இப்படி இருக்கேன்னு தெரியலை, பாரதி. எதிலும் முழுமனசோடு இயங்க முடியலை. இருக்க முடியலை. ஒரு குழந்தைக்குத் தாயும் ஆன பிறகு, இப்படியெல்லாம் நான் இருக்கலாமோ?"

பாரதி மவுனம் காத்தான். என்னவென்று சொல்வது? மனம் வியாகூலப்பட்டது. வானம் கருமையாகி, வெளிச்சம் அற்றுக் கிடந்தது. பாட வேண்டும் என்று தோன்றியது. மென்மையாக முணுமுணுத்தபடி பாடத் தொடங்கினாள்.

'எந்நேரமும்

# முதல் மழைத்துளி

இந்தச் சஞ்சலம்
இருக்கலாமோ – எந்ததுக்கு...
அந்நேரமே வந்தெனக் கருள்புரிய
அகம் கனிய தாமதமேன்... என் வருத்தம்
பொறுக்கலாமோ... சோகம்
பெருக்கலாமோ....

பாரதி, கண்களில் இருந்து வழிந்த கண்ணீர், லலிதாவைத் துணுக்குறச் செய்தது.

"ஏண்டி?"

"வருத்தமா இருக்கு லலிதா. நாம் என்ன தப்புச் செய்துட்டோம். நமக்கு ஏன் சந்தோஷம் லபிக்கலை? ஏன் நம்ம மனசைப் புரிஞ்சுக்கத் தயக்கம்? நீங்கதான் சதம்னு வந்த பிறகும், இந்த மனுஷர்கள் ஏன் நம்மைக் கொண்டாட மறுக்கிறாங்க? அவங்க குழந்தைக்கு நாம் தாயான பிறகும், நம்ம கிட்ட இருக்கிற தாய்மையை ஏன் கணக்கிலயே எடுத்துக்க மாட்டேங்கறாங்க...?"

பாரதி லலிதாவைக் கேட்டாள்.

"ஒரு ஆணும் பெண்ணும், அல்லது இரு ஆண்களோ, இரு பெண்களோ, வாழ்நாள் முழுக்க, நேசிப்பதைத் தவிர வேறு விரிசல் இல்லாமல், வாழ்ந்திருக்கிறார்களா? வாழ முடியுமா?"

"முடியும். இருவருமே நல்ல மனிதர்களாக இருந்து, இருவருமே ஒருவர் மேல் அன்பு பாராட்டினால், அது சாத்தியம்தான். அப்படி வாழ்ந்தவர்களை நான் அறிவேன்."

"நாம் அதற்குக் கொடுத்து வைக்கலை."

"இல்லை. அவர்கள் கொடுத்து வைக்கலை. நம்முடன் சந்தோஷமாக வாழ்வதற்கு."

வானம் இன்னும் இருட்டாகத்தான் இருந்தது. இரண்டாம் பிறை கண்ணுக்குத் தெரியாமல் எங்கோ மறைந்து கிடந்தது.

லலிதா கீழே போய் காப்பி கொண்டு வந்தாள்.

"அரவிந்தன் எப்படியிருக்கிறார்?"

"உன்னை விடவும் அவர் அதிகமாகப் பாதிக்கப்பட்டுப் போய் விட்டார்."

"ஏன்?"

"ஏனா? அதுதானடி சிநேகம். உனக்கு நேர்ந்ததைப் பத்து மடங்காகப் பாவித்துத் துக்கம் கொண்டாடுவதற்குப் பேர்தானே சிநேகம்."

பாரதி, மனம் வருந்தினாள்.

"என்னால் எத்தனை பேருக்குக் கஷ்டம்?"

"அவன், ரொம்ப தொட்டால் சுருங்கி, தெரியுமோ? யாருடனும் பழக மாட்டான். அவன் உண்டு. அவன் கம்ப்யூட்டர் உண்டு. நோட்டுப் புத்தகத்தில் கவிதை எழுதிக் கொண்டு, தாடி வளர்த்துக் கொண்டு, அப்புறம் ஒருநாள் ஷேவ் செய்து கொண்டு, இப்படித்தான் இருப்பான் என்று சொல்ல முடியாதபடிக்கு இருப்பான். என்ன ஆச்சர்யம் என்றால், உன்னுடன் பேசுவது போல அவன் இன்னொருத்தருடன் பேசி நான் பார்த்தது இல்லை."

"அப்படியா?"

"ஆமாம். அவன் பணக்கார அப்பாவைப் பற்றிக் கூட அவன் பேசி நான் கேட்டது இல்லை. உன்னைப் பற்றி மட்டும்தான் அப்படி பேசுகிறான்."

"கலை ரசிகர்."

"அது மட்டும் அல்ல."

"வேறு என்ன?"

"மனிதனாகவும் இருக்கிறான்."

பாரதி மௌனமாக இருந்தாள்.

"அவன் என்ன சொன்னான் தெரியுமா? பாரதியோட கணவர், இப்படிக் கோபித்துக் கொண்டு போவார் என்று தெரிந்திருந்தால், அவர் எதிர்பார்த்த காரியத்தைப் பண்ணி இருக்கலாமே என்கிறான்."

"அது ரொம்பக் கேவலம், லலிதா. எனக்குப் பிடிக்காத, தர்மம் இல்லாத காரியத்தை நான் செய்யாமல் இருப்பது வேறு. அதை விட, அதை, இன்னொரு நல்ல ஆத்மாவின் மேல் சுமத்துவது அதைவிடத் தப்பு. பாவம்."

"குடும்பம் உடையாமல் பார்த்துக் கொண்டிருக்கலாம்."

"உடையற குடும்பம் எப்படியும் உடையும். மனிதர்களைச் சேர்த்து வைப்பது, இதுவா? இல்லை. பரஸ்பர நம்பிக்கை. அது இல்லாமல், எந்தப் பசையும் ஒட்டாது."

அவர்கள், தங்கள் சொந்த வாழ்க்கைச் சம்பவங்களில் ஆழ்ந்து போயிருந்தார்கள்.

"கனகராஜ் என்ன சொல்றார்?"

"கடிதம் எழுதி இருக்கிறார். அந்த டில்லி விஷயத்தை முடித்துத் தந்தால்தான் அவர் வருவாராம்."

"தாம்பத்யத்துக்கு அதுதான் நிபந்தனையாமா?"

பாரதி, கசப்புடன் சிரித்தாள்.

"குழந்தைதான் அடிக்கடி அப்பாவைக் கேட்கிறது."

"அதுதான் சிக்கல். நம்மை அடித்துப் போகும் பிரச்னைகளில் தலையான பிரச்னையே அதுதான்."

**பா**ரதி, ஒன்பது மணிக்கு மேல் வீடு திரும்பினாள். அப்பா, குழந்தைக்கும் உணவு பரிமாறி, தானும் சாப்பிட்டு விட்டிருந்தார்.

குழந்தை தூங்கியிருந்தாள்.

அப்பா, "முதலில் போய்ச் சாப்பிடு" என்றார்.

அவள் சாப்பிட்டு வந்து, அப்பா முன் அமர்ந்தாள்.

"ஏதானும் சங்கதி இருக்காப்பா?"

"இருக்கும்மா."

அவர் வார்த்தைகளைக் கோப்பது தெரிந்தது. ஏதாவது முக்கியமான சங்கதியாக இருக்கும்.

"சொல்லுங்கப்பா."

"உங்க அத்தை சொல்லிவிட்டு இருக்காங்க. அவன், ஏதோ அயல்நாடு போறதா இருக்கானாம்."

"ஓகோ"

"அது விஷயம் இல்லை. குழந்தையைக் கேட்பான் போல."

"என்ன, சந்தியாவைக் கேக்கிறாரா?"

ஆம் என்பதாகத் தலையசைத்தார் அப்பா.

துக்கம் பொங்கியது, பாரதிக்கு. அழுதாள். அவள் கன்னத்தில் வழியும் கண்ணீரைப் பார்த்து, அப்பா பதறினார்.

"என்னத்துக்கு அழறே? அப்படியெல்லாம் எதுவும் நேராது."

அவள் வருத்தம் அழுந்த அமர்ந்திருந்தாள்.

"வேறு என்ன சேதிப்பா?"

"வேணாம்மா."

"சொல்லுங்கப்பா."

"ஒன்றும் இல்லேம்மா."

"அத்தை வேறு என்ன சொன்னாங்களாம்?"

"நல்ல மனுஷி. உனக்காக ரொம்ப வருத்தப்படறாங்களாம். வேண்டிக்கிறாங்களாம்."

அவள் அப்பாவிடம் கேட்டாள். "அப்பா... நான் என்ன பண்ணட்டும்? நான் செய்ய வேண்டியதைச் சொல்லுங்கோ."

"பேசாமே, நிம்மதியா இரு. எனக்கு அது மட்டும்தான் வேணும். நீ ஒண்ணும் தப்புப் பண்ணலை. தப்புப் பண்ண முடியாது. நெருப்பைக் கரையான் அரிக்காது."

சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னார்.

"அரவிந்தன் சார், செய்யற பாட்டு, கேசட் முயற்சியில, உன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கோ. பாடு. நிறைய பாடுபடு. உன் துறை அதுதான். உன் அகம் அதுதான். நீ அதுக்காகத்தான் பிறந்தே. நான்தான் முட்டாள்தனமா, உன்னை வேறுவிதமாக நினைச்சுட்டேன்."



**"ஒருவழியா வீட்டைக் கட்டி முடிச்சிட்டீங்க போலிருக்கே...!"**

**"எங்க கட்டி முடிக்கிறது... இப்ப சொசைட்டி கடனையும் வட்டியையும் கட்டிக்கிட்டிருக்கேன்!"**

**– பா. சூர்யா**

பாரதி அமைதி காத்தாள்.

"புனிதவதி, உன்னை மாதிரிதான். மயில் என்கிறார் சேக்கிழார். அந்த மயிலை, ஒரு மாடுகிட்ட கட்டிக் கொடுத்தாங்க. அந்த மனுஷன், மாடு என்கிறார் சேக்கிழார். மயிலும் மாடும் பொருந்துமா? என்னத்துக்கு அந்த ஆள் மாடு? இரண்டு மாம்பழம் கொடுத்தா, ஒன்று தனக்கு, ஒன்று பொண்டாட்டிக்குன்னு நினைச்சானா, இல்லை. இரண்டு மாம்பழமும் திங்கறான்னா, அவன் மாடுதானே? அப்புறம்; கடவுள் வந்து, புருஷனுக்குப் பெண்டாட்டியின் பெருமையை விளக்க வேண்டியிருந்தது. அப்புறமும், அந்த மாடு, அந்த மயிலின் பெருமையைப் புரிஞ்சுக்கிட்டுதா? இல்லையே. தாழ்வு மனப்பான்மை காரணமாக, ஊரை விட்டே போயிடறான். அந்தப் புனிதவதிகள், காலம் தோறும் பிறந்துக்கிட்டே இருக்காங்க. நீ, ஒரு புனிதவதியம்மா. உனக்கு என்ன கவலை? உன் வாழ்வு, வேற தினுசு. அச்சடிக்கப்பட்ட மாதிரி, எல்லோரும் வாழ முடியாது. நான் இருக்கேன். பாடு. பாடு... அது ஒன்றுதான் உன் வாழ்க்கை. எங்கே பாடு..."

அப்பாவை நிமிர்ந்து பார்த்தாள். அப்பாவின் முகம், உக்ர வடிவமாக மாறியிருந்தது. பாரதி திகைத்தாள்.

"அந்தப் புனிதவதியைத்தான் நாம் பேய் என்கிறோம். காரைக்கால் அம்மை என்கிறோம். பேய்ன்னா, தீவிரமானவன் என்று அர்த்தம். எதிலே, ஒருத்தர் தீவிரமா இருந்தா அவருக்குப் பேய்ன்னு பேர் வந்துடும். பேய்ன்னு பேர் வாங்கறது ரொம்ப விசேஷம். நீ பேயா இரு."

பாரதி திகைத்தாள்.

(தொடரும்)

# விமர்சகர் வீராசாமி

**சீதா ரவி**

"சிக்கலை! இதென்ன மியூசிக் ரெவ்யூவா மளிகை சாமான் லிஸ்டா!" புது எடிட்டர் போக்ரன் IIவாக வெடித்தார்.

அப்படியானால் போக்ரன் I...? அந்த முதல் 'எக்ஸ்ப்ளோஷன்' காரணமாகத்தான் அலுவலகம் விழிப்புடன் இருக்கிறது. சடங்கு மாதிரி அடென்டன்ஸில் கையெழுத்துப் போட்டு பீட் சுற்றிவிட்டு வந்து பத்து வரி கிறுக்கித் தரும் கண் துடைப்பெல்லாம் இனி சாத்தியமில்லை. அவனவன் சுறுசுறுப்பாய் இயங்கி கச்சிதமாய் எழுதித் தந்தாக வேண்டும். இல்லாவிட்டால் தயவு தாட்சண்யமின்றி புதிய நிர்வாகம் நடவடிக்கை எடுக்கிறது. இன்டெக்ஸ் டிபார்ட்மெண்ட், ஸ்டோர்ஸ், அப்கிப் என்று சகட்டுமேனிக்கு மாற்றி டுட்டி போடுகிறது. ஏதாவது கேட்டால் சினர்ஜி, டோடல் குவாலிடி மானேஜ்மெண்ட், அது இது என்று சொற்பொழிவு நடத்துகிறது. 'டீம் வொர்க்! எல்லோரும் எல்லாமும் செய்ய வேண்டும்!' என்று அலுவலகம் முழுக்க போஸ்டர்கள்!

அதுவும் புரட்சித் தலைவர் பட்டத்துக்கு எம்.ஜி.ஆருடன் போட்டி போடும் அளவுக்கு இயங்குவது எடிடர் ஏகாம்பரநாதன்தான். 'சினிமா விமர்சனம் பார்க்க கம்பாஸிடரை அழைத்துப் போ... அவர் கருத்தை எழுதச் சொல்லி உன்னுடையதுடன் ஒத்துப் போகிறதா பார்' என்றெல்லாம் படுத்தி எடுக்கிறார்.

டிசம்பர் மாதத்தில் வசமாக அவரிடம் மாட்டிக் கொண்டிருப்பவர்கள் மாண்புமிகு மியூசிக் கிரிடிக்குகள்! கடந்த வருட "விமர்சனங்களை வரவழைத்து அவர் ஒரு பார்வை பார்த்தபோது வெடித்ததுதான் போக்ரன் II.

பேனாவில் மைக்குப் பதில் தேனை விட்டுக் கொண்டு தராதரமின்றி அனைத்து வித்வான்களையும் தங்கள் எழுத்துக்களால் குளிர அபிஷேகம் செய்து வெறுமே பாட்டுகளைப் பட்டியலிட்டு வந்த விமர்சகர்கள் யாவருமே 'ஃப்ரீலான்ஸர்ஸ்' என்று அறிந்ததும் சற்று தணிந்தார் எடிடர்.

"இனி ஒரு பயலையும்கிட்டே விடப் போவதில்லை. பிரபாகர்! அடுத்த சனிக்கிழமைலேருந்து டிசம்பர் முடிய விமர்சனங்கள் வந்தாக வேண்டும். நீதான் பொறுப்பு..."

"சார் எனக்கு கர்நாடிக் மியூசிக்னா அலர்ஜி..."

"ஆர் யூ நாட் அஷேம்ட்?"

"இல்லை சார்! வீட்டுல எங்கக்காவுக்குப் பாட்டு வாத்தியார் கிளாஸ் எடுக்க வந்தார். அப்போ ஏழு வயசிருக்கும் எனக்கு. அன்னிக்கு அவ ஸ-ப-ஸ புடிச்சப்போ ஆரம்பிச்ச அலர்ஜிதான்... இன்னமும் விடலை சார்...."

"உன்னை ஸ்டோரி செக்ஷனுக்குத்தான் மாத்தணும்... சரி நம்ம ஆபீஸ்ல யாருக்கெல்லாம் சங்கீதம் தெரியும்?"

"எல்லாருமே கானா கேப்பாங்க சார் மாலை போட்டுக்கற சீசன்ல ஐயப்பன் காஸெட்ஸ்..."

"கர்நாடிக் மியூசிக்!"

"சார்! அது நம்ம ப்ரூஃப் ரீடர் வீராசாமிக்குப் பிடிச்ச விஷயம். ஸ்போர்ட்ஸ் பேஜை எப்பவும் கரஹரப்ரியா ராகத்துலதான் படிப்பேன்னு டெய்லி மூணு தடவையாவது சொல்லுவார்..."

"தப்பில்லாமல் எழுத வருமா அவனுக்கு?"

"பத்து வருஷமா ப்ரூஃப் ரீடராயிருக்காரே சார்!"

"கூப்பிடு வீராசாமியை..."

ப்ரூஃப் ரீடர் வீராசாமி விமர்சகர் வீ.ரா.சாமியாகப் பரிணாமமற்ற வளர்ச்சி பெற்றது இருந்தான்.

'ஆயுள் முழுக்க ப்ரூஃப் ரீடராகவே இருக்கக்கடவது' என்ற தனது கர்மவினையைக் கேள்வி கேட்காமல் முப்பத்தாறு வயது வரை ஏற்று வந்த வீராசாமிக்கு எடிடரின் முடிவு நிறைய குழப்பம் தந்தது.

"சார், நானா...?" என்று இழுத்தவனை,

"நீயேதான். பயப்படாமல் உண்மையை எழுது. எல்லா நிகழ்ச்சிக்கும் டிக்கெட் வாங்கிக்கிட்டுப் போ. விமர்சனம் எழுத வந்திருக்கேன்னு யார்கிட்டேயும் சொல்லாதே..." என்று ட்ரைனர்ஜிக் இஞ்செக்ஷன் போட்டு அனுப்பி வைத்தார் எடிடர்.

வீ.ரா.சாமி எழுதிய முதல் விமர்சனம் வயலின் வித்தகர் வாஞ்சியின் கச்சேரி குறித்தது. வாஞ்சியின் வாசிப்பைக் காட்டிலும் கொடூரம் ஒன்று உண்டெனில் அது வீராசாமி அவரைக் கிழித்த கிழிதான்!

'உரமேறிய உடலிருந்தால் உழைத்து தோட்டம் வளர்க்கலாம்; அல்லது வளர்த்த தோட்டத்தை துவம்சம் செய்து நாசமாக்கலாம். வாஞ்சியின் கைகளில் உரமிருக்கிறது; அவர் உடலில் சிவப்பணுக்களுக்குப் பதில் ஸரிகமபதநி ஓடுகிறது. ஆனால் என்ன பயன்? கச்சேரியா குருக்ஷேத்திரப் போர்க்களமா என்று புரியாத அளவுக்கு சங்கீதத்துடன் யுத்தம் செய்கிறார். 'உன்னைக் காட்டிலும் நான் பெரியவன் என்று காட்டுகிறேன் பார்!' என்று சதா அவர் சங்கீதத்துடன் போடும் போட்டி ஒரு ஆபாச யுத்தமன்றி வேறென்ன...?'

விமர்சனம் வெளியானதும் வெடித்தது போக்ரன் III! இம்முறை இசையுலகில்!

கச்சம் கட்டிக்



கொண்டு அத்தனை பேரும் அறிய விரும்பியது ஒன்றே ஒன்றுதான் :

'யாரந்த வீ.ரா.சாமி?' விச்வரூபமெடுத்து அலுவலகக் கதவுகளை இந்தக் கேள்வி தட்டிய போது, எடிடர் எல்லோரையும் அடக்கி வைத்தார்.

கேள்விக்குப் பதில் வராது என்று தெரிந்ததும் மெள்ள அவரவரும் வீராசாமியின் விமர்சனத்தை தைரியமாக ஆமோதிக்க ஆரம்பித்தார்கள்.

"யாராயிருந்தா என்ன சார்... எங்க மனசுல இருந்ததை அப்படியே எழுதியிருக்கார்."

– தினமும் நாற்பது போன்கால்களில் இதே பல்லவி.

"உண்மையை எழுதும் வீ.ரா.சாமியை வாழ்த்துகிறோம்" – நூறு கடிதங்கள்.



"எடை ரொம்ப கூடுதலா இருக்கேன்னு கவலைப்பட்டு எடை பார்க்கிற மிஷின்ல மறு தடவை ஏறி நின்னது தப்பாப் போச்சு."

"என்ன ஆச்சு?"

"வீணா என்னை சந்தேகப்படாதே, எடையைக் குறைக்க வழியைப் பாருன்னு கார்டு வந்து விழுது!"

– பர்வதவர்த்தினி

"மிஸ்டர் ஏகாம்பரநாதன்? இஸ் வீராசாமி எ ஃப்ரீலான்ஸர்? எங்களுக்கு விலாசம் வேண்டுமே..." சக பத்திரிகைகளிலிருந்து விசாரிப்பு.

வீ.ரா.சாமி இரவோடிரவாக... இல்லையில்லை, பகலோடு பகலாக ஹீரோவானான் அலுவலகத்தில்.

அடுத்தடுத்து வந்த விமர்சனங்கள் உண்மையைச் சாயம் தோய்க்காமல், தேன் தடவாமல் எடுத்துக் கூறின.

"கலாவதியின் கானடாவில் கற்பனை வளமிருந்த அளவுக்கு உழைப்பு இல்லை. புதிதாக நடக்கக் கற்றுக் கொண்ட குழந்தை போல் குரல் கட்டுப்பாடின்றித் தள்ளாடுகிறது."

"ரமண சர்மா எத்தனை அழகான உருப்படிகளைப் பாடுகிறார்! ஆனால் சுருதி சுத்தத்துக்கும் அவருக்கும் ஜன்மாந்திர பகை போலல்லவாயிருக்கிறது!"

"உத்தமதானபுரம் கோதண்டபாணி உலகத்திலேயே சிறந்த ம்ருதங்க வித்வானாக இருக்கலாம். அதற்காகக் கச்சேரியில் பாதி நேரம் தனியாவர்த்தனத்துக்கு எடுத்துக் கொள்வது உலக மகா மோசடி."

"கல்கத்தா காமினி எதற்காக இப்படி நல்ல குரலைக் கள்ளமாக்கிக் கொள்கிறார். ரோஜாப்பூவுக்கு மேக்-அப் தேவையா?"

நேர்மையும் தெளிவும் கொண்ட வீ.ரா.சாமியின் இந்த ரக விமர்சனங்கள் பழைய மளிகைக் கடை லிஸ்டுகளின் இடத்தைப் பிடித்ததில் எடிடருக்கு எத்தனைக்கெத்தனை மகிழ்ச்சியோ, வித்வான்களுக்கு அத்தனைக்கத்தனை கடுப்பு என்பதைச் சொல்லத் தேவையில்லை.

மூக்கைச் சிந்தியும் கோபப்பட்டும் கேஸ் போடுவேன் என்று மிரட்டியும் அவரவர் குணத்துக்கேற்ப, தகுதிக்கேற்ப அவர்கள் எதிர்த்ததை எடிடர் ஒரு பொருட்டாகவே கொள்ளவில்லை. அட்சதை மொத்தத்தையும் வாங்கிப் போட்டுக் கொண்டாலும் வீராசாமியை மட்டும் அவர் காட்டிக் கொடுக்கவேயில்லை.

சீசன் முடிவதற்குள் வீ.ரா.சாமி விரோத வித்வான்கள் கூட்டமைப்பு ஒன்று உருவாகி விடும் என்று கூடத் தோன்றியது. ஆனால் அப்படியெல்லாம் பட்டவர்த்தனமாய் எதுவும் செய்யாமல், வீராசாமியை மறைமுகமாகத் தாக்கியது அந்த அமானுஷ்ய கூட்டமைப்பு.

**வீ**ராசாமியின் விமர்சனங்கள் வெளிவர ஆரம்பித்து ஒரு வார காலம் ஆகியிருக்கும். அவன் விமர்சித்த வித்வான்கள் எல்லோரும் பிற சபாக்களில் இரண்டாவது ரவுண்ட் பாடிக் கொண்டிருந்தார்கள். சொல்லி வைத்தாற்போல் வீராசாமியின் விமர்சனங்களுக்கு நேர்மாறான விமர்சனங்கள் வெளிவந்தன போட்டி பத்திரிகையில்.

'வயலின் வாஞ்சியின் கச்சேரி முடிவில் அரங்கமே உருகி அழுதது.'

'கலாவதியின் குரல் இழுத்த இழுப்புக்கெல்லாம் ஈடுகொடுக்கிறது. ஒரு நாளைக்கு 32 மணி நேரம் சாதகம் செய்கிறாரோ!'

'ரமண சர்மாவின் தொண்டை

குள்ளேயே டிஜிடல் தம்பூரா இருக்கிறதா என்ன! அப்படியொரு சுருதி சுத்தம்.'

'கோதண்டபாணியின் 56 நிமிட தனியா வர்த்தனம் தன்னிகரில்லா ஆவர்த்தனம்.'

'கல்கத்தா காமினி ரசகுல்லாவை ஊற வைக்கும் ஜீரா குரலில் ஏறி இறங்கும் போது பூலோகமே மறந்து போகிறது...'

வீராசாமி நொந்தும் நடுங்கியும் போனான். அர்ஜுனனைப் போல் தனது ஆயுதங்களைக் கொண்டு வந்து எடிட்டர் மேஜையில் போட்டான்.

"நான் எழுதறதுக்கு என்ன சார் மதிப்பு...? இல்லாததையும் பொல்லாததையும் எழுதித் தந்தா போடறதுக்குப் பத்திரிகை இருக்கறப்போ உண்மையை எழுதி நாம என்னத்தைக் காணப் போறோம்..."

"வீராசாமி! உனக்கென்ன வயசு?" என்றார் எடிடர் அலுங்காமல்.

"நேத்துதான் முப்பத்தாறு ஆச்சு சார்..."

"அதான் இப்படி உலகம் தெரியாம இருக்கே. போறாததுக்கு காலி ப்ரூஃப், கான்டூன், கந்தஞ்சாவடி வீடுன்ற முக்கோணத்துக்குள்ளேயே லாஸ்ட் டென் இயர்ஸா செக்காட்டிக்கிட்டிருக்கே. இதோ பார்! போட்டி பத்திரிகைல எழுதறவங்க அத்தனை பேரும் போன வருஷம் வரைக்கும் நமக்கு எழுதிக்கிட்டிருந்த ஃப்ரீலான்ஸ் புல்லுருவிங்க! சான்ஸ் போன வயித்தெரிச்சலில் பாதியும் சம்பந்தப்பட்ட வித்வான்கள் புலம்பல் தாங்காம மீதியுமா இப்படி எழுதித் தள்றாங்க. நீ ஏன் கவலைப்படறே? நீதான் வீ.ரா.சாமின்னு தெரியாத வரைக்கும் யூ ஆர் சேஃப்."

பேனாவையும் பேடையும் கொடுத்து அடுத்த வார அலவன்சுக்கு வவுச்சரிலும் கையெழுத்துப் போட்டு வீராசாமியை அனுப்பி விட்டார் எடிடர்.

"இந்த மூஞ்சியை யாருக்கு சார் தெரியும்...?" என்றபடி அவனும் ஓரளவு சஞ்சலம் குறைந்து கடமைக்குத் திரும்பினான். ஆனால் அவன் பாதுகாப்புக் கவசம் சீக்கிரமே உடைந்து போய் விட்டது.

**வ**ழக்கம் போல் 21B பிடித்து மயிலாப்பூரில் இறங்கி அரங்குக்கு நடந்து போனவனை கபாலென்று பிடித்துக் கொண்டார் அவன் பத்திரிகையின் மாஜி மியூசிக் கிரிடிக் மார்க்கண்டன்.

"வீராசாமி...!" கான்டசாவின் பின்னிருக்கையிலிருந்து தலையை வெளியே நீட்டிக் கத்தினார்.

தனது விமர்சனங்களைத் தானே ப்ரூஃப் பார்க்கும் சலுகையை முந்தைய ஆசிரியர் அவருக்கு அளித்திருந்ததால் வீராசாமியுடன் நல்ல பரிச்சயம்.

"எங்கே போறே...?"

'மயிலாப்பூர் அகடமி...' என்று பழக்க தோஷத்தில் உண்மை விளம்ப ஆரம்பித்தவன் அவசரமாக அகாடமியை விழுங்கி விட்டு "மயிலாப்பூர் மாடவீதி" என்றான்.

"என்னடா தினாவெட்டா! மாடவீதியில் நடுவுல நின்னுக்கிட்டு மாடவீதிக்குப் போறேன்னா என்ன அர்த்தம்? ஏறு வண்டியில."

வீராசாமியின் கையில் பேனா வேகமாகச் சுழன்றது. அவனை இழுத்து காருக்குள் போட்டுக் கொண்டவர் உரிமையுடன்



"உங்கம்மா ஊரிலிருந்து வந்திருக்கிறார்களே.... என்னவாம்?"

"அப்பாவுடன் சண்டையாம்!"

– ஆர். பிரகாசம்

சட்டை பாக்கெட்டிலிருந்த குறிப்பு நோட்டை எடுத்துப் பார்த்தார்.

"ஓஹோ! அப்பவே நினைச்சேன் நீயாத்தான் இருக்கும் வீ.ரா.சாமின்னு பேருக்கு மாறுவேஷம் போட்டுண்டா ஆயிடுத்தா..! அது சரி, விமர்சனம் எழுத குறிப்பெல்லாம் எதுக்கு...?"

"நிறைய கேட்கறப்போ எல்லாம் சரியா ஞாபகம் வைச்சுக்க வேண்டாமா சார்...?"

"கெட்டுது! குறிப்பு நோட்ல ஆர்டிஸ்ட் போன் நம்பரை எழுதிக்கிட்டா போதாதா? மறுநாள் அவங்களுக்கு போன் பண்ணி என்னென்ன பாடினாங்கன்னு கேட்டுக்க வேண்டியதுதானே..."

திகைத்தான் வீராசாமி. அடுத்து அவர்



சொன்னதைக் கேட்டு அவனுக்கு மயக்கமே வந்தது.

''இப்படி பஸ்ஸுலயும் கிஸ்ஸுலயும் ஏறி வந்து ஏன் கஷ்டப்படறே.. போன் பண்ணா வண்டி அனுப்பறாங்க...''

''யார் சார்...?''

''தெரியாத மாதிரி கேக்கறயே!''

மட்டமான ஹோட்டலில் மூக்கைப் பிடிக்கத் தின்றால் கூட அவ்வளவு குமட்டாது போல் தோன்றியது வீராசாமிக்கு.

சபாவுக்குள் தோளில் கை போட்டு அவனை அழைத்துப் போனார் மார்க்கண்டன். வாசலில் நின்ற புகையிலை, அங்க வஸ்திர, ஜவ்வாது, கடுக்கன் பார்டிகள் மொத்தமாகக் கும்பிட்டு அவரை முதல் வரிசைக்கு அழைக்க, வீராசாமியை அறிமுகம் செய்து வைத்தார். அத்தனை பேர் கண்களும் நெற்றிமேட்டைத் தாண்டி விரிய, அவனைக் கண்டு வணங்குவதா விரோதிப்பதா என்று புரியாமல் திகைத்தார்கள்.

அப்போதுதான் நிகழ்ச்சி முடிந்து வெளிப்பட்ட பெண்ணொருத்தி நடன உடையில் நெருங்கி வந்து, ஒரு மன்னரை வணங்கும் சேடிப் பெண் போல் வளைந்து வணங்கினாள்.

''காலைத் தொட்டுக் கும்பிட்டுக்கோ ப்ரீதி...'' என்று அவள் பின்னாலிருந்த பருமனான அம்மாள் உத்தரவிட, அவசரமாக மார்க்கண்டனின் அழுக்குக் காலருகே குனிந்து தன் தலையில் தொட்டுக் கொண்டது அந்தப் பெண்.

''இவர் வீ.ரா.சாமி. பேப்பர்ல பார்த்திருப்பீங்களே...'' மார்க்கண்டன் அறிமுகப்படுத்த அந்தப் பதினேழு வயதுப் பெண் நெளிந்து குனிந்து வீராசாமியின் பாதங்களை நெருங்கினாள்.

விதிர்விதிர்த்துப் போனான் வீராசாமி.

''நான் அப்புறம் வரேன் சார்...'' என்று மார்க்கண்டனிடம் சொல்லிவிட்டுக் காணாமல் போனான்.

''முதலிரவன்னிக்கு என் பொண்டாட்டி என் கால்ல விழுந்தப்போ கூட திட்டிட்டேன் சார்... அப்படியிருக்கறப்போ

## மறுபடியும் மீனா!

புதிய, வெளியூர் நடிகைகளின் வரவால் நிலைகுலைந்து போயிருந்த மீனாவின் மார்க்கெட் மறுபடி நிமிரும் சூழ்நிலையை, 'உன்னருகே நானிருந்தால்' படத்தில் அவரது பர்ஃபாமென்ஸ் உருவாக்கியிருக்கிறது. ''இன்னும் ஒரே மாசம். விக்ரமனோட 'வானத்தைப் போல' வரட்டும். மறுபடியும் மீனாதான் நம்பர் ஒண்ணு'' என்கிறார் ஒரு விவரமறிந்த பி.ஆர்.ஓ.

மேலுள்ள படத்தில் மீனா அணிந்திருக்கும் புடைவை டிஸைனை நன்கு கவனித்துக் கொள்ளவும். பொங்கல் *சீஸனில்* இதேபோல் சில ரகங்கள் மார்க்கெட்டில் குவியவிருக்கிறது.

(படம்: வானத்தைப் போல)

ஒரு அந்நியப் பொண்ணு... சோறு வைச்சா வந்து காக்கா கொத்தற மாதிரி லபக்குன்னு கால்ல விழுது... இத்தனைக்கும் நாம டான்ஸ் விமர்சனமே போடறதில்லே... என்ன கண்றாவி இது... வேணாம் சார்! என்னை வுட்டுருங்க..."

"பி காம் வீராசாமி...."

"காமாவது ஓமாவது. விஷயம் ஊரெல்லாம் பரவிப் போச்சு. இன்னிக்கு காலைல ஒரு போன் வருது... 'வீராசாமி சார்! நான் வித்வான் கிருஷ்ணசந்திரன் பேசறேன். உங்க விமர்சனம் பிரமாதமாயிருக்கு. நீங்க என்னைப் பத்தி எழுத வேண்டாம். ஆனா அந்த வீணை விஸ்வநாதன் இருக்கானே அவன் வாசிப்பைக் கேட்டுட்டு கிழியுங்க போதும்...'ன்னு ஒரு ரிக்வெஸ்ட்! ஏன் சார்... கனிவு கொடுக்கும் நல்ல பாட்டுன்னு எழுதிட்டுப் போனாரே... பாரதியார் அது பொய்தானே...?"

"இதோ பார் வீராசாமி! எனக்கு மியூசிக் பத்தி ஒண்ணும் தெரியாது. மத்த பேப்பர்ல இருக்கற எடிடர்சும் அப்படித்தான். ஆனா என் பேப்பர்ல உண்மை வரணும். அது படிக்கறவனுக்கு சுவாரஸ்யமாவும் இருக்கணும்னு நினைக்கறேன். மத்தவங்களும் அப்படி நினைச்சா யாரும் யாரையும் விலைக்கு வாங்கவோ விக்கவோ முடியாது... இப்போ ஏன் இப்படி கலங்கறே. டிசம்பர்ல கடைசி ஒரு வாரம் விமர்சனம் வரலைன்னா பரவாயில்லை. நீ பழையபடி ப்ரூஃப் படிக்கப் போ..."

ஒரு நல்ல கச்சேரியைக் கேட்ட சந்தோஷத்துடன் எழுந்து ப்ரூஃப் திருத்தப் போனான் வீராசாமி.



## சிக்கிம்மில் 'ஜேம்ஸ் பாண்ட்'!

படத்தை உற்றுப் பார்த்தால் பிரபுதேவா ஒரு மலையுச்சியில் நின்றிருப்பது தெரியும். பிரபு தேவா தொடர்பாக விசேஷச் செய்தி ஏதுமில்லையென்றாலும் அந்த மலை தொடர்பாக ஒரு சமாசாரம் உள்ளது.

சிக்கிம் மாநிலத்தில் உள்ள கேங்டாக் என்கிற இடத்திலுள்ள மலையுச்சி இது. பதினான்காயிரம் அடி உயரத்திலிருக்கும் இப்பிரதேசத்திலுள்ள ராணுவமுகாம்தான், உலகிலேயே மிக உயரமான இடத்திலுள்ள ராணுவக் கேந்திரம்.

பனி மூடிய இப்பிரதேசத்தில் நுழைவதே கஷ்டம். சிறப்பு அனுமதியின் பேரில் இங்கு பிரபுதேவாவும் ரேணுவும் போஸ் கொடுப்பது 'ஜேம்ஸ் பாண்ட்' படத்துக்காக.

## கொலையுதிர் காலம்

**வெ**ர்ஸோவாவில் ஓர் இளம் தம்பதியை அவர்கள் வீட்டிலேயே, இரும்புத் தடியாலடித்து, உடம்பெல்லாம் குத்திக் காயப்படுத்தி தீர்த்துக் கட்டினார்கள். ஒரு நடுத்தர வயதுப் பெண்மணியின் தீய்ந்த உடல் காந்திவிலியில் வீசப்பட்டிருந்தது. சிவசேனை 'ஷாகா பிரமுக்' விவேக் கேல்கர், குண்டடிபட்டு, அந்தேரியில் குற்றுயிரும் குலையுயிருமாகப் போராடி மாண்டார். ப்ரீச் கேண்டியில், ஒரு வயதானவரை வெட்டிச் சாய்த்திருக்கிறார்கள். இவையாவது சொத்துத் தகராறு, அரசியல், பணத்திருட்டு போன்ற காரணங்களுக்காகச் செய்யப்பட்டவை; குர்லாவில் தன் தாத்தாவையே ஒரு 28 வயதுப் பேரன் கத்தியால் குத்திக் கொன்றதுதான் நம்ப முடியாத அவலம். தாத்தா செய்த குற்றம் - குப்பையாய் இருந்த அறையை, பேரனிடம் சுத்தம் செய்யச் சொன்னது! 'தொணதொணப்பு தாங்கவில்லை' -என்று தீர்த்துக் கட்டி விட்டானாம்! 'ஸன் மூவி' ஸ்டைலில், ''கொலைகள் வா...ஆ...ரம்'' என்று அறிவிக்க வேண்டியதுதான் மிச்சம்!

## புரியாத புதிர்கள்

**கா**ரட்டும் பீட்ரூட்டும் விலை ஏறி விடுமோ என திடுமென்று பயம் வந்து விட்டது! தனது எடை, இடை, தொடை அளவுகளைக் குறைக்க - ஐந்தே வாரங்களில் முறையே 4 கிலோ, மூன்றங்குலம், இரண்டரை அங்குலங்கள் - யுக்தா முகி என்ன செய்தார் என்பதை பத்திரிகைகளெல்லாம் விலாவாரியாக விவரித்தனவா, 'டயட் ஃபூட்'களுக்கும், டயட்டீஷியன்களுக்கும் எக்கச்சக்க கிராக்கி! இதே கதைதான் 'காஸ்மெடிக்'ஸ்-க்களுக்கும். குடிசைப் பகுதிகளில் கூட ப்யூட்டி பார்லர்கள் முளைத்து விட்டன! முலுண்டு அழகியின் சாதனையைப் பற்றி ஊரெல்லாம் பேச்சாயிருக்க, மற்றொரு முலுண்டு சாதனையாளர் பற்றிப் பேச்சு மூச்சே காணோம்; பாவம், பி.ஜே.பி.யின் கிரீத் சோமையா எம்.பி.யாகிய உடனேயே புதிய சரித்திரம் படைத்திருக்கிறார் - லோக் சபையின் ஒரே ''ஸிட்டிங்''கில் நாலு 'பில்'களை ஒருசேர அறிமுகப்படுத்தியிருக்கிறார்! சோமையாவின் வெற்றி பற்றி பத்திரிகைகளெல்லாம் ஊமையாகவே இருப்பது புரியாத புதிர்தான். சில விஷயங்களே அப்படித்தான் - உலக அழகிப் போட்டியின் டீ.வி.



ஒளிபரப்பை ஸ்பான்சர் செய்தது யார்? 'குவர் அஜய்' புடைவைகள்! புடைவைக்கும் அழகிப் போட்டிக்கும் என்ன சம்பந்தம்? புரியவில்லையே...?

## டிசம்பர் பூக்கள்

மகாராஷ்டிரத்தைப் பொறுத்தவரை, டிசம்பர் மாதத்துக்கு ஒரு தனி மவுசுதான்; அதை ஆட்டிப் படைப்பவர்களெல்லாம் அந்த மாதத்தில்தானே பிறந்திருக்கிறார்கள்?

டிச. 12ல் பிறந்த பவாரின் பிறந்த நாளை NCPகாரர்கள் 'சுயமரியாதை தின்'மாகக் கொண்டாடினார்கள். NCP வேர்களை ஸ்திரப்படுத்தி, பவாருக்கு ஒரு மரியாதை சேர்ப்பதற்கென இந்த சுயமரியாதைக் கொண்டாட்டங்கள். சும்மா இருப்பார்களா காங்கிரஸ்காரர்கள்? அவர்களின் இதய தெய்வம் சோனியாவின் பிறந்த நாளை (டிச.9) இரத்ததான தினமாக்கி விட்டார்கள். நேரு குடும்பம் நமக்கென்று இரத்தம் சிந்தியதன் எதிரொலிதானாம் இந்த இரத்தத்தின் இரத்தங்களின் கொண்டாட்ட ஸ்டைல்! பி.ஜே.பிகாரர்களுக்குக் கைகொடுக்கவென்றே டிசம்பரில் (12) அவதரித்தவரன்றோ கோபிநாத் முண்டே? நாக்பூர் செஷனுக்காக குழுமியிருக்கும் எம்.எல்.ஏக்களின் மத்தியில், அவர் தமது பிறந்த நாளைக் கொண்டாடி பி.ஜே.பியை தனிக்கட்சியாகவே இங்கே இயங்குமளவுக்கு பலப்படுத்த முயல்வார். சிவசேனைக்காரரும், யூனியன் மினிஸ்டருமான மனோகர் ஜோஷிதான், டிச.2ம் தேதி தன் பிறந்த நாளை காதும் காதும் வைத்தது போல் இரகசியமாகக் கொண்டாடி விட்டார். முன்னாள் முதல்வராக இருந்த போது, படாடோபமாகக் கொண்டாடி விட்டு, பரிசெல்லாம் வாங்கிக் கொண்டு தவித்தது நினைவில்லாமலிருக்குமா?



• சுயமரியாதைக்காரர்

## கண்ணீர் பலவிதம்

நம்பத்தான் முடியவில்லை; மத்தியில் ஒரு அரசையே கவிழ்த்த வெங்காயம், இன்று மூலை முடுக்குகளிலெல்லாம் சிரிப்பாய்ச் சிரிக்கிறது; கிலோ 5 ரூபாய் 4 ரூபாய் என்றெல்லாம் வெங்காயம் விற்று எத்தனை மாமாங்கமாகி விட்டது? ஆசையோடு வெங்காயத்தை அள்ளிக் கொண்டு வந்து, தோலுரித்து நறுக்கிய போது... கண்களிலிருந்து வடிந்தது ஆனந்தக் கண்ணீர்!

இதையும் நம்பத்தான் முடியவில்லை: தமிழ் டிராமா என்றாலே, அசட்டுப்பிசட்டு 'ஜோக்குகளுக்கு கெக்கே பிக்கே என்று சிரிக்க வேண்டிய விதி நிர்ணயிக்கப்பட்டு விட்ட வேளையில்... காளிதாஸ் ஹாலில் வரதராஜன் குழுவினர் (யுனைடெட் விஷுவல்ஸ்) போட்ட 'மற்றும் பலர்' நாடகத்தின் போது, அரங்கத்தில் அவ்வப்போது விசும்பல்கள், கண் துடைப்புகள்.... ச்சொ... ச்சொ... ஒரே டச்சிங்தான் போங்கள்; 'இலவச இணைப்பாக' கர்சீஃப் வழங்கியிருக்கலாம்!

## 'படை'யப்பா!

அண்மையில் ஒரு மும்பை தினசரி, இன்டர்நெட்டில் பிடித்த சுவையான செய்தியை வெளியிட்டிருந்தது. அதை நீங்களும் கொஞ்சம் சுவைக்க வேண்டாமா? 19.11.1999 தான் நம் வாழ்நாளின் கடைசி, ஒற்றைப் படை எண்களைக் கொண்ட தினம்! (ஒவ்வொன்றும் ஒற்றைப் படை நம்பர்தான்) அடுத்த ஒற்றைப் படை எண்கள் கொண்ட தினம் 1.3.3111தான்! அடுத்த இரட்டைப் படை எண்கள் கொண்ட தினம் 2.2.2000; இதற்கு முன், கடைசியாக எல்லாம் இரட்டைப் படை எண்களாக வந்த தினம் எது தெரியுமா? 28.8.888!

— ஜெயஸ்ரீ ராஜ்

## காதில் விழுந்தவை



# எம்.எம்.டி.ஏ. ஏன் இப்படிச் செய்கிறது?

● அரசு இயந்திரத்திலுள்ள ஓட்டைகளை அடைத்து விட்டு வருவாயைப் பெருக்க முதல்வர் கலைஞர் சுறுசுறுப்பாக நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டு வரும் இந்தக் கால கட்டத்தில், யதார்த்தத்துக்கு சற்றும் பொருந்தாத ஆணைகளைப் போட்டு முதல்வரின் செயல் திட்டங்களுக்கு ஸ்பீட் பிரேக்கர் போட்டு வருகிறது எம்.எம்.டி.ஏ! அங்கீகாரம் பெற்ற வரைபடத்திற்கேற்ப வீடோ அடுக்கு மாடித் தொகுப்புகளோ கட்டாதவர்கள், குறிப்பிட்ட பணம் செலுத்தி, தங்களது கட்டுமானத்தை முறைப்படுத்திக் கொள்ளலாம் என்று சென்ற மார்ச்சில் ஓர் ஆணை பிறப்பித்தார்கள். சுமார் 800 கோடி ரூபாய் வருவாயை எதிர்பார்த்துப் போடப்பட்ட ஆணை இது. ஆனால் இந்தப் பத்து மாத காலத்தில் வசூலான தொகை அறுபது லட்ச ரூபாய்தான். இதே போன்று ஓர் ஆர்டரை போட்டு ஆந்திர மாநிலத்து நாயுடுகாரு ஐதராபாத் நகரத்தில் வசூலித்த தொகை 500 கோடி! தலைநகர் டில்லியில் 400 கோடி. தமிழகத்தில் என்ன கோளாறு? "எந்த ஒரு அபராதத் தொகைக்கும் ஓர் அளவு உண்டு. பிளான் அங்கீகாரம் பெற செலுத்தும் கட்டணத்தை விட ஆயிரம் மடங்கு அதிகமாக அநியாயக் கட்டணம் செலுத்தி, கட்டுமானத்தை முறைப்படுத்தச் சொன்னது எம்.எம்.டி.ஏ. அவர்கள் சொல்கிறபடி செய்தால் தலையில் துணியைப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான். அது மட்டுமல்லாமல் கட்டணமும் செலுத்தி, அரசிடமும் அனுமதி(?) பெற வேண்டுமாம். இது எதற்காக? சொல்ல வேண்டிய அவசியமல்ல; தெள்ளத் தெளிவு!

● "அம்மா ஆட்சியைப் பற்றி மக்களுக்கு வெறுப்பு ஏற்படக் காரணம், ஊழல் மட்டுமல்ல, ஆணவத்துடன் கூடிய அதிகாரம்தான்" என்று நம்மிடம் சொன்ன அரசு உயர் அதிகாரி ஒருவர், ஒரு சம்பவத்தையும் சொன்னார். "அந்த அ.தி.மு.க. அமைச்சருக்குச் சொந்த ஊர் நாகர்கோயில் பக்கம். அந்த ஊரிலிருந்து தினசரி ஆறு மணிக்கு சென்னைக்குப் பஸ் கிளம்பும். அந்த ஆறு மணி பஸ்ஸில், தினசரி ஒரு பெரிய எவர்சில்வர் தூக்கில் அன்று பிடித்த அயிரை மீன்கள் உயிரோடு சென்னைக்கு அனுப்பப்படும். ஓட்டுநரின் பக்கத்தில் பத்திரமாக வைத்து எடுத்து வரப்படும் இந்தத் தூக்கை மறுநாள் காலை அமைச்சரின் உதவியாளர் சென்னையில் பெற்றுக் கொள்வார். தினசரி மருமகன் அயிரை மீன் சாப்பிட வேண்டுமென்று மாமனார் செய்த ஏற்பாடு இது. ஒரு நாள் அந்த ரூட்டில் புது ஓட்டுநர் போடப்பட்டார். அன்று பார்த்து அயிரை மீன் வர லேட்டாகி விட்டது. சரியான நேரத்துக்கு பஸ்ஸை எடுத்துக்கொண்டு சென்னைக்குக் கிளம்பி விட்டார் அந்த ஓட்டுநர். "உனக்கு இவ்வளவு அகம்பாவமா" என்று மாமனார் வெகுண்டார். தொலைபேசிகள் சென்னைக்குப் பறந்தன. மறுநாள் காலை சென்னையில் இறங்கும்போது அந்த ஓட்டுநருக்குக் கொடுக்கப்பட்டது சஸ்பென்ஷன் ஆர்டர். எதன் அடிப்படையில்? பொதுமக்களிடம் முறைகேடாக நடந்து கொண்டாராம்! இது போன்ற பல விஷயங்கள் இருக்கின்றன" என்றார் அந்த அதிகாரி.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)







# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை—63.

போன் : **2376129**

## ஒரிசா மாநில புயல் நிவாரணப் பணி

'பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவுங்கள்'

அன்புள்ளம் கொண்டோரே!

கடந்த ஒரு மாத காலமாக ஒரிசா மாநிலப் பகுதியில் வீசிய கடும் புயலால் மிகவும் அதிகமாக பாதிக்கப்பட்ட பகுதியான ஜெகத்சிங்பூர் மாவட்டத்தில் : பலிகுடா வட்டத்தில் பதினைந்து கிராமங்களில் "ஸ்ரீசாரதா சக்தி பீடம்" நிவாரணப்பணிகளை மேற்கொண்டு வருகின்றது.

இதுவரை 2040 குடும்பங்களுக்கு மிக அத்தியாவசிய தேவையான அரிசி, போர்வைகள், சேலை, வேஸ்டி ரெடிமேட் ஆடைகள், கூறைமேல் போடுவதற்கு பாலீத்தீன் ஷீட்டுகள் மற்றும் நான்கு டன் பழைய துணிகளும் அனைவருக்கும் முறையாக, நேரிடையாக வழங்கப்பட்டன. இது வரை நிவாரணப்பணிக்காக **7.50** லட்சம் ரூபாய் நன்கொடையாக பெற்று செலவழிக்கப்பட்டுள்ளது.

உதவிக்காக காத்து இருப்போர்,
பசியால் வாடிக்கொண்டிருப்போர், பல்லாயிரக் கணக்கில்.
கருணை உள்ளம் படைத்த இதயங்களை நாடுகின்றோம்.
வாரீர் ! வாரி வழங்குவீர் ! பசியால் வாடும்
உள்ளங்களை காப்பாற்றுவோம். வாரீர்!

குறிப்பு : நன்கொடை செக்/ டிடி/ மணியாடர்கள் "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு அனுப்பிவைக்கவும்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
மேனேஜிங் டிரஸ்டி

